# மணமகளின் (ந)கை அலங்காரம் 916 தங்கம்





**சாமுத்ர வர்ணா**
நவீன வடிவில் தங்கத்தில் மரகதக் கற்களைச் சேர்த்து செய்யப்பட்ட அழகிய வளையல்



**ஐஸ்வர்யா**
தங்கத்தில் செய்யப்பட்ட பெங்காலி வடிவ வளையல். ஓரங்களில் தங்கத்தால் ஆன சிறுமணிகளும் கோர்க்கப்பட்டிருக்கும்.



**ஆபூஷணம்**
உள்ளே வைரங்கள் கோர்க்கப்பட்ட எளிமையான வடிவங்களை கொண்டது ஆனால் மிகவும் அழகானது.



**சந்தூஷ்டி**
பெங்காலி வடிவ அழகிய வளையல் இது தங்கத்தில் வேலைப்பாடுகள் செய்யப்பட்டு உருவாக்கப்பட்டது.

*மாப்பிள்ளையைப் புறக்கணித்து*
*கல்யாண வளையல்களைக்*
*படம் பிடித்திருக்கும் காட்சி*

பிரின்ஸ் வழங்கும் 916 முகூர்த்தம் கலெக்ஷன்'
(சுத்தத்துக்கான அனைத்துலக தர அளவு)
22 காரட் தங்கத்தில் உருவானவை.
ஏராளமான பாரம்பரிய மற்றும்
நவநாகரிக டிசைன்களிலிருந்து
தேர்ந்தெடுங்கள் ஒன்றொன்றுடனும்
100% உத்தரவாதம் உண்டு.

**PRINCE®**
**JEWELLERY**

13, நாகேஸ்வர ராவ் ரோடு, பனகல் பார்க், தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 434 6783, 434 7493, 436 3137, 436 3138. ஃபேக்ஸ் : 433 6998.
E-mail: jose@md3.vsnl.net.in (ஷோரூம் சென்னையில் மட்டுமே உள்ளது)

# மங்கையர் மலர்

## செப்டம்பர் '99

### வெற்றிப் பாதையில்....




மலர்: 19 இதழ்: 8


### இன்னும் நிறைய 'வெற்றிக் கதைகள்' அங்கங்கு...

**கல்லூரி வாசலில்...**



**சமைத்துப் பார்ப்போம்**



**பிரார்த்தனை**



**கொஞ்சம் யோசிக்க...**





### அழகு!



### நலமாக இருக்க....



### ஆசிரியரின்....



### கதைகள்



### நூற்றாண்டு கண்ட...



### நீங்கள் விரும்பிப் படிக்கும் –



# அனைவருக்கும் இலவசம் !

## 420 ரூபாய் மதிப்புள்ள சிறப்பான இங்கிலீஷ் கோர்ஸ்

### எங்கள் நிறுவனத்தின் விளம்பரத்திற்காக...

**மொத்தம் மூன்று டிவிஷன்களில் பிரத்தியேக இங்கிலீஷ் கோர்ஸ் !**

| டிவிஷன் - 1 | டிவிஷன் - 2 | டிவிஷன் - 3 | இவை யனைத்தும் | ஃப்ரீ ! |
|---|---|---|---|---|
| ரூ. 110 | ரூ. 140 | ரூ. 170 | | |

**டிவிஷன்-1** (பேசிக இங்கிலீஷ் கோர்ஸ்) ABCD மூலமாக ஆங்கிலம் கற்பிக்கப்படுகிறது ஆங்கிலம் சிறிதும் தெரியாதவர்கள் கூட இந்த கோர்ஸ் மூலம் ஆரம்பநிலை இங்கிலீஷ் கற்க முடியும். ஆசிரியர் உங்கள் முன் நின்று கற்றுத் தருவது போன்ற அனுபவத்தை உருவாக்குகிறது. இந்த கோர்சின் விலை ரூ.110/-

**டிவிஷன்-2** (இங்கிலீஷ் கிராமர் கோர்ஸ்) எந்த மொழியானாலும் அதன் உயிர் இலக்கணமாகும். இலக்கணமற்ற மொழி உயிரற்ற மொழி போன்றதாகும். மொழிக்கு கம்பீரத்தை அளிப்பது இலக்கணம் தான். அதுபோன்ற முக்கியமான இலக்கணத்தை தவறுகள் ஏதுமின்றி சுலபமுறையில் நீங்கள் கற்று மற்றவர்களுக்கும் கற்பிக்குமாறு உங்களை உருவாக்குகிறது. இந்த கோர்சின் விலை ரூ.140/-

**டிவிஷன்-3** (இங்கிலீஷ் ரைட்டிங் & ஸ்பீக்கிங் கோர்ஸ்) சுலபமாக ஆங்கிலம் எழுத மற்றும் பேச கற்றுத் தரும் ஈஸி இங்கிலீஷ் கோர்ஸ். தடுமாறாமல் பேச மற்றும் தவறுகள் இல்லாமல் உங்கள் எண்ணங்களை ஆங்கிலத்தில் வெளிப்படுத்த இது மிகவும் உத்தமமான கோர்ஸ். இந்த கோர்ஸ் மூலமாக நீங்கள் மிகவும் சரளமாக ஆங்கிலம் எழுதவும் பேசவும் முடியும். இந்த கோர்சின் விலை ரூ.170/-

**அட்வான்ஸ்டு கம்ப்யூட்டர் டெக்னாலஜி மூலமாக தயாரிக்கப்பட்ட ஸ்பெஷல் கோர்ஸ்**



## இலவசமாக கோர்ஸை இவ்வாறு பெற்றுக்கொள்ளவும்

- இந்த பத்திரிகையிலுள்ள கூப்பனில் உங்களுடைய விவரங்களை எழுதி அனுப்ப வேண்டும்
- ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளில் எழுதி அனுப்பினால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை
- ஒரு கோர்ஸை இலவசமாக பெற ஒரு கூப்பனை கட்டாயமாக அனுப்ப வேண்டும்
- கவரின் மீது ரூ.3 மதிப்புள்ள தற்பொழுதைய ஸ்டாம்பை ஒட்டி அனுப்பவேண்டும்.
- கூப்பனில் உள்ள நிபந்தனைகளின் படி இந்த ஃப்ரீ கோர்ஸ் அளிக்கப்படும்.
- கோர்ஸ் முற்றிலும் இலவசம். ஆனால் இதை பெற்றுக் கொள்வதற்கு உண்டான செலவுகளை நீங்களே ஏற்றுக் கொள்ளவேண்டும்
- இந்த ஃப்ரீ கோர்ஸை உங்களுக்கு அனுப்புவதில் ஏதேனும் தடங்கல் ஏற்பட்டால், கோர்ஸ் அனுப்புவதில் முடிவு எங்களையே சாரும்
- இந்த விஷயத்தைக் குறித்து எந்த விதமான கடிதப் போக்குவரத்திற்கும் இடமில்லை

**இக்கூப்பனை பூர்த்தி செய்து தாமதமின்றி உடனே அனுப்பவும்**

# STUDENTS' ENGLISH INSTITUTE

520

P.B.No. 8569, 15/1, Parthasarathipuram Extn. T.Nagar, Chennai - 600 017

எனக்கு 420 ரூ. மதிப்புள்ள ஸ்டுடெண்ட்ஸ் இங்கிலீஷ் இன்ஸ்டிட்யூட் அவர்களின் டிவிஷன் 1,2,3 சிம்பிள் இங்கிலீஷ் கோர்ஸ் பேக்கேஜை இலவசமாக அனுப்பித் தரவும் தபால் செலவுகள், பேக்கேஜிங் ஃபார்வார்டிங் செலவுகள் & அட்வர்டைசிங் மெயின்ட்டெனென்ஸ் செலவுகள் நிமித்தம் ரூ.100ஐ தபால்காரரிடம் தந்து எனது ஃப்ரீ ஸ்டுடெண்ட்ஸ் இங்கிலீஷ் கோர்ஸ் பாக்கெட்டை பெற்றுக் கொள்கிறேன் என உறுதியளிக்கிறேன். இந்த ஃப்ரீ கோர்ஸ் வாய்ப்பையளித்த உங்களுக்கு நன்றி.

(உங்களின் விலாசத்தை நன்கு புரியும் படியாக, ஆங்கிலத்தில் எழுதவும். இல்லாவிடில் கோர்சை அனுப்பித்தர முடியாது)

NAME ..............................................................................

ADDRESS ..............................................................................

..............................................................................PIN CODE | | | | | | |

**ஸ்கூல் ஆபீஸ் அவசரமா!   திடீர் விருந்தினரா!   கேஸ் இல்லையா!**

# கவலை வேண்டாம்

அறிமுகம்
முதன் முறையாக
இந்தியாவில்




**chefmaster**

# Electric TAWA

மின்சாரத்தில் இயங்கும் ஒரு அற்புதம்! (மின்சார தோசைக்கல்)




சப்பாத்தி ரோல்


ஆம்லெட்


பொரியல்

உறுதியான அலுமினியத்தால் Diecast செய்யப்பட்ட தாவா ● இறக்குமதி செய்யப்பட்ட Thermostat - உங்களுக்கு வேண்டிய சூட்டை பெற்றிட ● ஒரிஜனல் 'Teflon' Non-Stick Coating ● உறுதியான பிளாஸ்டிக் Outer Cover - தாவாவை எளிதாக வெளியில் எடுத்து கழுவலாம். ● Stainless Steel மேல் மூடியுடன். ● குறைந்த மின்சார செலவில் ஆரோக்கியமான சமையல்

**இலவசம்** திருமதி. மல்லிகா பத்ரிநாத் எழுதிய - 50 Electric Tawa Recepie Book
(ஒவ்வொரு எலக்ட்ரிக் தவாவுடன்)

Manufactured by: **PREMIER MACHINE TOOLS**

Regd. Office : 84-A, Vinayakar Street, Sivananda Colony, Coimbatore - 641 012. India.
Ph : 91-422-496833, Fax : 91-422-499389. E.mail : chefmstr@vsnl.com
Web Address : www.chefmasterindia.com

● CHENNAI : Sha Taraji Ramlal & Sons, Ph : 5270249 ● COIMBATORE : Hi-Tech Engineers Ph : 446231
● TRICHY : Mangal & Mangal, Ph : 702755, 702360 ● SALEM : Sri Krishna(Shriram Shop), Ph : 414488
● MADURAI : Bagavathi Agencies, Ph : 628081, 629696 ● NAMAKKAL : Poomagal Agencies, Ph : 31383
● THENI : Vasantham Agencies, Ph : 73528 ● PONDY : Devi Agency, Ph : 220236

விநியோக விற்பனையாளர்கள் வரவேற்கப்படுகின்றனர்   FAX : 0422 - 499389



நம்முடைய புராண இதிகாசங்களையெல்லாம் வெறும் கதைகள், 'கவைக்கு' உதவாதவை எனத் தள்ளி ஒரு தலைமுறைக்கு மேலாகி விட்டது.

இராமாயணமா... எனக்குத் தெரியுமே கதை, இராமன் பெண்டாட்டிய இராவணன் தூக்கிண்டு போனான் இத்யாதிகள். மகாபாரதமா... இன்னும் நல்லாவே தெரியும். பாண்டவர்கள், துரியோதனன், கிருஷ்ணன் எக்ஸ்ட்ரா.. இராமாயண, மகாபாரதம் கதை தெரியாதவர்கள் உண்டோ... அதுதான் டீ.வியில கூட சக்கை போடு போட்டு, இப்போது 'ஆக்ஷன் ரீ-ப்ளே' மாதிரி மற்ற சானல்களுக்கும் தாவிட்டதே!

எதற்கு இதெல்லாம், திடீரென்று இராமாயண மகாபாரதம் எடுத்து வைத்துக் கொண்டு என யோசிக்கிறீர்கள்? விஷயம் இருக்கிறது.

நமக்கு ஒரு பக்கக் கதை படிக்கும் காலமிது.

# பொன்னும், மணியும் கொட்டிக் கிடக்கின்றன!

அதற்கு மேல் படிக்க நேரமில்லை எனச் சொல்லிக் கொள்கிறோம். ஒரு பக்கத்துக்குள்ளேயே திகில், கோபம், ஆச்சர்யம், காதல் எல்லாம் வர வேண்டும். பாவம், எழுத்தாளர்களும் வரவழைத்து விடுகிறார்கள். அவர்கள் மட்டும் என்ன செய்ய முடியும்? அதைப் படித்து முடித்து விட்டு அப்புறம் 'இன்டர்னெட்' மேய்ந்துவிட்டு, கொஞ்சம் பேப்பரில் அரசியல், ஆபீஸ், டீ.வி. இத்யாதி...

வாழ்க்கை இப்படியே சுமுகமாக ஓடிவிட்டால் தேவலை. ஓடுவதில்லை, அதுதானே விஷயம்? நிறைய சிக்கல்கள் வருகிறது. மனோ ரீதியாக, உடல் ரீதியாக, குடும்ப, சமூக ரீதியாக... எத்தனை.... எத்தனையோ... அதெல்லாம் பற்றி நிறைய இந்தப் பகுதியிலேயே பார்த்து விட்டோம்.

மேலோட்டமாக வாழ்க்கையை வாழப் பழகிவிட்ட நமக்கு இதையெல்லாம் எப்படிக் கையாளுவது என் பதில்தான் பெரும் சிக்கல். உடல் உழைப்பு இல்லாததால் வாயில் நுழையாத பெயருடன் உடலில் நோய் தலைகாட்டுகிறது. நாகரீகமாக வாழ்ந்து விட்டதால் குடும்ப உறவுகளில் பிரச்னைகள்... இன்னும் எத்தனையோ...

விதம் விதமாகக் கேள்வி கேட்கும் குழந்தைகளை வைத்துக் கொண்டு விழிக்கிறோம். இவர்களை எப்படிக் கையாளுவது என்று தெரியவில்லை. மருமகள் "நான் வேலைக்குப் போவது என் தனி மனித உரிமை" என்கிறார். மாமியார் "இன்னும் ஒரு தடவை குழந்தை வளர்ப்பா? முடியாதம்மா. நான் நிம்மதியாக தனிக் குடித்தனம் போகிறேன். அது என்

**மஞ்சுளா ரமேஷ்**



தனிப்பட்ட உரிமை" என்கிறார். இன்னும் நிறைய இப்படிக் குளறுபடிகள்.

சிக்கலோ சிக்கல். பத்து விரல்களிலும் சிக்கல் மாட்டிக் கொண்டு நூல்கண்டை 'கன்னா பின்னா'வென்று இழுத்து... ஏன் கேட்கிறீர்கள் இந்தக் கூத்தை!

வாழ்க்கையை எப்படிச் செலுத்துவது என்றே தெரியவில்லை. எல்லோரும் நல்லவர்கள்தான். அவரவர்களால் முடிந்த அளவு நல்லது செய்து கொண்டு, யார் ஜோலிக்கும் போகாமல் நிம்மதியாக வாழத்தான் எல்லோரும் விரும்புகிறார்கள். ஆனாலும் இன்றைய 'நவீன விஞ்ஞான கம்ப்யூட்டர் யுக' வாழ்க்கையில் 'கிராஃபிக்ஸ்' மாதிரி வித விதமான கோலத்துடன் வந்து நிற்கும் பிரச்னைகள் என்ன செய்வது, எப்படி நடந்து கொள்வது என்றுதான் தெரியவில்லை.

இன்றைக்கு நிறைய பேர் 'ஆலோசனை' வழங்குகிறார்கள். 'கௌன்சிலிங்' செய்து தங்களால் இயன்ற அளவு மற்றவர்களின் சிக்கல்களுக்கு ஆலோசனை வழங்குகிறார்கள். மனோதத்துவ நிபுணர்கள் பத்திரிகைகளிலும் இன்று ஆலோசனைகள் வழங்குகிறார்கள்.

சரி, இப்போது இராமாயண மகாபாரதத்திற்கு வருவோமா? கதை மட்டுமே தெரியும் நமக்கு. இன்னும் கொஞ்சம் தெரியும் இலக்கிய ஆர்வம் மிகுந்தவர்களுக்கு. பரீட்சைக்குப் படிக்க லிட்ரேச்சர் மாணவர்கள் நெட்டுரு போட்டிருப்பார்கள்.

ஆனால் ஒரு வரியில் நாம் சொல்லிவிடும் கதையையா பல்லாயிரக்கணக்கான ஸ்லோகங்கள், பாடல்களாக அந்த மகாகவிகள் சொல்லியிருப்பார்கள்? 'சரியான போர்' என்று தூக்கிப் போட்டு விடக் கூடியவையா அவைகள்? கதையைத் தவிர அப்படி என்னதான் இருக்கிறது அந்த பல்லாயிரக்கணக்கான பாடல்களில்?

இருக்கிறது, உங்கள் வாழ்க்கையும், என் வாழ்க்கையும் கூட அதில் இருக்கிறது! வனவாசத்திலே வருந்திக் கிடக்கும் முதியவளான குந்திதேவி கிருஷ்ணரிடம் பேசுவது எத்தனை பேருக்குத் தெரியும்? "அரசுரிமையை திரும்ப வந்து ஏற்றுக் கொள்" என்னும் பரதனுக்கு முன்னும் பின்னும் இராமன் என்ன சொல்கிறான்? வீபிஷணன் வந்து அடைக்கலம் கேட்கும் பொழுது அங்கு நடக்கும் உரையாடல் என்ன?

எடுத்துப் படித்துப் பாருங்கள் தெரியும்.

அத்தனையும் வைரமும், பொன்னும், மணியு மாக மின்னிக் கொண்டு இருக்கின்றன. இராமன் பரதனிடம் மனித வாழ்க்கையின் சாரத்தையே பிழிந்து தருகிறான். படிக்கின்ற வனுக்குத் தன் வாழ்க்கையின் அர்த்தமே என்னவென்று புரிந்து போகும்.

நம் முன்னோர்கள் நம் மனித வாழ்க்கை யில் அத்தனை சிக்கல்களையும் பற்றிச் சிந்தித்து அத்தனைக்கும் பதில்களையும் யோசித்து, எப்படியெல்லாம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும் என்று ஆலோசனைகளைச் சேகரித்து அனைத்தை யும் காவியங்களாகப் படைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். தாங்கள் உடனிருந்து தங்கள் சந்ததியினருக்கு வழி காட்ட முடி யாது என்பதற்காக மாபெரும் காவியங்களை வைத்து, "அப்பா, உன் வாழ்விற்கு வழி காட்டி நூல் இதோ இருக்கிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகள் கழித்து உன் சந்ததி படித்தாலும் அவன் வாழ்க்கைக்கும் இவை வழிகாட்டும்'' என வைத்து விட்டுப் போனார்கள்.

அதனாலேயே அந்த மகாகாவியங்கள் கதைகளாக, கூத்துக்களாக, கதாகாலட்சேபங் களாகச் சொல்லப்பட்டு, சொல்லப்பட்டு தலைமுறைகளாக மனித மனங்களைச் செம் மைப்படுத்தி வந்தன.

ஒவ்வொரு கட்டத்திலும், வாழ்க்கையின் சிக்கலிலும் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு எத்தனை எத்தனை உண்மைகள் சொல்லப்பட்டு உள்ளன என் பதை படித்தால் தெரியும்.

ஆனால் நாமோ இன்று, "இராமாயண்... ஐ நோ வெரி வெல்..." என்று சொல்லிவிட்டு கம்ப்யூட்டருக்குள் முகத் தைப் புதைத்துக் கொள்கிறோம். நம் பெரிய வர்கள் நமக்கு வைத்து விட்டுப் போயிருக் கும் 'வழிகாட்டி நூலை'ப் பற்றித் தெரி யாமல், ஏதாவது அயல்நாட்டவர் எழுதிய மனோதத்துவ நூல் கிடைக்குமா என பார்க் கிறோம்.

இப்போ உட்கார்ந்து கொண்டு இராமா யண, மகாபாரதம் படி என்று சொல்வது கேலிக் கூத்தாக இருக்கலாம். சிரிப்பு வரலாம்.

ஆனால் பிரச்னை என்று வரும்போதா வது அவற்றை எடுத்து ஏதேனும் ஒரு பகுதி யைப் படிக்க ஆரம்பியுங்கள். அதில் உங்க ளுக்கு வேண்டிய விடை இருக்கும். இது நிச் சயம்.




வெற்றிக் கதை

# முடியும் என மூச்சை விடு!

தன்னம்பிக்கை என்றதும் எங்கள் ஊரில் இட்லி வியாபாரம் செய்யும் 'செல்லியம்மா'வின் முகம்தான் மனத்தில் நின்றது. கணவன் இருந்தவரை செல்லியம்மா, வீட்டை விட்டு வெளியே வராது அடுப்படியிலேயே கணவனுக்கு உதவியாகக் காலத்தை கழித்தவள்தான். கணவன் இறந்ததும் தன் இரு பையன்களுடன் தனியாளாக நின்று கொண்டு டீக்கடைத் தொழிலைத் தொடர்ந்தாள். பெரிய பையனின் தகாத நடத்தையினால் கடையை மூடும்படி ஆகி விட்டது. செல்லியம்மா வீட்டு வேலை செய்யத் தொடங்கினாள். இரண்டாவது பையன் படிப்பறிவு இல்லாவிட்டாலும் ஆட்டோ ஓட்டக் கற்றுக்



கொண்டு, சம்பாதிக்க ஆரம்பித்தவுடன், வீட்டு வேலை செய்து கொண்டே இட்லி வியாபாரத்தையும் செய்யத் தொடங்கினாள்.

நிலைமை ஓரளவு சீரானதும் இரு பையன்களுக்கும் திருமணம் செய்து வைத்தாள். திரும்பவும் விதி விளையாடியது. இரண்டாவது பையன் மனைவி மற்றும் இரு பிள்ளைகளையும் விட்டு விட்டு ஆக்ஸிடெண்டில் இறந்து போனான். இளைய பிள்ளையின் மரணம் நிகழ்ந்த ஒரு மாதத்திற்குள், மரம் வெட்டச் சென்ற பெரிய பையன் ஆலமரத்திலிருந்து கீழே விழுந்து, ஒரு காலையும் இழந்து படுத்த படுக்கையானான். இந்தக் கால கட்டத்தில், செல்லியம்மாவைப் பற்றி இகழ்ந்து பேசாதவர்களே இல்லை.

''என்ன பாவம் செய்தாளோ, கணவன், பிள்ளைகளைப் பறி கொடுத்து விட்டு நிற்கிறாள்'' என்று.

செல்லியம்மா சுய பச்சாதாபம் கொள்ளாமல், படுத்த படுக்கையாகக் கிடந்த மகனுக்கு புத்தூர் வைத்தியம் செய்துகொண்டு, அவன் மனைவி குழந்தைகள், மற்றும் இரண்டாவது மகனின் மனைவி, குழந்தைகள் அனைவரையும் பராமரித்துக் கொண்டு நம்பிக்கையோடு உழைத்த உழைப்பு எல்லாரையுமே ஆச்சரியப்பட வைத்தது.

காலையில் தான் கடையை பார்த்துக் கொள்ளும்போது, மாட்டுப் பெண்ணை வீட்டு வேலைக்கு அனுப்புவாள். கடை வேலை முடிந்ததும் இன்னொரு மாட்டுப் பெண்ணிடம் வீட்டையும் குழந்தைகளையும் ஒப்படைத்து விட்டு, காய்கறி மார்க்கெட்டில் வியாபாரம் செய்யும் வியாபாரிகளிடம் இட்லிகளை விற்று விட்டு வருவாள். திரும்ப வரும்போது மறுநாள் இட்லி, சட்னிக்கு வேண்டிய சாமான்கள் கையில் இருக்கும். நடுவில் படுக்கையில் இருந்த பெரிய மகனும் இறந்து போனான். இன்று, மூன்று கைம்பெண்களால் ஒரு மினி ஹோட்டல் மற்றும் சிறிய ஷாப் ஒன்றும் நடத்தப்படுகிறது.

கணவன் உயிரோடிருந்த நாட்களில், முகம் நிறைய மஞ்சளைப் பூசிக் கொண்டு ஏதாவது கேள்வி கேட்டால், கதவுக்குப் பின்னால் நின்றுகொண்டு ஒரே வார்த்தையில் பதில் சொல்லும் செல்லியம்மா, இன்று கல்லாப் பெட்டி முன் உட்கார்ந்து கொண்டு, ''சும்மா கடன் சொல்லிட்டு சாப்பிடக் கூடாது, நாளைக்கு துட்டு இல்லாம வந்தா இவனை உள்ள விடாத'' என்று கண்டிப்புடன் பேசுவதைப் பார்க்கும்போதெல்லாம், ''முடியும் என மூச்சை விடு. இமயமலை தவிடுபொடியாகி விடும்'' என்ற வரிகள் மனத்தில் ஓடுகிறது.

—பத்மாவதி முத்துக்குமார்,
நாக்பூர்.

# மங்கையர் மலர்

அக்டோபர் '99



# நவராத்திரி இரட்டைச் சிறப்பிதழ்

நாம் அனைவரும் சேர்ந்து
மகிழ்ந்து கொண்டாடும்
நவராத்திரி சிறப்பிதழ்
இரண்டு புத்தகங்களாக 'ஜாம் ஜாமெ'ன்று
தயாராகி வருகிறது!
வழக்கம் போல வாசகிகளின் பங்கேற்பு
குதூகலமாக இருக்கிறது.
'சக்தி'களாகத் திகழும் நமக்கு
'சக்தி' தரும் அன்னையின் மங்கலங்கள்தான்
எத்தனை! அத்தனையும் சிறப்பிதழில் வருகிறது.
ஆவலோடு காத்திருங்கள்!

நவராத்திரி முடிந்தால் தீபாவளிதானே!

## தீபாவளி - இரட்டைச் சிறப்பிதழ்

என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

நவம்பர் '99

பட்சணம், பலகாரம்,
பட்டாடைகள்,
ஃபேஷன்கள் எல்லாம்
சங்கமம் ஆகும்
பண்டிகையல்லவா?



அதன் பல
பரிமாணங்களையும்
கண்ணைக் கவரும்
வகையில்
**தீபாவளி — இரட்டைச் சிறப்பிதழில்**
காணலாம்!

# சொல்ல விரும்புகிறோம்

◆ எஸ். பர்வின் பானு "பொழுது விடியாம போகுமா?" (ஆகஸ்டு '99) சிறுகதையை திரும்பத் திரும்ப மூன்று தரம் ரசித்து படித்தேன். கதை, கருத்து ரொம்பவும் சாதாரணமானது. சொல்கின்ற விதம் குருவம்மாவின் தத்ரூபமான பேச்சு சம்பாவனை மிகவும் டாப். "மில்லு மூடினா என்ன பொழக்க வழியில்லையா" என கேசவனுடன் பேச்சு கொடுத்த படியே குருவம்மா அவனுக்கு நாலு காசு சம்பாதிக்க, செய்த உபதேசம் அருமை...

லட்சுமி சந்தானம், மும்பை - 79.

◆ ஆகஸ்ட் மாத மங்கையர் மலர் அன்புச் சிறப்பிதழைப் படித்து முடித்ததும் அன்பு குறித்த அத்தனைப் பரிமாணங்களையும் ஒருங்கிணைத்துத் தந்த தங்களின் அரிய சேவை மகத்தானது! மாட்சிமை பொருந்தியது என்பதை உணர முடிந்தது. அன்பு செலுத்துவதில்தான் எத்தனை முறைகள்? என்று பெருமிதம் கொள்ள வைத்தது!

சாந்தி சுந்தர், நெய்வேலி.

◆ "மாணவர்களிடமிருந்து நான் கற்றுக் கொண்டேன்" என்ற கட்டுரைத் தலைப்பைப் பார்த்தபோது, அவர்களிடமிருந்து ஒரு ஆசிரியை கற்றுக் கொள்ள என்ன இருந்து விடப் போகிறது என்று படித்தால், வகுப்பு ஆசிரியர்களுக்கும், அந்த வகுப்பு மாணவ மாணவியர்களுக்கும் ஏற்படும் பாசம், பந்தம், பிணைப்பு, பசுமையாகவே நெஞ்சில் நிலைப்பது உணர முடிகிறது. மாணவர் மாணவிகளின் மலர்ந்த முகங்கள், உற்சாகத்தை அளிப்பதுடன், கவலைகளை எல்லாம் மறக்கடிக்கும் வகையில் ஒரு ஈர்ப்பு ஏற்பட்டு விடுகிறது. ஆசிரியர்களிடம் மாணவ மாணவிகள் காட்டும் கலப்படமற்ற அன்பிற்கு எல்லை ஏது?

பி. ரம்யா, பாண்டிச்சேரி.

◆ ஆக மொத்தம் மங்கையர் மலர் வழங்கிய அன்புச் சிறப்பிதழ் எங்களுக்குக் கிடைத்த அரிய நட்புப் புதையல்.

வி. விஜயா, மதுரை - 16.

◆ முன்கோபக்காரரான என் கணவரின் பார்வையில் படும்படியாக மங்கையர் மலர் அன்புச் சிறப்பிதழை வைத்திருந்தேன். அதை எடுத்து முழுவதும் படித்தார். ரிசல்ட்? இனிமேல்தான் பார்க்க வேண்டும்.

எஸ். சுஜாதா, திருச்சி.

## கோபக்கார கணவர் மாறுவாரா?

◆ "இந்திய தேசத்தில் பெண் வாக்காளர்கள் விழித்துக் கொண்டார்களேயானால் நம் நாட்டிற்குப் பெரிய விமோசனம் கிடைக்கும் என்றே சொல்லலாம்" என சொன்ன ஆசிரியரின் வரிகள் வைர வரிகள்.

தி. கமலா தியாகராஜன், பவித்திரமாணிக்கம் - 51.

◆ பரசுராமர் கட்டுரையில் ஸ்ரீ மத்வர் கூறியுள்ளதை ஆதார பூர்வமாகச் சொல்ல இயலாது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஸ்ரீ மத்வரின் வியாக்யானம் : 'சரிதம் ரகுநாதஸ்ய சத கோடி ப்ரவிஸ்தரம்...' என்னும் நூறு கோடி ஸ்லோகங்களைக் கொண்ட பகவான் ஸ்ரீ ஹயக்ரீவரால் இயற்றப்பட்ட மூலராமாயணத்தை அடிப்படையாகக் கொண்டது. அது இப்போது வழக்கில் இல்லை. ஸ்ரீ மத்வரிடம் அதன் பகுதிகள் இருந்ததாக ஐதீகம். ஆதாரங்களைத் தேடிக் கொண்டே போனால் வால்மீகி ராமாயணத்திற்கு ஆதாரம் எது! வால்மீகியை நம்புவர்களுக்கு அவர் கூறுவதே ஆதாரம். விரிக்கின் பெருகும்.

நரசிம்மன், திருநெல்வேலி.

◆ கண்டதும் காதல், உடனே, ஐ லவ் யூ சொல்வது அடுத்ததாக கை கோர்த்துக் கொண்டு பார்க், பீச் என்று சுற்றுவது என்ற இந்தக் காலத்தில், 12 வருடங்கள் மனத்தளவில் காதலித்து, காத்திருந்து திருமணம் செய்து கொண்டுள்ள முத்து சாந்தி அவருடைய கணவர் இருவரையும் அவரே கூறியுள்ளது போல் எந்த விதத்தில் சேர்ப்பது?

விசாலம், சென்னை - 4.

◆ தலை முதல் கால் வரை அன்பைத் தேக்கி வைத்திருக்கும் பெண்மையின் மாண்பை (உன்னிலிருந்தே ஆரம்பம்) நடுநிலையோடு விமர்சித்த பெயர் தெரியாத அந்த ஆணின் வார்த்தைகள் சத்தியமானது மட்டுமல்ல; முத்தாய்ப்பானதும் கூட!

மாலதி உலகநாதன், திருநீலக்குடி.

◆ அன்பு பற்றிய குணங்கள் அன்னை தெரஸாவின் கருத்துக்கள் போன்று வெளியிடப்பட்டுள்ளது. இந்தக் கருத்துக்கள் விவிலியத்தில் (Holy Bible) கூறப்பட்டவை. பவுல் என்ற இயேசுவின் அடியார் கொரிந்து என்ற பட்டணத்திலுள்ள சபைக்கு (Church) எழுதப்பட்ட ஒரு கடிதத்தின் ஒரு பகுதி!

ஆர். தவம், திருநெல்வேலி.

அட்டை வண்ணப்படம் : ஜி. சுரேஷ்

## ஆசிரியரோடு




# ஒரு உரையாடல்

**ஜெயசுதா ஷங்கர், மும்பை.**

சோனியா காந்தி என்றைக்கு மருமகளாக இந்தியாவுக்குள் காலடி எடுத்து வைத்தாரோ, அன்றே அவர் கலாச்சார ரீதியாகவும், மனரீதியாகவும் முழுமையான இந்தியப் பெண்ணாக மாறிவிட்டார். மணமாகி, இரண்டு குழந்தைகளையும் பெற்று, இன்று அவர்களுக்குத் திருமணமாகி, பேரன், பேத்தி எடுக்கிற காலத்தில், இன்னும் சோனியா காந்தியை வெளிநாட்டவர் என்று விமர்சிக்கிறார்களே? வீட்டிற்கு வந்த மருமகளை மகளாகக் கருதாமல் அந்நியமென நினைத்து ஒதுக்கி வைப்பதுதான் இந்து கலாச்சாரமா?



**சோனியா காந்தி வீட்டுக்குள் மருமகளாகவே இருந்து விட்டிருந்தால் அவரைப் போய் யாரும் குற்றம் சாட்டப் போவதில்லை. ஆனால் பொது வாழ்வுக்கு வந்து விடும்போது, 'சதுரங்கம்' போலத்தான். அத்தனையையும் சமாளித்துத்தான் ஆக வேண்டும். வெற்றி பெறுவது எப்படி என்பதில்தான் அனைவரும் கண்ணாக இருப்பார்கள்.**

**தவிரவும் அவர் புகுந்த வீட்டிற்கு வந்த இத்தனை ஆண்டுகளில் 'கலந்து' இருந்தாரா, 'தனித்து' இருந்தாரா என்றெல்லாம் அலசப்படுகிறது. இதை நாம் பெண்ணின் மருமகள் பதவி பிரச்னையாக எடுத்துப் பார்க்கக் கூடாது.**

**அஞ்சலி மாரியப்பன், அயன்புரம்.**

நான் என் கணவரின் வேலை நிமித்தம் வட நாட்டில் 28 வருடம் வாழ்ந்தவள். எனவே அடுத்தவர்களிடம் என் கணவரை குறிப்பிடும் போது வடநாட்டு பாணியில் அமர்நாத் அப்பா (என் மகன் பெயர்) அப்படி சொன்னார்கள் இப்படி சொன்னார்கள் என்பேன். வட நாட்டுக்காரர்கள் பாணியில் கூறுவதில் என்ன தப்பு? (ஏனெனில் உறவுக்காரர்களுக்கு இது ஏன் பிடிக்கவில்லை என்று தெரியவில்லை)

**ஒரு தப்புமில்லை. இதை நம் கிராமங்களில் சர்வசாதாரணமாகக் காணலாம். அஞ்சலை புருஷன், முனியம்மா பேரன் என பெண்ணைக் குறிப்பிட்டு இங்கு சொல்வார்கள். அங்கு ஆணை வைத்துச் சொல்கிறார்கள் போலிருக்கிறது.**

**நீங்கள் பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே இருங்கள். கொஞ்ச நாளில் அவர்களுக்கே பழகிவிடும்!**

**சியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்.**

நாம் ஒவ்வொருவரும் நம் மனதிற்கு சந்தோஷத்தைத் தரும் செயலைத்தான் செய்கிறோம். எந்த செயலை செய்தாலும் சுயநல உணர்வுடன்தான் ஈடுபடுகிறோம். குழந்தை, கணவன், மனைவி, அம்மா, அப்பா, நண்பன் என்ற எந்த ரூபத்தில் வளைய வந்தாலும் நமக்கு ஆதாயம் கிடைக்கிறதா என்ற சுயநல சிந்தனைதான்! அப்படியென்றால் ஒவ்வொரு மனிதனும் தனி மனித உணர்வுடன்தான் பிறரிடம் பழகுகிறோமா? குடும்பத்தில் உள்ளவர்களுக்கு தியாக உணர்வு வராதா?

**நம்மை வைத்தே யோசிப்பது மனித இயல்பு. இதை வைத்தே நம்மை உயர்த்த வேண்டும் என நம் முன்னோர்கள் நினைத்தார்கள். எந்தச் செயலையும் தனக்காகச் செய்தால் அது சுயநலம். அதிலே 'கொஞ்சம் பிறருக்காக' எனக் கலந்து விடும் போது 'தியாகம்' ஆகிவிடுகிறது. அப்போது அன்பு, நட்பு என எத்தனையோ இனிமைகள் ஓடி வந்து கலந்து கொள்கின்றன.**

**உதாரணமாக, சிறு குழந்தைகளுக்குச் சாதம் ஊட்டும்போது கூடவே காக்காய், குருவி, நாய் அத்தனைக்கும் போட்டுச் சாப்பிட வைக்கிறோம். (இப்போது இல்லை என்பது வேறு விஷயம்!) குழந்தை மிகுந்த மகிழ்ச்சியோடு வாய் நிறைய சாதம்**

# வட்டம்

**வைத்துக் கொண்டு சிரிக்கிறது. இப்படித்தான் மனித வாழ்க்கையைத் தொடக்கினார்கள்.**

**திருமணம் இளம் உடல் உள்ளங்களின் சங்கமத்திற்கு. அதே சமயம் அதிலே எத்தனை 'இரண்டு' குடும்பங்கள் இணைகிறார்கள். எல்லா உறவுகளையும் சேர்த்து வாழ பயிற்சி. 'இல்லறத்தின் கடமையே விருந்தோம்பல்' எனப்பட்டது.**

**இப்படி நம் வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் 'பிறருக்காக' என்பதை நமக்குத் தெரியாமலே 'நுழைத்து' விட்டிருந்தார்கள். எல்லோரும் சந்தோஷமாகத்தான் வாழ்ந்தார்கள்.**

**ஆனால் கடமையை மறந்து உரிமையை மட்டுமே கேட்கச் சொல்லிக் கொடுக்கப்பட்ட ஒரு தலைமுறையே இன்று வளர்ந்து நிற்கிறது. பார்ப்போம், நம் தவறுகளை திருத்திக் கொள்ள இன்னும் அவகாசம் இருக்கிறது.**

ஒரு வாசகி, பெங்களூர்.

அன்புள்ள ஆசிரியைக்கு,

ஒரு மாதம் முன்பு என் சகோதரி உடல் நிலை சரியில்லாமல் ஆஸ்பத்திரியில் இருந்தாள். அவளுக்கு உதவியாக நான் சென்னை வந்திருந்தேன். ஒரு நாள் மத்தியம் மூன்று மணி அளவில் என் சகோதரிக்குக் காப்பி எடுத்து கொண்டு ஆஸ்பத்திரிக்குச் சென்று கொண்டிருந்தேன்.

ஒரு இளைஞன் என் எதிரில் மோட்டார் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். என் அருகில் நிறுத்தி, "உங்களை நான் கொண்டு போய் விடுகிறேன்" என்றான். நான் மறுத்துவிட்டு நடக்க ஆரம்பித்தேன். மறுபடி அருகில் வந்து "உங்களுடன் friendship வைத்துக் கொள்ள ஆசையாக இருக்கிறது" என்றான். எனக்கு ஒரு நிமிடம் ஒன்றும் புரியவில்லை. "சாரி" சொல்லிவிட்டு நடந்து விட்டேன்.

எனக்கு வயது 46. எதற்காக அந்த இளைஞன் இப்படிக் கேட்டான் என்றே புரியவில்லை. இது என்ன விபரீதம்? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்? இதற்கு என்ன காரணம்?



இந்தக் காலத்து இளைஞர் எல்லாரும் இப்படித்தான் என்ற முடிவுக்கு வரவும் நான் தயாரில்லை.

**நீங்கள் பெயரைப் போட்டுக் கடிதம் எழுதி இருக்கிறீர்கள். ஆனால் இதனால் உங்கள்**

**குடும்ப வட்டத்தில் பிரச்னை வருமோ எனப் பெயரை எடுத்து விட்டேன்.**

**உங்கள் அனுபவம் கேட்டு என்ன சொல்ல? படிக்கும் வாசக சகோதரிகள் சிந்திக்கட்டும்.**

ஒரு வாசகி,
சென்னை.

நான் ஒரு முதுகலை



பட்டதாரி. எனது கணவர் எல்லா விஷயங்களிலும் என்னை மட்டம் தட்டிக் கொண்டே இருப்பார். 'என்ன தெரியும் உனக்கு? ஆமா இல்லைன்னு ஒழுங்காக தலையாட்டக் கூடத் தெரியாது' என்பார். அவர்கள் பேசுவது எல்லாம் பெரும்பாலும் அடுத்த வீட்டு விஷயங்களாகவே இருக்கிறது. என்னால் ஜீரணிக்க முடியாத இரண்டாந்தர மோசமான காமடிகளுக்கு வீடு அதிர சிரிப்பார்கள். நான் சிரிக்கவில்லையெனில் ரசனை கெட்ட ஜென்மம் என்பார்கள்.

நம்மில் பலர் வீட்டுச்

## பஜ்ஜியோ பஜ்ஜி



பஜ்ஜி மாவு: 2 ஆழாக்கு புழுங்கல் அரிசி, 4 ஆழாக்கு கடலை பருப்பு, 25 வரமிளகாய் வெயிலில் நன்கு

சத்தம் வெளியில் கேட்டால் அவமானம் என பொறுத்து மன அழுத்தத்திற்கு ஆளாகிறோம். வேலைக்குச் செல்பவர்களானால் ஓரளவு மாற்றம் கிடைக்கும். வீட்டிலேயே இருப்பவர்களுக்கு?

இது மாதிரி ஆண்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். இவர்களைப் பற்றி என்ன சொல்லப் போகிறீர்கள்?

**அவர்களைப் பற்றி நாம் என்னத்திற்கு சொல்லிக் கொண்டு இருக்க வேண்டும். நம் வேலையை நாம் பார்க்கலாமே!**

**உங்களுடைய நீண்ட கடிதத்திலிருந்து உங்கள் கணவர் தன் தாழ்வு மனப்பான்மையை மறக்க இப்படியெல்லாம் நடந்து கொள்கிறார் என்பது தெரிகிறது. நீங்கள் அவர்களைப் பற்றியே நினைத்து நினைத்து குமுறிக் கொண்டிருக்க வேண்டியதில்லை.**

**உங்களுடைய கடமையைச் செய்துவிட்டு உங்களுக்குப் பிடித்தமான ஏதாவது ஒரு பணியை (எழுத்து, ஓவியம், டியூஷன், படிப்பு...) எடுத்துக் கொண்டு அதில் உங்கள் கவனத்தைச் செலுத்துங்கள். உங்களின் சாதனையை மற்றவர்கள் போற்றுவார்கள். அப்போது தானே இவர்கள் மதிக்க ஆரம்பிப்பார்கள்.**

**உங்களைப் போன்றே கணவன் குடும்பம் அமைந்த பெண்மணி இன்று உலகப் புகழ் பெற்ற உணவுத் தயாரிப்பு நிறுவனத்தை பெங்களூரில் நடத்தி வருகிறார்.**

**எஸ். விஜயா செல்வராஜ், வெள்ள கோவில் (வழி).**

சின்ன ஏமாற்றங்களைக் கூட தாங்கிக் கொள்ள முடியாமல் தற்கொலை செய்து கொள்ளும் இன்றைய இளைய தலைமுறையினரை பார்க்கும் போது அச்சமாய் இருக்கிறது.

சம்பத்தி

# மணமகளைப் பார்க்காமல் திருமணமா?

## வாருங்கள்! உங்கள் கனவு இல்லத்தில் முதலீடு செய்யுமுன் எங்களது மாடல்வீடுகளை பாருங்கள்!




## மிகச்சிறந்த டிசைனுடன் கூடிய வீடுகள், வியக்கத்தக்க விலைகளில்!

உங்கள் கனவு இல்லம் எப்படி இருக்கும் என்று முன்கூட்டியே நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்கெனவே மாடல் வீட்டைக் கட்டி, அதில் நவீன வசதிகளுடன் வாழத் தேவையான அனைத்து பொருட்களையும் உரிய இடங்களில் வைத்துள்ளோம், வந்து காணுங்கள். ஏனெனில், ஸ்ரீவத்ஸா, எப்பொழுதும் தன் செயலாக்கங்களில் ஒளிவு மறைவற்ற தன்மையை விரும்புகின்றது. ஏற்கெனவே நாங்கள் அமைத்த ஸ்ரீவத்ஸா கார்டன்ஸ் 24 ஏக்கர் பரப்பளவில் சகல வசதிகளையும் கொண்டு அமைத்துள்ள இந்த முதல் நகர்புறத் திட்டம் 400 உள்நாட்டு மற்றும் அயல்நாட்டில் வசிக்கும் இந்தியர்களால் வாங்கப்பட்டுவிட்டது.

**ஸ்ரீவத்ஸா ஹில் வியு** வாடிக்கையாளர்களின் விருப்பம் மற்றும் தேவைகளை கருத்தில் கொண்டு தரத்திற்கு ஏற்ப **சரியான விலையுடன்** அதிநவீன வசதிகள் கொண்ட வீடுகளை அமைத்து வருகிறது.

**ஸ்ரீவத்ஸா ஹில் வியு:**

- இது தனி வீடுகள், வரிசைவீடுகள், அடுக்கு மாடி வீடுகள் என்று மூன்று விதங்களில் அமைந்துள்ளது.
- கோயமுத்தூர் ரயில் நிலையத்திலிருந்து 7கி.மீ. தொலைவில், கோயமுத்தூர் - பாலக்காடு சாலையில் உள்ளது.
- சிறந்த பள்ளிகள், வங்கிகள், மருத்துவமனைகளுக்கு மிக அருகிலேயே அமைக்கப்பட்டுள்ளது.
- மனதையும், உடலையும் அமைதிப்படுத்தக்கூடிய ரம்யமான அழகு கொண்ட மேற்குத் தொடர்ச்சி மலைகளின் அடிவாரத்தில் உள்ளது.
- 800 சதுர அடி முதல் 1475 சதுர அடி வரை கொண்ட இவ்வீடுகளின் விலை ரூ 9.7 லட்சத்திலிருந்து 14.75 லட்சம் வரை மட்டுமே!!
- மேலும் இதன் தனிச் சிறப்பு என்னவெனில் உங்களின் விருப்பம் போல் உள்ள டிசைன்களிலும் வீடுகள் கட்டித் தருகிறோம்.

மேலும் விவரங்களுக்கு, தொடர்பு கொள்க:

## ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் லிட்.

8/2, மேட்டுப் பாளையம் ரோடு, கோயம்புத்தூர் - 641 043. போன்: 91-0422-437422, 432574, 441481. செல்: 809082
ஃபேக்ஸ்: 91-0422-430899. தந்தி: SRIVATSACO
Email: <Sreevatsa.cbe@smy.sprintrpg.ems.vsnl.net.in> Web site: http://www.sreevatsa.com

*ஆர்க்கிடெக்ட்ஸ்: சங்கர் & அசோசியேட்ஸ், கோயம்புத்தூர்*

**இத்திட்டம் எல்.ஐ.சி. ஹவுசிங் பைனான்ஸ் மற்றும் ஹெச்.டி.எஃப்.சி. ஆகிய நிறுவனங்களில் கடன் வசதி பெறுவதற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.**



எங்களது வங்கி
குளோபல் டிரஸ்ட் வங்கி

1 ச.மீ.=10.764 ச.அடி

Anugrah 2754 / 99 Tam




# கரையேறி விட்டோம்!

**1973**-ம் வருடம் எங்கள் திருமணம் மிகவும் விமரிசையாக நடந்தது. எங்கள் குடும்பம் கூட்டுக் குடும்பம். என் கணவருடன் பிறந்தவர்கள் ஐந்து சகோதரர்கள் என்றாலும் 4-வது சகோதரர் குடும்பத்துடன்தான் அவர் இருந்தார். என் மைத்துனருக்கு இரண்டு ஆண்கள் இரண்டு பெண்கள். என் பிறந்த வீடும் கூட்டுக் குடும்பம் என்பதால் எனக்கும் புகுந்த வீட்டில் சகோதரர்கள் இருவரும் ஒன்றாக இருந்தது மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது.

என் மன்னி மிகவும் அன்பானவர். மைத்துனரோ மிகவும் கலகலப்பாக சிரித்துப் பேசுவார். குழந்தைகளுக்கு முறையே 10, 5, 3, 1 வயது. குழந்தைகளும் எங்களிடம் சித்தப்பா, சித்தி என்று அன்புடன் ஒட்டிப் பழகினர். ஒரு வயதுப் பெண் குழந்தை என்னிடம் நன்கு ஒட்டிக் கொண்டது. எல்லோரும் என் குழந்தை என்றே நினைத்தனர். எனக்கும் மன்னிக்கும் ஏற்பட்ட அன்பு ஜென்மாந்திர தொடர்பு என்றுதான் கூற வேண்டும். ஐந்து வருடங்கள் எங்கள் கூட்டுக் குடும்பம் மிகவும் மகிழ்ச்சியாக பிறர் கண் படும்படி இருந்தது.



இரு சகோதரர்களும் சேர்ந்து புது வீடு கட்டி ஒரு வருடம் மகிழ்ச்சியின் உச்சிக்குச் சென்றோம். இந்நிலையில் மைத்துனர் நோய்வாய்ப்பட்டார். அடிக்கடி ஆபீஸுக்கு லீவு போட்டு விடுவார். என் கணவர் இன்ஜினியராக வேலை பார்த்தார். மூன்று வருடங்களுக்கு ஒருமுறை மாற்றல் வரும்.

சித்திரை வருடப் பிறப்பிற்கு இரண்டு நாட்கள் முன்பாக என் மைத்துனர் உடல் நலம் மிகவும் மோசமாக இருந்ததால் ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்தோம். என் கணவரும் வருடப் பிறப்பிற்காக சென்னை வந்திருந்தார். அன்றுதான் என் மைத்துனரின் முதல் பிள்ளைக்கு பத்தாம் வகுப்பு பரீட்சை ஆரம்பம். பரீட்சை முடிந்த இறுதி நாள் இரவு என் மைத்துனர் இம் மண்ணுலகிலிருந்து மறைந்தார். இரண்டாவது பிள்ளை 5-ம் வகுப்பு, முதல் பெண் முதல் வகுப்பு, 2-வது பெண் யு.கே.ஜி. என் பெரிய பிள்ளை எல்.கே.ஜி. படித்துக் கொண்டிருந்தனர்.

என் அக்கா, எங்கள் இருவரிடமும், "என்னையும் குழந்தைகளையும் வேறு எங்கும் அனுப்பி விடாதீர்கள். நாங்கள் இங்கேயே இருக்கிறோம்" என்று கதறி அழுதார். இவ்வளவு நாள் ஒன்றாக வாழ்ந்த அவர்களை நாங்கள் மட்டும் எப்படிப் பிரிக்க முடியும்? கஞ்சியோ, கூழோ குடித்து ஒன்றாகவே இருப்போம். எப்படியும் வாழ்வில் 'எதிர் நீச்சல்' போட முடியும் என்ற 'நம்பிக்கையை' வளர்த்துக் கொண்டு வாழ்வது என முடிவு செய்தோம்.

என் இரு பிள்ளைகள், அவர்களின் இரண்டு பெண்கள், இரண்டு ஆண்கள் ஆக ஆறு குழந்தைகளுக்கும் நாங்கள் பெற்றோரானோம்.

என் அக்காவிற்கு அருகிலுள்ள நர்சரி பள்ளியில் ஆசிரியை வேலை கிடைத்தது. ஒரு வருடத்திற்குப் பின் அங்கே தலைமையாசிரியைப் பதவி ஏற்றார். அவருடைய

சொற்ப சம்பளத்திலும், என் கணவரின் சம்பாத்தியத்திலும் 10 பேர் நாங்கள் வாழ்ந்தோம். எப்படி குடும்பத் தேரை ஓட்டினோம் என்று இப்போது நினைத்துப் பார்த்தால் மலைப்பாக இருக்கிறது.



வருடங்கள் ஓடின. என் மைத்துனரின் பெரிய பிள்ளை பி.காம். முடித்தான். என் மைத்துனர் வேலை செய்த கம்பெனியிலேயே அவனுக்கு வேலை கிடைத்தது. என் மாமி யாருக்கு திடீரென்று உடல்நலம் குன்றி கை, கால்கள் நீட்ட முடியாமல் போய் உட்கார்ந்தபடியேதான் நகர்ந்து செல்வார். இப்படியே ஐந்து வருடங்கள் இருந்தார். என் கணவருக்கும் மூன்று வருடங்களுக்கு ஒருமுறை உத்தியோக மாற்றத்தால் வெளியூர் சென்று விட்டு வருவார். வெளி நிர்வாகத்தை என் அக்காவும் வீட்டு நிர்வாகத்தை நானும் நடத்தி வந்தோம். வயது வந்த ஆண்களையும், பெண்களையும் வளர்ப்பது அப்பப்பா? இரண்டாவது பிள்ளையும் பி.காம்., முடித்தான். அவனும் வேலையில் சேர்ந்ததும், 'குடும்பச் சுமை' ஓரளவு குறைந்தது. என் மாமியார் காரியமும் முடிந்தது.

என் மைத்துனரின் பெரிய பிள்ளைக்குத் திருமண வயது வந்தது. என் பெரியப்பாவின் பேத்தியை மணமுடித்து வைத்தோம். அவளுக்கும் எங்கள் பெண்களின் வயது தான். அவளையும் எங்கள் மூன்றாவது பெண்ணாகத்தான் நினைத்தோம். அவளும் எல்லோருடனும் நன்றாகப் பழகினாள். எங்கள் குடும்பத்துடன் ஒன்றினாள். பேரனும் பிறந்தான். இல்லத்தில் 'லக்ஷ்மி கடாட்சமும்' பெருகியது.

இப்படியே ஒவ்வொரு பொறுப்பாக நிறைவேற்றினோம்.

முதல் பெண்ணின் சீமந்தம், பிரசவம், குழந்தைக்குச் சீர், அடுத்த பெண்ணின் சீமந்தம், பிரசவம் என்று வரிசையாக வந்தது. எதற்கும் சளைக்கவில்லை. எல்லாம் நல்லபடியாக முடித்தோம்.

1998-ம் ஆண்டு எங்களின் 25-வது ஆண்டு திருமண விழா (வெள்ளி விழா) வந்தது. எங்களின் நான்கு பிள்ளைகள், மாட்டுப் பெண்கள் இருவர், இரண்டு பெண்கள், மாப்பிள்ளைகள் எல்லோரும் சேர்ந்து பட்டாலும், தங்க நகைகளாலும் எங்களைத் திக்குமுக்காட வைத்து வெகு விமரிசையாக நடத்தினர். இதைவிட பெருமை வேறு என்ன வேண்டும் எங்களுக்கு? என் மைத்துனர் விட்டுச் சென்ற குடும்ப பாரத்தைச் சுமந்து அனைவரையும் நல்லபடியாக வாழ்க்கையில் 'செட்டில்' செய்து விட்டோம். இந்த வெற்றிக்கு அடித்தளம் தெய்வமாகி எங்களை வாழவைத்துக் கொண்டிருக்கும் என் மைத்துனர்தான் என்று கூறினால் அது மிகையல்ல.

– எஸ். விஜயலக்ஷ்மி, சென்னை – 88.

பெண்களை கேலி செய்யும் (ஈவ் டீசிங்) குற்றத்திற்காக சம்பந்தப்பட்டவர்களை தண்டிப்பதற்கென்று அனைத்து மகளிர் கல்லூரிகளிலும் காவல் துறையினர் புகார் பெட்டிகளை வைத்திருக்கின்றனர். இது நல்லதா? அது குறித்து மாணவிகளின் கருத்துக்களைக் கேட்டறிய சென்னை எம்.ஜி.ஆர். ஜானகி மகளிர் அறிவியல் கல்லூரிக்குச் சென்று அங்கிருந்த மாணவிகளையும் பேராசிரியைகளையும் நேரில் சந்தித்தோம். கொஞ்சமும் தயக்கமில்லாமல் மனதில் பட்டதை வெளிப்படையாகவே பேசி விவாதிக்க ஆரம்பித்து விட்டார்கள்". அவர்களின் கலந்துரையாடலிலிருந்து –



**வி.ஆர்.ஜி ப்ரியா:** காலேஜ் கேர்ள்ஸ்கிட்டே மட்டும்தான் ஈவ் டீசிங் நடக்கிறதா? ஏதோ மொட்டைக் கடுதாசி மாதிரி எழுதிப் போடச் சொல்றாங்க. தப்பு செய்யறவங்களை இவங்க எப்படி அடையாளம் கண்டுபிடிக்கப் போறாங்க. நாம கொடுக்கப் போற கம்ப்ளெயிண்டுக்கு போலீஸ்ல எந்த அளவுக்கு நடவடிக்கை எடுப்பாங்க? புகார் பெட்டி வைக்கிறதினால யாரும் திருந்தப் போறதில்லை.

**தேவரஞ்சனி:** எல்லாமே நடந்து முடிந்த பிறகு தானே நாம கம்ப்ளெயிண்ட் லட்டர் எழுதப் போறோம். இதனால என்ன பிரயோஜனம்? வேணும்னா மறுபடியும் இது போல குற்றம் நடக்காம தடுக்கலாம். பஸ்ல வர்ர எங்களுக்கு மட்டுமென்று இல்லை, தெருவில் நடந்து போயிக்கிட்டிருக்கிறவங்க பஸ்சுக்கு வெயிட் பண்ணிட்டு இருக்கிறவங்க, டூ வீலர்களில் போகிற பெண்கள் இவங்களையும் தான் கேலியும் கிண்டலும் செய்யறாங்க. இதை எப்படி தடுப்பாங்க?

**சத்தியப் ப்ரியா:** முதல்லே கல்லூரி மாணவர்கள் மீது பழி சொல்றத நிறுத்தணும். நாம ஒழுங்கா இருந்தா பிரச்னை இல்லை. நாம பேசுறது... நடக்கிறது... மேக்கப்... துப்பட்டா போடறது ஒரு மரியாதைக்காக சில லேடீஸ் துப்பட்டாவே போடறதில்லை. பார்க்க நமக்கே அசிங்கமாத் தெரிகிறது.

**அருள் ஜோதி:** கல்லூரி மாணவர்களை குறை சொல்லிப் பிரயோஜனமில்லை. சில நடுத்தர வயது ஆண்களால் தான் நமக்குப் பிரச்சனையே வருது. அதிலும் கல்யாணமானவங்கதான் பிரச்னை தர்ராங்க. கல்லூரி மாணவர்கள் வல்கரா பேசுவது கிடையாது. அப்படி நடந்துக்கவும் மாட்டாங்க. கமெண்ட் அடிப்பாங்க. அவ்வளவுதான்.

**வேதா:** கலாட்டா செய்யறவங்க வயசு வித்தியாசமெல்லாம் பார்க்கிறது கிடையாது. பஸ்லே அவங்க செய்யுற காரியம் நம்மை சீண்டி விட்டு வேடிக்கைப் பார்ப்பது போலிருக்கிறது. படிக்காதவங்க... டீசெண்டா இருக்கிற மாதிரி காட்டிக்கிறவங்க தான் மேலே இடிப்பது, உரசுவது, துப்பட்டாவை சேலையை





இழுப்பது போன்ற அநாகரீகமான காரியங்களை செய்யுறாங்க.

**அருள்ஜோதி:** புகார்ப் பெட்டி வெச்சிருக்கிறது நல்லதுதான். தப்பு செய்யுறவங்க பெரிய இடத்து பிள்ளையாகவோ, அரசியல் செல்வாக்கு உள்ளவனாகவோ இருந்தா போலீஸ் நடவடிக்கை எடுக்கிறதில்லே. பாதிக்கப்பட்டவங்க பல பேர் மறுநாளைக்கு வந்து அவர்களை தொந்தரவு செய்வாங்களோ என்ற பயத்தில் கம்ப்ளெயிண்ட் பண்ணத் தயங்குகிறாங்க.

**அருணா:** இந்த மாதிரி தப்பை செய்யறவங்க திரும்பத் திரும்ப செஞ்சுட்டு தான் இருப்பாங்க. இன்னைக்கு ஓரிடத்துல செய்யறவங்க நாளைக்கு இன்னொரு இடத்துல செஞ்சுகிட்டுதான் இருப்பாங்க. அவங்களா உணர்ந்து திருந்தாத வரைக்கும் இந்த புகார்ப்பெட்டி... இதெல்லாம் வேஸ்ட்.

**சாரதாஷா:** புகார்ப்பெட்டி இருக்கறது நல்லதுதான். இதனால போலீசுக்கும் எந்த இடத்துல எந்த



ஏரியாவிலே... பிரச்சனை இருக்குன்னு தெரிஞ்சுக்க வாய்ப்பு இருக்கும். இதை ட்ரேஸ் பண்ணுவதற்கு விஜிலென்சும் அதிகம் இருக்கும். இதுக்கு நாமும் ஒத்துழைக்கணும்.

**வரலக்ஷ்மி:** இந்தப் பெட்டி தேவையே இல்லை. ஈவ்டீசிங் இப்படிதான் நடக்கும்னு சொல்றதுக்கு இல்லே. முதல்ல இதையெல்லாம் பெரிசா பேசுவாங்க. அப்புறம் பார்த்தா எல்லாத்தையும் மறந்துட்டு இருப்பாங்க. ஈவ் டீசிங் கூட்டம் கல்லூரி மாணவிகளை மட்டும்னு இல்லே, கல்யாணமான பெண்களையும் விட்டு வெக்கிறதில்லே.

**சாரதாஷா:** அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வெளிநாடுகளில் நம்மை விட மோசமா உடை அணிகிறார்கள். அங்கெல்லாம் இப்படியா நடக்கிறது? நமது நாடு கலாச்சாரத்திற்குப் பெயர் போனது என்று சொல்லிக் கொள்கிறோம். ஆனா இங்குதான் ஈவ் டீசிங் எல்லாம். இல்லையென்றால் புகார்ப் பெட்டிகள் வைக்கும் அளவுக்கு வந்திருக்குமா?

**வி.ஆர்.ஜி ப்ரியா:** சென்சார் போர்டு ஒன்று இருக்குன்னுதான் பேரு. விதிமுறைகள் எல்லாம் ஃபைல்ல இருக்கு. ஆனா அது அங்க உள்ளவங்க மூளையில் இல்லை. அதனால்தான் இதுமாதிரியான பிரச்னைகள்.

**சாரதாஷா:** நீ சொல்றது ரொம்ப கரெக்ட். ஃபிலிம் மீடியாதான் ஈவ் டீசிங்கை ரொம்ப என்கரேஜ் பண்றது. அதேபோல பணம் சம்பாதிக்கணும்கிற ஒரே காரணத்துக்காக சில பெண்கள் மது, சிகரெட் போன்ற விளம்பரங்களில் அரை குறையாக













# பெட்டிகள்!





**வேறு ஊருக்குச் செல்லும்போது, ஆண், பெண் தங்களுடைய வேலை செய்யும் ஐடென்டி கார்டு (அ) பாஸ் புக் ஏதாவது எடுத்துச் செல்வது நல்லது. ஹனிமூனுக்குச் செல்லும் தம்பதிகள், மணக்கோலத்தில் உள்ள இரண்டு போட்டோ எடுத்துச் செல்வது, இக்கட்டான சூழ்நிலையில் உதவும். (ஒருவருக்கு ஏற்பட்ட சிக்கல் இதை எழுதத் தூண்டியது) — ஆர். பார்வதி**

நடிப்பது நன்றாகவா இருக்கிறது?

**அருணா:** நாம ஈவ்டீசிங்கைப் பற்றி பேசிட்டு இருக்கிறோமே. நாம மட்டும் ஆண்களை கிண்டல் பண்ணலயா? நாமும்தானே கிண்டல் பண்றோம்.

**சாரதா ஷா:** நாம நமக்குள்தானே குரூப்பா பேசிக்கிறோம். அவங்கள மாதிரி வெளிப்படையாப் போய் பேசுறோமா? இல்லே அவங்க மேலே போய் இடிக்கிறோமா? இல்லையே.

**ப்ரியா:** அப்படி இடிச்சா அவங்க 'ஆடம்-டீசிங்'குனு நம்ப பேர்ல கம்ப்ளெய்ண்ட் கொடுத்திடப் போறாங்க.

(சிரிப்பு)

**அருணா:** சிரிக்காதீங்க. சீரியசாவே சொல்றேன். ஒரு நாளைக்கு ஆண்கள் கல்லூரியிலும் புகார்ப் பெட்டி வெக்கத்தான் போறாங்க பாருங்க.

**கிறிஸ்துமலர்:** பெண்கள் முன்னேறிட்டு வர்ராங்கன்னு சொல்லிட்டு இருக்கிற இந்த வேளையில இது மாதிரியான தீமையான விஷயங்கள் நடக்கறது மிகவும் கண்டிக்கத் தக்கது. அரபு நாடுகளில் இருப்பது போல கடுமையான தண்டனைகள் கொடுத்தா இதனைக் குறைக்க முடியும்.

**வி.ஆர்.ஜி.ப்ரியா:** தப்பு நடக்கும்போதே மப்டியிலே போலீஸ் வந்து செக் பண்ணி உடனே நடவடிக்கை எடுக்கணும். அப்படி செஞ்சாத்தான் எல்லோருக்கும் தெரியும்.

**கல்லூரி முதல்வர் திருமதி. திலகவதி பாஸ்கரன் அவர்களைச் சந்தித்தபோது:**

'ஈவ் டீசிங் குறித்து புகார்ப்பெட்டிகளை கல்லூரிகளில் மட்டும் வைத்தால் போதாது. வேலைக்குப் போகும் ஏராளமான பெண்கள் மிகவும் அதிக அளவில் பாதிக்கப்படுகின்றனர். அவர்கள் பணிபுரியும் இடங்களிலும் இது போன்ற வசதிகள் செய்து தரப்பட வேண்டும்'' என்றவர் அண்மையில் தன் மாணவி ஒருவருக்கு ஏற்பட்ட பிரச்சனையை விளக்கினார்.

''அன்று எங்கள் கல்லூரி மாணவி என்னிடம் வந்து கூறிய புகார் இது: அவள் வரும் பஸ்ஸில் யாரோ ஒரு மாணவன் தன் புத்தகங்களை அவளுடைய மடியில் போட்டு விட்டு அவன் இறங்கும் இடம் வந்ததும் வாங்கிக் கொண்டு போயிருக்கிறான். ஆரம்பித்திருக்கிறது தொல்லை.

மறுநாளும் அதே மாணவன் இவள் வந்த பஸ்ஸில் ஏறி இவளிடம் வந்து, 'நேற்று என் புத்தகத்தில் வைத்திருந்த ஒரு பொருளைக் காணவில்லை. அதன் விலை ஐந்து ரூபாய். அதை நீதான் தர வேண்டும்.'

என்று கலாட்டா செய்ய, பஸ்ஸில் இருப்பவர்கள் தன்னை வேடிக்கை பார்ப்பதைக் கண்டு அந்த மாணவி வேறு வழியில்லாமல் ஐந்து ரூபாயை எடுத்து நீட்டியிருக்கிறாள். விட்டதா விஷயம்? இன்னும் தொடர்ந்திருக்கிறது தொல்லை. அதன் பிறகு தினமும் அதே போல் வந்து அந்த மாணவன் அவளிடம், "அன்று 5 ரூபாய் கொடுத்தாய். உன்னிடம் நிறைய பணம் இருக்கிறது. இன்று எனக்குப் பணம் கொடு" என்று மிரட்டியிருக்கிறான்.

பயந்து போன அந்த மாணவி என்னிடம் வந்து பிரச்சனையை சொல்லி அழ ஆரம்பிக்கவே உடனே நான் போலீஸ் அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு விஷயத்தை விளக்கினேன். மறுதினமே அவர்கள் மப்டியில் இரண்டு பெண் போலீசாரை அனுப்பி டிரேஸ் செய்து அவனைப் பிடித்துக் கொண்டு போய் விட்டிருக்கின்றனர். நடந்த விஷயம் எதுவும் அந்த மாணவிக்குத் தெரியாது. இரண்டொரு நாட்கள் கழித்து அந்த மாணவியை அழைத்துக் கேட்டேன்.

"அவன் இப்போதெல்லாம் வருவதில்லை மேடம். அவனை யாரோ என்னவோ செய்து விட்டிருக்கிறார்கள்" என்று கூறினாள். தி.நகர் பஸ் நிறுத்தத்திலிருந்து வரும்போது அவளுக்கு நேர்ந்த சம்பவம் இது.

இதை எதற்குச் சொல்கிறேன் என்றால் மாணவிகள் வீட்டிலிருந்து கல்லூரிக்கு வரும் போதோ அல்லது வீடு திரும்பும்போதோ தொல்லை கொடுப்பவர்களின் பெயர் விபரம் பற்றிக் கூட குறிப்பிடத் தேவையில்லை. எந்த பஸ்ஸில் எந்த நேரத்தில் தொல்லைக்குள்ளாகிறார்கள் என்பதை மட்டும் எழுதி கல்லூரி வளாகத்திலுள்ள பெட்டியில் போட்டு விட்டால் போதும். நாங்கள் பிரச்சனை என்று அழைத்தவுடன் போலீஸ் உடனடியாக தேவைப்பட்ட வசதிகளை செய்து கொடுத்து விடுகின்றனர்.

ஒரு விஷயம். தினமும் இங்குள்ள பெட்டியைத் திறந்து பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். இதுவரைக்கும் ஒரு புகார்க்கடிதம் கூட பெட்டியில் யாரும் போட்டதாகத் தெரியவில்லை. மாணவிகளிடம் இருந்து நோ ரெஸ்பான்ஸ்" என்று சொல்லி சிரிக்கிறார்.

# எப்படிச் சமாளித்தேன் எதிர்பாராத செலவை!

ஒவ்வொரு மாசமும் ஒண்ணாந் தேதி வந்தா ஒரே டென்ஷன்தான்.

'வீட்டு வாடகை, பால் கார்டு, மளிகை சாமான், ஸ்கூல் பீஸ், கரண்ட் பில்'னு ஏகப்பட்ட செலவுகள்.

வரவுக்கும் செலவுக்கும் ஒரே இழுபறி, மாசாமாசம் பற்றாக்குறை தான்.

இந்த லட்சணத்துல, ஆறு மாசத்துக்கு முன்னால ஒரு எதிர்பாராத செலவு.

'உங்க பொண்ணுக்கு உடனே டியூஷன் ஏற்பாடு பண்ணுங்க ரொம்ப வீக்கா இருக்கா'ன்னு அவளோட டீச்சர் சொன்னதும் எனக்கு ஒரே ஷாக்.

இருக்கற செலவையே சமாளிக்க முடியலை, இதுல மாசாமாசம் 200 ரூபாய்க்கு எங்கே போறது?

எப்படியோ பல்லைக் கடிச்சுண்டு, செலவைக் குறைச்சு ஒரு மூணு மாசம் டியூஷன் பீஸ் கட்டிப் பார்த்தேன். அதுக்கு மேலே தாக்கு பிடிக்க முடியலை.

அப்பதான் எனக்கு ஒரு ஐடியா தோணிச்சு.

நாம தான் +2 படிச்சிருக்கோமே இங்கிலீஷ் மட்டும் கொஞ்சம் நல்லா தெரிஞ்சா நாமே குழந்தைக்கு டியூஷன் சொல்லித் தரலாமேன்னு யோசிச்சேன்.

நான் விவேகானந்தா இன்ஸ்டிட்யூட் பத்தி நெறய கேள்விப்பட்டிருக்கேன். நானும் அவங்க கோர்ஸ்ல சேரலாம்னு ஒரு போஸ்ட் கார்டு எழுதிப் போட்டேன். அவங்க அனுப்பின ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ் பாடங்களை ரூ. 395/- கட்டி வாங்கி படிக்க ஆரம்பிச்சேன்.

பாடங்களெல்லாம் ரொம்ப ஈஸியா இருந்ததால இங்கிலீஷ் கிராமரை தரோவா கத்துக் கிட்டேன்.

அது மட்டுமில்ல ஸ்போக்கன் இங்கிலீஷ் பாடங்களைப் படிச்சு, அத்தோட அவங்க அனுப்பின கேசட்டை கேட்டு பிராக்டிஸ் பண்ணினதனால இப்போ என்னால இங்கிலீஷ் சகஜமா பேச முடியுது.

இப்போ என்னோட பொண்ணுக்கு நானே டியூஷன் சொல்லித்தர ஆரம்பிச்சுட்டேன்.

அது மட்டுமில்ல, பக்கத்து ப்ளாட்ல இருக்கிற ரெண்டு பசங்களும் என்கிட்ட டியூஷன் எடுத்துக்கறாங்க.

உங்களுக்கும் இங்கிலீஷ் கத்துக் கணும்னு ஆசையா இருக்கா?.

அப்படின்னா இப்பவே, ஒரு போஸ்ட் கார்டுல 'நான் விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்டின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன்'னு எழுதுங்க. அதுல உங்க அட்ரஸை தெளிவா எழுதி, விவேகானந்தா இன்ஸ்டிட்யூட், 9 (B) மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017 என்ற அட்ரஸுக்கு உடனே அனுப்புங்க.

உங்க லெட்டர் கிடைச்சதும் பாடங்களும், ஆடியோ கேசட்டும் V.P.P மூலமா உங்க வீட்டுக்கே வந்துடும்.

தபால்காரர் கிட்ட ரூ 395/- (மற்றும் தபால் செலவை) குடுத்து பாடங்களை வாங்கிப் படிச்சு ஈஸியா இங்கிலீஷ் கத்துக்குங்க.

நிச்சயமா இந்த கோர்ஸ் உங்களுக்கு ரொம்ப யூஸ்ஃபுல்லா இருக்கும்.



P. ரேணுகா
சென்னை.



2 ஸ்பூன் கான்ஃப்ளக்ஸ், 2 ஸ்பூன் சோள மாவு என கலந்து (முட்டையுடன்) ஆம்லட் செய்ய ஆம்லட் அதிக சுவையாகவும், முட்டை மணம் குறைந்தும் இருக்கும். முட்டை பிடிக்காதவர்கள்கூட சாப்பிட விருப்பப்படுவார்கள்.

– பாலா இராஜேந்திரன்

**கல்லூரி பேராசிரியைகளும் விரிவுரையாளர்களும் இதற்கு என்ன பதில் சொல்கிறார்கள் என்று பார்ப்போமே–**

**திருமதி அபிதா சபாபதி**

"பெண்களைப் பொறுத்தவரை அவர்களது சுதந்திரமெல்லாம் வெறும் மனதளவில் மட்டும்தான். செயலில் என்று வரும்போது மட்டும் தயங்குகிறார்கள். தவறு செய்பவர்களை வெளிப்படையாக குறிப்பிட பயப்படுவதுதான் இது மாதிரி புகார்ப் பெட்டிகள் வருவதற்குக் காரணம். இதில் புகார் எழுதிப் போட்டால் மேடம் நம்மை தவறாக நினைத்துக் கொள்வார்களோ அல்லது வீட்டிற்கு இது தெரிந்தால் திட்டுவார்களோ என்று பயந்து கொண்டு புகார் எழுதத் தயங்குகிறார்கள்.

என்னைக் கேட்டால் ஈவ் டீசிங் செய்பவர்களை சம்பந்தப்பட்ட பெண்களே நேரடியாகக் கண்டிக்க வேண்டும். இது மாணவிகளுக்கு மட்டும் ஏற்படும் பிரச்சனையல்ல. எங்களுக்கும்கூட ஏகப்பட்ட பிரச்சனைகள், நடுத்தர வயது ஆண்களால்தான் இந்தப் பிரச்னையே. எனவே இதற்கு ஆங்காங்கே பெட்டிகளை வைப்பதற்கு பதிலாக ஒவ்வொரு பஸ் நிறுத்தத்திலும் காவல் துறையினர் முழு மூச்சுடன் செயல்பட்டு நடவடிக்கை எடுக்கலாம்."

**சுமதி சிவகுமார்**

"பெண்களைக் கிண்டல் கேலி செய்பவர்கள் எந்த இடத்தில் எப்போது செய்வார்கள் என்பதை குறிப்பிட்டு சொல்ல முடியாது. புகார்ப் பெட்டியில் என்னவென்று எழுதிப் போடுவது? இதெல்லாம் எழுதிப் போட்டுத் தீர்கின்ற விஷயமில்லை. காவல் துறைதான் இதில் விழிப்புடன் இருந்து முனைப்புடன் செயல்பட்டு க...

டீசிங் அதிகம். இவர்கள் வாகனம் ஓட்டுவதை இன்னமும்கூட யாரும் சாதாரண விஷயமாக நினைப்பதில்லை. ஏதோ ஜாலியாக டிரஸ் செய்துகொண்டு வெளியே கிளம்பி விட்டார்கள் என்ற தவறான கண்ணோட்டத்துடன் பார்க்கின்றனர்.

இதன் விளைவு பெண்களிடம் சில ஆண்கள் நடக்கும் தவறான அணுகுமுறை. வயது வரம்பு பார்க்காமல் அவர்கள் செய்யும் இந்த அட்டூழியங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்றால் புகார்ப் பெட்டிகளை பொது இடங்களில் வைப்பதுதான் நல்லது."

**டாக்டர் சரஸ்வதி**

"கல்லூரிகளில் வைக்கப்படும் புகார்ப் பெட்டிகளால் ஒரு பயனுமில்லை. பெண் போலீசார் பஸ் நிறுத்தங்களில் இருந்து நேரடியாகவே தவறு செய்யும் ஆண்களைப் பிடிக்க வேண்டுமே தவிர இது போன்ற புகார்ப் பெட்டி வைத்து அல்ல."

**திருமதி சாந்தி லக்ஷ்மி**

"சமுதாயத்தில் பெண்களின் முன்னேற்றத்திற்கென்று என்ன தேவையோ அதற்கு பாடுபட்டால் பரவாயில்லை. இந்த புகார்ப் பெட்டிகள் எதற்கு? உணர்ச்சி வேகத்தில் ஒரு சில ஆண்களால் செய்யப்படும் இந்தத் தவறுக்குச் சட்டங்கள் கடுமையாக்கப் பட்டிருந்தாலும் காவல் துறையின் அணுகுமுறை சரியாகப் படவில்லை. புகார்ப் பெட்டிகள் வைப்பதன் மூலம் இதற்கு நிரந்தரத் தீர்வு காண முடியாது என்பதே என் கருத்து."

**இந்த மகளிர் கல்லூரிக்குள் புகார்ப் பெட்டி வைத்திருக்கும் சம்பந்தப்பட்ட ஏரியாவைச் சேர்ந்த பட்டினப்பாக்கம் ஈ.எஸ். சரக காவல் நிலையத்திற்குச் சென்று அங்கு விசாரித்தபோது நமக்குக் கிடைத்த தகவல்கள் –**

அனைத்துக் கல்லூரிகளிலும் இது போன்ற பெட்டிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. இது எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்திருப்பதுடன் குற்றங்கள் நடைபெறுவதை தடுக்கும் வகையில் விழிப்புணர்ச்சியை அனைவரிடமும் ஏற்படுத்தி உள்ளது. கேலி, கிண்டல் போன்ற இடையூறுகள் பொதுமக்களுக்கு இல்லாமல் இருக்கவே இந்த ஏற்பாடு. கல்லூரி வளாகத்திற்குள்ளோ அல்லது கல்லூரிக்கு வெளியிலோ எதுவும் நடந்திருந்தாலும் எங்களுக்கு அது பற்றிய தகவல் கிடைத்திருக்கும். நாங்கள் புகார்ப் பெட்டியை வைத்திருக்கும் கல்லூரி...

# ரிபூரண உணவு பானம்

## 1-3 வயது குழந்தைகளுக்கு.

# புதிய

NET WEIGHT 500g

NEW

**Nestlé**

**Cereal Milk Drink**

Powder

Mixed Fruit

Junior
After 12 months

வளரும் உங்கள் குழந்தையின் பல்வேறு மைல்கற்கள் - அவனது முதல் தளிர்நடை, மழலை கொஞ்சும் வார்த்தைகள்... இவை அனைத்துக்கும் தேவை ஸ்பெஷல் போஷாக்கு. ஆகவேதான் நெஸ்லே உருவாக்கியுள்ளது **ஸிரியல் மில்க் டிரிங்க்** - ஓர் பரிபூரண உணவு பானம். அது பாலின் நற்பண்புகளை, எனர்ஜி தரும் தானியங்களுடன் ஒன்று சேர்த்து, மேலும் அவனுக்கு வலுவூட்ட தேவையான அயர்ன், விட்டமின்கள் மற்றும் மினரல்களை அளிக்கிறது. இதில் மூளை அபிவிருத்திக்கு மிகவும் அத்தியாவசியமான EFA-யும் அடங்கியுள்ளது. இதன் ருசி மிகுந்த பழக்கலவை சுவையை உங்கள் குழந்தை பெரிதும் விரும்புவான்.

எனவே உங்கள் குழந்தைக்கு செரிலாக் மில்க் டிரிங்க்கின் நற்பண்புகளை அளியுங்கள். அவன் முன்னிலையில் இருக்க உதவுங்கள்.

Nestlé
Junior
Foods.

பாலின் நற்பண்புகள். அத்துடன் பல அதிகம்.




# மூளைச் சலவை

# சென்று வேலையை முடித்து விடு!

இந்த கம்ப்யூட்டர் யுகத்தில் மெக்கானிக்கல் இஞ்சினீயரிங் டிப்ளமாதான் கிடைத்திருக்கிறது. இதைப் படித்து என்ன செய்ய முடியும்?

இப்படி ஒரு மனப் பள்ளம் படிப்பவனுக்குள் வந்துவிட்டால் அவன் எங்கே வகுப்பறையில் கவனம் செலுத்த? எங்கே படித்து முடிக்க? எங்கே தன்னம்பிக்கை பெற? எங்கே முன்னேற?

படித்து முதல் மாணவனாக நிறைய அனுபவத் தேர்ச்சியுடன் வெளி வந்த பின் தெரிந்தது.



தமிழ்நாடு விவசாயப் பொறியியல் துறையில் மெக்கானிக்கல் இஞ்சினீயரிங் உபயோகப்படும் என்று. புல்டோஸர் போட்டு தரிசு நிலங்களில் புதர் முள் காடுகளை அழிக்கவும் மண்ணைப் பரிசோதித்து விஷத் தனங்களை வெளுத்துக் கரைத்து புது உரங்கள் போட்டு 'பொன்னி' நெல் விளைவிக்க மெக்கானிக்கல் இஞ்சினீயரால் கூட முடியும் என்று தெரிந்தது. பயனில்லாத படிப்பென்று ஒன்று உண்டா? பயனைப் பற்றிய யோசனை காரியத்தைப் பண்ணுவதற்கு முன், வரலாமா?

'தெய்வத்தால் ஆகாதது எனினும் முயற்சி தன் மெய் வருத்தக் கூலி தரும்' என்று பொய்யா மொழி சொன்னது என்ன விளையாட்டுக்கா?

கையில் இருக்கும் வேலையைத் திறம்பட செய்து விடுங்கள். முடித்த பின் அடுத்த வேலை. பலன் எங்கே என்று தேடிக் கொண்டிருக்கத் தேவையில்லை. அந்த சிந்தனை வந்தாலே கையிலிருக்கும் காரியம் பாழாகும்.

கையில் இருக்கும் வேலையைச் செய்து முடியுங்கள் என்றால் தண்டமே! கடனே! என்றல்ல.

'இந்த வேலை என்னை நம்பித்தான் தரப்பட்டிருக்கிறது. இந்த வேலையை என்னைவிட நன்றாக யாராலும் செய்து விட முடியாது.'

'இந்த வேலை மிகவும் சந்தோஷமான விஷயம். இந்த வேலையை நான் செய்வதால் நிறைய பேருக்கு சௌகர்யமாகவும் சந்தோஷமாகவும் இருக்கும். இந்த வேலையை நல்லவிதமாக செய்து முடிப்பது மட்டுமே எனக்கு சந்தோஷத்தைத் தந்துவிடும்.' இப்படி எண்ணங்களோடு கையிலிருக்கிற வேலையைச்






செய்து முடிக்க வேண்டும்.

வேலை பத்து பேருக்குச் செய்யும் சமையலாக இருக்கட்டுமே!

நூறு வில்லை மைசூர்பாகு கிளறிக் கொட்டுவதாக இருக்கட்டுமே!

'பத்தியாளர்' தகுதியில் எழுதப்பட வேண்டிய ஒரு கட்டுரையாக இருக்கட்டுமே!

பெங்களூரில் மேம்பாலம் கட்டுகிற பொறியாளர் மேற்பார்க்கும் சிமெண்ட் கலவையாய் இருக்கட்டுமே! அப்துல் கலாம் செய்யும் ஆராய்ச்சியாக இருக்கட்டுமே! ஏ.ஆர். ரஹ்மான் மனசில் வரும் வடிவம் பெறாத டியூனாக இருக்கட்டுமே!

அரசாங்க அலுவலில் ஆடிட் பத்திக்குப் பதில் தரும் விவரத் தேடலாக இருக்கட்டுமே!

கார்கில் முன்னணியில் போர் வீரனின் உறுதியான அடுத்த கட்ட•கால் பதிவாக இருக்கட்டுமே!

கைவசம் உள்ள வேலையை பலாபலனைப் பற்றிய சிந்தனையின்றி அதே சமயம் திறம்பட செய்து முடியுங்கள்.

வெற்றிக் கொடி நாட்டுவதற்கு அது போதும். வெற்றிக் கொடி அரைக் கம்பத்தில் நின்று விட்டதா... நிறைய பேர் விஷயத்தில் காரணங்கள் இதோ....

'இவானுக்குப் பண்ணிக் கொட்டி பெரிசா சர்டிபிகேட் வாங்கிடப் போறோனாக்கும்'.

பத்து பேர் சமையல் அம்பேல்!

'வீட்டில் செய்தது தானேன்னு இளக்காரம்தான் செய்யப் போறாங்க. பேசாம கடையில வாங்கி ஒத்தை வில்லையை நீட்டாம... இது என்ன போர்'.




மைசூர் பாகு தூளாய்ப் போயிற்று.

'தக்ஷிணாமூர்த்தி'யைப் பற்றி என்னத்தை எழுத? எல்லாருக்கும் ஏற்கெனவே தெரிந்த விஷயம். கர்ப்பக் கிரகத்து சைடில இருக்கும். புராணத்தில் கூட விரிவாய் என்ன இருக்கு? இதை எழுதி பேர் வாங்கி. கூடை கூடையாய் சம்பாதித்து விடுவேனாக்கும்'.

பத்தியாளர் காணாமலே போனார்.

'இந்தக் கலவையை இன்னிக்குத் தீர்மானிச்சு மேம்பாலம் பத்து நாளில் ரெடியாயிடுமா என்ன? மேம்பாலம் முடிவதற்குள் நான் ரிடையரே ஆயிடுவேன்'.

நல்ல பேர் வாங்கித் தரக் கூடிய பணி அடுத்தவன் கைக்குப் போயிற்று.

'இந்தியாவில் நுட்பம் எங்கே கிடக்கிறது? வசதி வாய்ப்பு தான் எங்கே? இங்கு வேலை செய்து என்ன பிரயோசனம்?'

அயல் நாடுகளுக்கு ஓடிப் போனவர்கள் கரிபூசிக் கொண்டார்கள் அப்துல் கலாமின் சாதனைக்கு முன்.

'புது யுக்தி வரவேற்கப்படுமா? பழக பழகதான் அதையே கேட்டுக் கேட்டு ஜனங்க பழகியிருப்பாங்க. நமக்குப் பழகம் வரல. புதுசுக்கும் பயம்.' இசைத் துறையில் நிற்க முடியாமல் ஓடிப் போனார்கள் ரஹ்மானின் போட்டிகள்.

'இந்த ஊழலும் நேர்மையின்மையும் அரசியல் சூள்ள நரித்தனங்களும் நிறைந்த தேசத்துக்காக உழைக்கத்தான் வேண்டுமா? என்ன கிடைக்கும் பதிலுக்கு' என்று மட்டும் ஒரு கார்கில் வீரன் நினைத்து விட்டால் என்ன ஆகும்?

கண்ணபிரான் கீதையில் அருளிச் செய்தது

அர்ச்சுனனுக்கு மட்டுமா?

'உன் வீரம் யாருக்கு உறுதி என்பது பற்றிய குழப்பம் வேண்டாம்.

யாரை எதிர்க்கிறோம் எதற்காக எதிர்க்கிறோம் முடிவு என்னவாகும் என்பது பற்றின யோசனை வேண்டாம்.

இன்றே முடி. இப்போதே பார். எதிரியின் முகாம், அழி. அழித்துவிடு.'

இது கீதாசாரியன் கட்டளை.

ஒரு தெய்வீக கட்டளைக்குக் கீழ்ப்படிவது போல கையில் கிடைத்த வேலையை மிகுந்த சந்




தோஷத்தோடு மனம் நிறைந்த தெளிவோடு திருப்தியோடு சின்னச் சின்ன விஷயத்தில் கவனம் வைத்து நெருக்கடிகள் தடைகளைப் பொருட்படுத்தாமல் உழைப்புக்கு அஞ்சாமல் 'இதுதான் வாழ்நாளின் ஒரே வாய்ப்பு'.

'இன்று என் ஒரே நாள்' என்கிற நினைப் போடு பண்ணி முடித்து விட்டால்...

பட்டொளி வீசிக் கொண்டு அதோ! அங்கே! வெற்றிக் கொடி!

பத்து பேர் சமையல்!

காய்கறி விலை அதிகமே! குறைந்த விலை யில் சில உண்டு. கடலைப் பருப்பை ஊற வைத்து, அரைத்து, அடைபோல தோசைக் கல்லில் தட்டி, பதினைந்து நிமிடம் குறைந்த தீயில் வேகவிட்டு, உதிர்த்து, மலிவாக உள்ள காயோடு பருப்பு உசிலி செய்தால் போயிற்று! பால் திரிந்து விட்டதே! அதனால் என்ன தேங் காய் அரைத்து வெல்லப் பாயசம் செய்வது!

பாதியில் கரெண்ட் போய்விட்டதே! அத னால் என்ன? செய்! செய்! செய்து விடு! செய்து முடித்து விடு!

ஆடிட் பத்திக்கு பதில்.

முதல் கோப்பைக் காணவில்லை. போன மாதத்திய ~~அரை~~ குறை பதில். எங்கே போயிற்று கண்டு பிடி. போன இடத்தில் இன்று கூட்டம் காலி.

யார் இருந்தார் அப்போது? அவரைப் பிடி. அவர் நினைவிலிருந்து சின்னப் பொறி எடுத் துத் தந்தார்.

கொண்டு வா மூலப் பிரதியை. பண்ணி ரெண்டாயிரத்து சில்லறை ஐட்டங்களா?

உன் ஏரியாவுக்கு மூவாயிரம் ஐட்டம் தானே! அதை மட்டும் பிரதி எடுத்துக் கொள்.

'இத வெச்சிக்கிட்டு என்ன செய்வீங்க? பழைய பில்லைப் பார்க்காம பதில் எழுத முடி யாது. அது தொலைஞ்சு போயி ஆறு வருட மாச்சு' யாரோ கொக்கரிப்பு!

கிடைக்கும். கிடைக்கும். கிடைத்தது. ஆடிட் மறுப்பிலேயே ஒரு தப்பு இருந்தது. யார் கண்ணிலும் இதுவரை படாத தப்பு. அதோடு இன்னும் சில செய்து முடித்து— ஓவர். பலநாளாய் நிர்வாகத்துக்கு சுமையாய் இருந்த ஆடிட் பத்தி.

கையில் இருக்கும் பத்தி.

அதை முடிப்பதே சந்தோஷம். அது முடிந் தால் என்ன கிடைக்கும் என்கிற அனுமானத் தில் என்னதான் வரும்? நிராசையும் தோல்வி யும்தான் முடிவாகும்.

கையிலிருக்கும் வேலையைச் செய்து முடிக்க மன சக்திகள் அத்தனையையும் அதற் குள்ளேயே குவிக்க வேண்டும். உடல் உழைப்பு முழுவதையும் அதில் போட வேண்டும். ஒரு சின்ன தவறுக்கும் இடறலுக்கும் இடம் விடா மல் முழுசாய் பண்ணி விட வேண்டும்.

இந்த செயல் திறனுக்கு கிடைக்கப் போகிற புகழோ பணமோ வசதியோ வேறெதுவோ உத்வேகமாக முடியாது. அதை முடிக்கிற சந் தோஷம் மட்டுமே நல்ல உத்வேகமாக இருக்க முடியும். எந்த வயதிலும் எந்த இடத்திலும் எந்த வேளையிலும் கைவேலையை முழு மனசால் செய்து முடித்து வந்தாலே போதும்.

வெற்றி மேல் வெற்றிதான்.

— **மாலதி**

---

**ஃப்ரைட் ரைஸ், வெஜிடபிள் பிரி யாணி செய்யும் பொழுது அத்துடன் 2 (அ) 3 ஸ்பூன் சோயா சாஸ் (அ) கெச்சப் விட்டுக் கிளறி இறக்குங்கள். மணமும், சுவையும் ஏ ஒன்னாக இருக்கும். தக்காளி சாதத்திலும் சாஸ் கலந்து கொண்டால் நன்றாக இருக்கும்.**





**எந்தக் கீரையில் பொரியல் செய்தாலும், கடுகு, உ.பருப்பு, மிளகாய் வற்றலுக்குப் பதில், வெங்காயம், பச்சைமிளகாய், பூண்டு, சர்க்கரை சிறிது என சேர்த்து செய்ய சுவையும், மணமும் கூடுதலாக இருக்கும். இந்தக் கீரைப் பொரியலை சாதத்தில் பிசைந்தும் சாப்பிடலாம்.**

**— பாலா இராஜேந்திரன்**

பொருள் : 


## முதல் பரிசு

### மல்ட்டி ஃப்ரூட் பாயாஸம்

தேவையான பொருட்கள் :
கனிந்த மாம்பழம் - 1,
ஆப்பிள் - 1,
வாழைப்பழம் - 1,
பன்னீர் திராட்சை - 100 கிராம்,
சாரை பருப்பு - 100 கிராம்,
ஏலக்காய் - 4,
குங்குமப்பூ - 1 சிட்டிகை,
பால் - 1 லிட்டர்,
கஸ்டர்ட் பவுடர் - 100 கிராம்,
சர்க்கரை - 2 கப்,
மில்க் மெய்ட் - 4 டேபிள் ஸ்பூன்.

செய்முறை :

முதலில் பாலை நன்றாகக் காய்ச்சி சர்க்கரை சேர்த்த பின் ஒரு வாயகன்ற பாத்திரத்தில் ஊற்றி ஆறவிடவும். அதிலிருந்து ஒரு கப் பால் எடுத்து கஸ்டர்ட் பவுடரை



• எச். ஹலீமா ஹாஜி

கட்டியில்லாமல் கரைத்து அதிக பாலில் சேர்க்கவும். இத்துடன் மில்க்-மெய்டையும் ஊற்றி ஆடை விழாமல் நன்றாகக் கலக்கி விடவும். ஏலக்காயைத் தோல் நீக்கி தட்டிப் போடவும். குங்குமப் பூவை 1 ஸ்பூன் சூடான பாலில் கையால் கரைத்து பாலுடன் சேர்க்கவும்.

மாம்பழம், வாழைப்பழம், ஆப்பிள் மூன்றையும் தோல் நீக்கி பொடியாக நறுக்கிப் பாலில் சேர்க்கவும். திராட்சையை உதிர்த்து நன்றாக கழுவி அத்துடன் போடவும். சாரைப் பருப்பை நெய்யில் பொரித்தோ அல்லது பச்சையாகவோ கொட்டவும். எல்லாவற்றையும் நன்றாகக் கலந்து ஃப்ரிட்ஜில் ஒரு மணி நேரம் மூடி வைக்கவும். நன்றாகக் குளிர்ந்ததும் வெளியில் எடுத்து மீண்டும் ஒருமுறை நன்றாகக் கலக்கி விட்டு பழங்களுடன் உயரமான கண்ணாடி தம்ளர்களில் ஊற்றிக் கொடுத்தால் ஒன்ஸ்-மோர் கேட்பார்கள். செய்வது சுலபம். பழங்களை வேகவிடாமல் அப்படியே சேர்ப்பதால் சத்தான சுவையான பாயஸமாக இது இருக்கும்.

ஸாலட்டை விட அசத்தலாக இருக்கும். விருந்தின் முடிவில் பரிமாறுவதற்கு கலர்ஃபுல்லாக இருக்கும். கடைகளில், மேங்கோ, பனானா, ஸ்ட்ராபெர்ரி ப்ளேவர்களில் கஸ்டர்ட் பவுடர் கிடைக்கிறது. விருப்பமானால் இவைகளையும் கலந்து கொடுக்கலாம்.

– எச். ஹலீமா ஹாஜி, கும்பகோணம்.



• ஜி. சாரதா

## இரண்டாம் பரிசு

• உஷா பட்டாபி



## பைனாப்பிள் ஜாமூன் மிக்ஸ்

*தேவையான பொருட்கள் :*

பழுத்த மீடியம் சைஸ் பைனாப்பிள் – 1

பலாச்சுளைகள் – 10,

சர்க்கரை – ¾ கிலோ,

முந்திரிப் பருப்பு – 50 கிராம்,

ரோஸ் எஸென்ஸ் – சில துளிகள்,

குலோப்ஜாமூன் மிக்ஸ் பவுடர் – 200 கிராம்,

சமையல் எண்ணெய் – 300 மி.லி.,

நெய் – 25 கிராம்,

செர்ரி டிரை ப்ரூட்ஸ் – 50 கிராம்.

*செய்முறை :*

முதலில் பைனாப்பிளை நன்றாகத் தோலை சீவி விட்டு பொடிப் பொடி துண்டுகளாக நறுக்கிக் கொள்ள வேண்டும். பலாச்சுளைகளையும் சிறு சிறு துண்டுகளாக வெட்டி இரண்டையும் ஒரு பாத்திரத்தில் இட்டு ஒரு தம்ளர் தண்ணீர் விட்டு, அதில் ஜீனியையும் போட்டு ஊற வைக்கவும். பாத்திரத்தை மூடி போட்டு மூடாமல் ஒரு துணியால் வேடுகட்டி வைத்து விடவும். இதை முதல் நாள் இரவே செய்து வைத்து விட வேண்டும்.



• ஜே. லெக்ஷ்மி

காலையில் 'ஜாமூன் மிக்ஸ்' மாவை எடுத்து சிறிது நீர் விட்டு, கெட்டியாகப் பிசைந்து சிறு சிறு உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு அடுப்பைப் பற்றவைத்து, வாணலியில் எண்ணெய் விட்டு ஜாமூன் உருண்டைகளைப் போட்டு எடுக்கவும். லேசாக சிவந்தவுடன் எடுத்து விட வேண்டும்.

பிறகு, இரவு ஊறவைத்த பைனாப்பிள் பலாச்சுளை கலவையை எடுத்து அடுப்பில் வைத்து நன்கு கிளறவும். கொஞ்சம் கெட்டியாக ஜாம்பதத்தில் வந்தவுடன், நெய்யில் வறுக்கப்பட்ட சிறு சிறு துண்டுகளாக்கப்பட்ட முந்திரிப் பருப்பை போட்டுக் கிளறி அடுப்பிலிருந்து இறக்கி விடவும்.

இறக்கி வைத்த கலவையில், ஜாமூன் உருண்டைகளைப் போட்டு லேசாக கிளறி விடவும். சில துளி ரோஸ் எஸென்ஸ் விட்டுக் கிளறினால் மிகவும் வாசனையாக இருக்கும். மேலே செர்ரி டிரை ப்ரூட்ஸை தூவி விடவும். கலவையை இரண்டு மணி நேரம் ஆறவிட்டுப் பரிமாறவும். இதை ஒரு பாட்டிலிலோ டப்பாவிலோ எடுத்து வைத்துக் கொள்ளலாம். ஒரு மாதம் வரை கெடாது.

– ஜே. லெக்ஷ்மி, திருச்சி – 22.

• என். பரமேஸ்வரி



## மூன்றாம் பரிசு

## பலாப்பழ இட்லி

தேவையான பொருட்கள் :
பச்சரிசி - 200 கிராம்,
தேங்காய்த் துருவல் - 1½ கப்,
பெரிய பலாச்சுளை பெரியது - 4,
ஏலக்காய் - 1 ரூபாய்க்கு,
வெல்லம் - 200 கிராம்,
உப்பு - தேவைப்பட்டால் சிறிது போடவும்.

செய்முறை :
அரிசியை ஊறவைக்கவும். பலாச்சுளை களை பாதி அரைபட்டவுடன் அரிசி, தேங் காய்த் துருவல், வெல்லம், ஏலக்காய், உப்பு எல்லாம் சேர்த்து அரைக்கவும். கலவை கெட்டியாக இருக்க வேண்டும். வாழையி லையை கையகலத்தில் வெட்டிக் கொண்டு அதன் நடுவில் தோசை கனத்தில் இட்லி அகலம் தட்டவும். அதன் மேல் மற்றொரு வாழை இலை வைத்து அதே போல் தட்ட வும். கலவை இருக்கும் வரை இதே போல் தட்டி இட்லி வேகவைத்து எடுப்பது போல் குக்கரில் வைத்து எடுக்கவும். ஒரு புறம் தேவைப்பட்டால் நெய் தடவி பரிமாறலாம். மாலை நேர சிற்றுண்டியாக இதைப் பரிமாற லாம். குழந்தைகளுக்கு இது மிகவும் பிடிக்கும்.

— ஜி. சாரதா கணேசன், தேனி.

## நான்காம் பரிசு

## மேஜிக் ஃப்ரூட் பால்

தேவையான பொருட்கள் :
மாம்பழம் - 6,
சப்போட்டா பழம் - 1,
ஆப்பிள் - 1,
ஆரஞ்சு - 1,
வாழைப்பழம் - 1,
பேரீச்சம் பழம் - 10,
உலர் திராட்சை - 20,
அவல் - ½ கப்,
முந்திரிப் பருப்பு - 6,
பாதாம் பருப்பு - 6,
பூசணி விதை - 50,
தேன் - 4 ஸ்பூன்,
நெய் - 2 ஸ்பூன்,
பால் - ½ கப்,

தேங்காய்த் துருவல் - ½ கப்.

*செய்முறை :*

1. நல்ல கெட்டியான மாம்பழங்களை தேர்ந்தெடுத்துக் கழுவி குறுக்குவாட்டில் கத்தியால் வட்டமாக வெட்டவும். மேல் பகுதியை மெதுவாக இழுத்தால் அழகிய மாம் பழக் கிண்ணம் கிடைக்கும். அடுத்த பகுதி கொட்டையுடன் இருக்கும். மெதுவாக கொட்டையை கத்தியால் பெயர்த்து எடுக்கவும்.



இதே போல் எல்லா மாம்பழங்களையும் கிண்ணங்கள் தயாரித்து ஃப்ரிட்ஜில் வைக்கவும்.

2. தேங்காய்த் துருவல், பாதாம் பருப்பு, பூசணி விதை, முந்திரிப் பருப்பு இவற்றை நைசாக அரைத்து நெய், தேன், பால் சேர்த்து வாணலியில் கொட்டி அடிபிடிக்காமல் கிளறவும். கலவை கெட்டியானதும் இறக்கி ஆற விடவும்.

3. அவலைக் கழுவி பாலில் ஊற வைக்கவும்.

4. எல்லா வகையான பழங்களையும் கழுவி தோல், கொட்டைகள் நீக்கி நறுக்கி வைக்கவும்.

5. ஃப்ரிட்ஜில் இருந்து மாம்பழக் கிண்ணங்களை வெளியே எடுத்து தட்டில் அடுக்கவும்.

6. ஊறவைத்த அவல், பழத்துண்டுகள், கிளறிய விழுது, திராட்சை எல்லாவற்றையும் சீராகக் கலந்து ஒவ்வொரு மாம்பழ கிண்ணத்தையும் சமமாக நிரப்பவும்.

7. நிரப்பிய இரு கிண்ணங்களையும் முழு மாம்பழம் போல் பொருத்தி மறுபடி ஃப்ரிட்ஜில் ஒரு மணி நேரம் வைக்கவும்.

8. பிறகு வெளியில் எடுத்து வட்ட வட்ட வில்லைகளாக நறுக்கி, அடுக்கிப் பரிமாறவும். மாம்பழக் கிண்ணத்திலேயே ஸ்பூன் போட்டு ஐஸ்க்ரீம் போலவும் சாப்பிடலாம்.

9. பார்த்தால் மாம்பழம், பிரித்தால் பலவகை தேன் பழங்கள்.

– உஷா பட்டாபி, பொள்ளாச்சி – 1.



ஐஸ்க்ரீம் சாப்பிட்ட உடனே ஒரு கால் தம்ளர் சூடாக வெந்நீரை குடிக்கச் சொல்லுங்கள். கண்டிப்பாகச் சளி பிடிக்காது.

– லக்ஷ்மி ரங்கநாதன்.

# ஐந்தாம் பரிசு

## புரூட் டோக்ளா

*தேவையான பொருட்கள் :*

பாதிரி மாம்பழம் – 1 (பெரியது),
பலாச்சுளை – 5 (கொட்டை நீக்கியது),
வாழைப்பழம் – 2 (தோல் நீக்கியது),
பேரீச்சம் பழம் – 15 (கொட்டை நீக்கியது),
அன்னாசிப் பழத் துண்டுகள் – 1 கப்,
தேங்காய்ப் பால் – ½ லிட்டர்,
பன்னீர் – ½ கப்,
முந்திரி – 15,
உலர்ந்த திராட்சை – 1 டேபிள் ஸ்பூன்,
சர்க்கரை – ½ கப்,
ஏலக்காய்ப் பொடி – சிறிதளவு,
நெய் – 1 கப்,
கேசரி பவுடர் – சிறிதளவு,
உப்பு – 1 சிட்டிகை.

*செய்முறை :*

1. மாம்பழத்தைத் தோலை எடுத்து விட்டு அதன் சதைப்பகுதியை எடுத்துக் கொள்ள வேண்டும்.

2. மாம்பழக் கூழ், பலாச்சுளை, வாழைப் பழம், பேரீட்சைப்பழம், அன்னாசிப்பழம் இவற்றைத் தண்ணீர் ஊற்றாமல் மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும்.

3. அடுப்பில் கடாயை வைத்து சூடு வந்ததும் அரை கப் நெய் ஊற்றி, அரைத்து வைத்த பழக் கூழை அதில் கொட்டி கிளறிக் கொண்டே இருக்க வேண்டும்.

4. 5 நிமிடம் சென்ற பிறகு தேங்காய்ப் பாலை அதில் ஊற்றி, பன்னீரை (நன்கு பிசைந்து) போட்டுக் கிளற வேண்டும்.

5. சர்க்கரை சுவைக்காக ஒரு சிட்டிகை உப்பு, ஏலக்காய்ப் பொடி, கேசரிப் பவுடர் இவற்றைப் போட்டு நெய் விட்டுக் கிளற வேண்டும்.

6. அல்வா பதத்திற்கு வந்தவுடன் நெய் தடவிய தாம்பாளத்தில் இதனைக் கொட்டி சமமாக பரப்பவும். முந்திரிப் பருப்பு, திராட்சை கொண்டு அலங்கரிக்கவும். (நெய் இருந்தால் மேலேயும் தடவலாம்)

7. நன்கு ஆறியவுடன் கத்தியால் துண்டங்கள் போட்டுப் பரிமாறலாம்.

இந்தக் கலவையை தட்டில் கொட்டி துண்டு போடாமல் போளி செய்யவும் பயன் படுத்தலாம்.

– என். பரமேஸ்வரி,
மயிலாடுதுறை.

# இலவசம்!

## ரூ. 450 மதிப்புள்ள
## சக்தி சூப்பர் இங்கிலீஷ் கோர்ஸ்
## அனைவருக்கும் இலவசம்!

**15வது ஆண்டு விழா!**

கல்வித் துறையில் கலங்கரை விளக்கம்எனத் தமிழக மக்களால் புகழ்ந்து பாராட்டப்படும் சக்தி காலேஜின் 15 ஆவது ஆண்டுவிழாவை முன்னிட்டு ஆங்கிலப் பயிற்சி பாடங்கள் **அனைத்தும் இலவசம்!**




Estd. 1984




ஓர் ஆசிரியர் உங்கள் அருகிலிருந்து பயிற்சி அளிப்பது போன்று உருவாக்கப்பட்டுள்ள ஒப்பற்ற பயிற்சி முறையை உங்களுக்காகவே வழங்குகிறோம் **இலவசமாக!**




**25 பாடத் தொகுப்புகள்!**

ஆரம்ப நிலையிலிருந்து தொடங்கி, இலக்கணம், வாக்கிய அமைப்பு முறை, பேச்சுப் பயிற்சி போன்ற அனைத்தும் அடங்கியது சக்தி சூப்பர் இங்கிலீஷ் கோர்ஸ். இப்பொழுது உங்களுக்கு கிடைக்கிறது **இலவசமாக!**

**இவை மட்டுமா?**

**25 புத்தகங்கள் தவிர**

1. சக்தி இங்கிலீஷ்-தமிழ் டிக்ஷ்னரி
2. சக்தி லெட்டர் ரைட்டிங் கோர்ஸ்
3. சக்தி டிக்ஷ்னரி ஆஃப் ஃப்ரேசஸ்
4. சக்தி டிக்ஷ்னரி ஆஃப் சினானிம்ஸ் அண்ட் ஆன்டனிம்ஸ்
5. சக்தி டிக்ஷ்னரி ஆஃப் ப்ராவர்ப்ஸ்

இந்த 5 புத்தகங்களும் இலவசமாக அனுப்பப்படும். இப்பயிற்சியில் 15 நாட்களுக்குள் சேருவோருக்கு மட்டுமே இச்சலுகை!




## 25+5=30 புத்தகங்களையும் இன்றே பெறுங்கள் இலவசமாக!

### பாடங்களை இலவசமாகப் பெறுவது எப்படி?

1. அருகிலுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து உடனே அனுப்புங்கள்.
2. இக் கூப்பனை ஜெராக்ஸ் செய்து அனுப்பக் கூடாது.
3. கூப்பனைப் பூர்த்தி செய்து ஒரு கவரில் வைத்து ரூ. 3/-க்கான ஸ்டாம்ப் ஒட்டி அனுப்ப வேண்டும்.
4. போதிய ஸ்டாம்ப் ஒட்டாத கவர்கள் ஏற்றுக் கொள்ளப் படமாட்டாது.
5. ஒருவர் ஒரு கூப்பனை மட்டுமே அனுப்பவேண்டும்.
6. பாடங்கள் அனைத்தும் V.P.P. மூலமாக அனுப்பப்படும்.
7. இங்கிலீஷ் கோர்ஸ் பாடங்கள் அனைத்தும் இலவசம்தான். இருப்பினும் விளம்பரச் செலவு, தபால் செலவு, பாடங்களை பேக் செய்து அனுப்பும் செலவு மற்றும் இதர செலவினங்களுக்காக ரூ. 100/- மட்டும் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
8. இந்த இலவசச் சலுகை 5000 (ஐந்தாயிரம்) பேர்களுக்கு மட்டுமே வழங்க இயலும். எனவே, சலுகை பெற முந்துங்கள்!
9. பூர்த்தி செய்யப்பட்டக் கூப்பனை சக்தி காலேஜ், 13, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-600017 என்ற முகவரிக்கு உடனே அனுப்புங்கள்.

---

**சக்தி காலேஜ்,** 13, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-600017.

28

நான் சக்தி காலேஜ் சூப்பர் இங்கிலீஷ் கோர்ஸில் சேர விரும்புகிறேன். எனக்குப் பாடங்களை இலவசமாக அனுப்புங்கள். விளம்பரச் செலவு, தபால் செலவு மற்றும் இதர செலவினங்களுக்காக ரூ. 100/-ஐத் தபால்காரரிடம் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்கிறேன்.

எனது பெயர் :......................................................

முகவரி :......................................................

......................................................

......................................................பின் கோடு......................



மேனகா இல்லாம இந்த ஊருக்கு வருவது இதுதான் முதல் தடவை. மூன்று நாட்களாக சரவணன் வீட்டிலேயே முடங்கிக் கிடக்கிறான். மேனகா இருந்தால் இப்படிக் கிடக்கத் தோன்றுமா? அம்மா வீட்டில்தான் பொருந்துமா? காலையில் தங்கை வீட்டிற்குப் போய்விட்டால் அத்தோடு இரவு தான் வருவான். தங்கை வீட்டிற்குச் சென்றவுடன், அவன் தலையைப் பார்த்தவுடனே இருக்கும் வேலை போதாதென்று ஏலக்காய் டீ போட ஆரம்பிப்பாள் மேனகா.

''கோவா வாங்கிட்டு வந்திடு. அண்ணன் பாக்கெட் குலோப் ஜாமூன் சாப்பிடாது'' கோவா வாங்கி குலோப்ஜாமூன் சில மணி நேரங்களில் ரெடியாகி விடும். ''அண்ணா அண்ணா!'' என்று மாய்ந்து மாய்ந்து செய்பவள். இனிமேல் அப்பேற்பட்டவளை எங்கே பார்ப்பது? நினைக்க நினைக்க அழுகை பொங்கிப் பொங்கி வந்தது.

சாகிற வயசா அது? இருபத்து ஐந்து வயதிற்குள் உலகத்தை விட்டு எப்படி மறைய முடிந்தது? விழுப்புரம் அருகே மாப்பிள்ளையோடு ஏதோ திருமணத்திற்குச் சென்று விட்டுத் திரும்பும் போது, கார் ஆக்ஸிடென்டாகி அந்த இடத்திலேயே மறைந்து போனவள் மேனகா.

'எப்படிம்மா? என்னைல்

# மனம்

லதா முகுந்தன்

லாம் விட்டுட்டுப் போக முடிந்தது?' தனக்குள்ளே ஒரு ஆயிரம் தடவையா வது இந்தக் கேள்விகளை கேட்டிருப் பான். தலையைக் கவிழ்த்துக் கொண்டு அமர்ந்தபோது கைகளின் வழியே கண்ணீர் கொட்டியது.

"சரவணா, இன்னும் எத்தனை நாளைக்கு அழ முடியும்? அழுதாலும் போனவ திரும் பியா வரப் போறா?" முகம் வெளிறிப் போய் கண்கள் கருவட்டம் கட்டிப் போய், உடல் பதறிப் போன நிலை யில் இன்றோ நாளையோ என்றி ருக்கிற அம்மா, தன்னை தேற்று கிறான்.

"நாம கொடுத்து வச்சது அவ்வளவுதான். முத்து மாதிரி பெண்ணை பெத்துட்டு தொலைச்சிட்டு நிக்கணும்னு விதி." அம்மா பிழியப் பிழிய அழுகிறாள். சரவ ணனும் கைகளால் முகத்தை மூடியபடியே கேவுகிறான்.

"சரவணா நடந்தது நடந்து போச்சு. அதையே நெனச்சுக்கிட்டு இருந்தா போனவ திரும்பியா வருவா? நீ போய் மருமகப் பிள்ளை யைப் பார்த்திட்டு வந்திடு. அவரும் இந்த ஆக்ஸிடெண்ட்ல போயிருக்க வேண்டியவர். தெய்வாதீனமா பொழைச்சுக்கிட்டார்."

அம்மா கண்ணீரைத் துடைத்தபடி பேச, சரவணன் பொங்கி எழுந்தான்.

"அந்த ஆளை என்னதுக்குப் பார்க்கறது? இருந்தவரைக்கும் தங்கச்சியை நல்லா வாழ



# 200 கிராம்

# இதயம் நல்லெண்ணெய்



# ரூ.12/-* மட்டுமே !

* தமிழ்நாடு ரீஃபில் பேக் மட்டும்




# வெற்றிக் கதை

**நா**ன் +2 படிக்கும் சமயம் பலரும், ''நீ +2 படிக்கிறாயா, நன்றாகப் படி, மிகவும் கஷ்டமாக இருக்குமே'' என பயமுறுத்தியதன் காரணமாக ஓரளவு படித்திருந்தும் பரீட்சைக்கு பயந்து போக மாட்டேன். இப்படியாக +2விலேயே பல பரீட்சைக்கு செல்லவில்லை. ஸ்கூலில் எல்லோரும் என்னைக் கேலியாகப் பார்க்க ஆரம்பித்து விட்டனர்.



நான் ஸ்கூலில் சில சமயம் படித்தாலும், ''நீதான் பப்ளிக் எக்ஸாம் எழுத வர மாட்டாயே, ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டு படிக்கிறாய்?'' என கேலி செய்தனர்.

நான் மிகவும் மனமுடைந்து வீடு திரும்புவேன். இந்த நேரங்களில் எல்லாம் எனது தாய் எனக்கு மிகவும் பொறுமையுடன் அறிவுரை வழங்குவார்.

அந்தச் சமயம் எனது சித்தி மகள் சென்னையிலிருந்து வந்திருந்தாள். அவள் இன்ஜினியரிங் முதல் வருடம் படிக்கிறாள். அவள் என்னிடம் படிப்பு பற்றிக் கேட்டு விட்டு, அவளுக்கு மஞ்சள் காமாலை வந்ததால் +2 படிக்கும் சமயம் 3 மாதங்களாக ஸ்கூல் செல்லவில்லை என்றும், கடைசி 2 மாதங்களாகத்தான் அவள் நன்றாகப் படித்து 77% எடுத்ததாகவும் கூறினாள்.

'நமக்கு 3 மாதங்கள் இருக்கிறதே! நாம் ஏன் நன்றாகப் படிக்கக் கூடாது' என எண்ணி அன்று முதல், இறைவனிடம் பிரார்த்தித்து விட்டு எனது படிப்பை மும்முரமாகத் தொடங்கினேன். இரவில் வெகு நேரம் வரை விழித்திருந்து படித்தேன். இதற்கு எனது தாயார் மிகவும் உதவியாக இருந்தார்கள். நான் வீட்டில் இவ்வளவு மும்முரமாகப் படிப்பது எனது நண்பிகளுக்குத் தெரியாது. எப்போதும் போலவே என்னைக் கேலி பேசினர்.

பரீட்சை தினமும் வந்து விட்டது. நான் பரீட்சைக்கு வந்ததைப் பார்த்து தோழிகள் அனைவரும் வியந்தனர். இறைவன் அருளால் நன்றாகப் பரீட்சை எழுதினேன். ரிசல்ட்டும் வந்து விட்டது. வாவ்! நான் எதிர்பாராத அளவு 80% எடுத்திருந்தேன். வெற்றிக்கொடி நாட்டினேன்.

**— எம்.ஏ. பாத்திமா ஹலீமா.**

விடலே. கரிச்சுக் கொட்டினாங்க'' பேசியவனை இடைமறித்தாள் தாய்.

"இப்படியெல்லாம் பேசாதே. ஆக்ஸிடென்டாகி, அவரும் சீரியஸ்ஸாக படுத்துக்கிட்டு இருந்தார் தெரியுமா? நீ துபாய்ல இருந்ததுனால அவரைச் சந்திக்கலே. ஆனா இன்னிக்கு வந்து பாக்காம போனா நல்லா இருக்காது. போய்ப் பார்த்துட்டு வந்துடு" அம்மா நிர்பந்தப்படுத்தினாள்.

அம்மாவின் பேச்சை தட்ட முடியாமல் ஒரு பெருமூச்சோடு கிளம்புகிறான். போன தடவை துபாய்க்குப் போகுமுன், தங்கையிடம் சொல்லப் போன போது என்னென்ன சொன்னார்கள். நேற்று நடந்தது போலல்லவா இருக்கு? தன் கூடப் பிறந்த ஒரே வாரிசு மேனகா. அவளை அத்தைப் பையனுக்கே திருமணம் செய்து கூட்டுக் குடும்பத்திற்குள் தள்ளி விட்டாள் அம்மா. அண்ணன், அண்ணி, கொழுந்தன், மாமனார், மாமியார் என்ற கூட்டுக் குடும்பம். காலையில் எழுந்தால் இரவு பதினோரு மணி வரை வேலை. வேலை. வேலை. அப்படி என்னதான் வேலையோ தெரியாது. மேனகாவை பம்பரமாகச் சுழன்று பார்த்திருக்கிறான்.

போன தடவை ஒருநாள் தங்க நேர்ந்த போதுதான் அவளின் வேலையையும், சுமையையும் அவள் படும் துன்பத்தையும் நேரில் பார்க்க மனது கஷ்டப்பட்டது. போதாத குறைக்கு புகுந்த வீட்டினர் வேறு அவளின் பெருமை தெரியாது அவளைக் குறைகூறிய போது தவித்துப் போனான் சரவணன். துபாய்க்கு போகுமுன் அவர்கள் வீட்டில் நுழைந்தபோதே மாப்பிள்ளையின் அண்ணன் பிடித்துக் கொண்டான்.

"இதெல்லாம் நல்லாயில்லே. ஒன் தங்கையை கண்டிச்சு வை. அவள் கேக்குறப்ப எல்லாம் பணமும், நகையும் தருது. தம்பிக்கு எதுவுமே போதாது. கெடுக்கறவ ஒங்க தங்கை தான்."

மாப்பிள்ளையின் அண்ணனின் குறைகளைக் கேட்டு அதிர்ந்து போயிருந்த போது மேனகாவின் அண்ணி வந்து விட்டாள்.

"இத பாருப்பா, ஒன் தங்கை கிட்டே சொல்லு. எதிர்கடையிலே யாரோ பட்டினின்னு சொன்னாங்களாம். படி சோத்தை வடிச்சுப் போடறா. இப்படி வாழ்ந்தா கோடில கொண்டு வந்து கொட்டினாலும் போதாதுப்பா."

தங்கையைப் பார்ப்பதற்குள் தங்கையின் மாமியார் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டாள்.

"எவ வந்தாலும் இவ சரியில்லை, அவ சரியில்லைன்னு சொல்ல வேண்டியது. இன்னும் நிலையான வேலைக்காரி எங்க

வீட்டுலே இல்லே தெரியுமா? சுத்தமே கிடையாதுங்கறா. வேலைக்காரிக்கு நிறைய கொடுத்தாத்தானே அவ வருவா. பழைய சோத்துக்கு யார் வேலை செய்வா?" மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்து உள்ளுக்குள் புழுங்கியவனை மேனகாவின் கொழுந்தன் பிடித்துக் கொண்டான்.

"என்னப்பா சரவணன் என் பிரண்ட்ஸ் பத்து பேர் வரத்தான் வருவாங்க. வண்டியை இங்கே நிறுத்தக் கூடாதுன்னு ஒரே அமர்க்களம். அண்ணிங்கறதுனால போனா போகுதுன்னு விடறேன். ஒன் தங்கச்சிகிட்டே சொல்லி வைப்பா."

நல்லவேளை மேனகாவின் மாமனார் வீட்டில் இல்லை. இருந்திருந்தால் என்ன சொல்லியிருப்பாரோ? மேனகாவைப் பார்த்துப் பேசலாம் என்பதற்குள் கணவனே வந்து விட்டான்.

"எப்ப வந்தீங்க? எப்ப துபாய் போறீங்க?" என்றான். ஏதேதோ கேட்டவன், "எனக்கும் நிறைய சம்பாதிக்கணும்னு ஆசை. ஆனா ஒங்க தங்கச்சி அவளை விட்டுட்டுப் போகக் கூடாதுன்னு ஒரே அமர்க்களம். எங்கே வந்தாலும் கூடவே வரணுமாம். நம்பளை வாழவும் விட மாட்டா. சாகவும் விட மாட்டா."

இத்தனை பேச்சு பேசியவர்கள் வீட்டிற்குப் போகணுமா?

"தங்கச்சி இருந்தால் போகாம இருப்பியா? ஒரு தடவை தலையைக் காமிச்சிட்டு வந்திடு" – அம்மா சொன்னதைக் கேட்டுச் செல்கிறான்.

'இந்தத் தடவை மேனகாவைப் பற்றி ஏதுனா பேசட்டும். அப்புறம் பார்த்துக்கறேன்' மனதிற்குள் கறுவிக் கொண்டான்.

உள்ளே நுழையும்போதே ஹாலில் தங்கையின் பெரிய படம் மாட்டப்பட்டு, மாலை போடப்பட்டு இருந்தது கண்ணுக்குத் தெரிந்தது. கண்கள் ரொம்பிப் போக, உள்ளே நுழைந்தவனை மேனகாவின் கணவனின் அண்ணன் எதிர்கொண்டான்.

"சரவணா! எப்பேற்பட்ட பொண்ணுப்பா. நம்பளை விட்டுப் போயிட்டாளே. புருஷன் கேட்டார்னு அத்தனையும் கழட்டி கொடுத்தவுப்பா அவ. அந்த மனசு யாருக்குப்பா வரும்?" – இதற்குள் சப்தம் கேட்டு அண்ணி ஓடி வருகிறாள். "ஒங்க தங்கை..." குமுறிக் குமுறி அழுகிறாள்.

"என்ன மனசு அவளுக்குத் தெரியுமா? ஒருத்தர் பசின்னா பொறுக்க மாட்டா. இருக்கோ, இல்லையோ வடிச்சுக் கொட்டுவா."

இதற்குள் மேனகாவின் கொழுந்தன் வந்து தோள்களில் கவிழ்ந்து கொள்கிறான்.

"அண்ணி கண்டிச்ச போது புரியவே இல்லை. இப்ப கண்டவன் ஸ்கூட்டர் விட்டு வீடே சுச்சடாவாயிடுச்சு. அவங்க மாதிரி திறமையான மனுஷியைப் பார்த்ததே இல்லை."

"யாருப்பா சரவணனா?" அவனைப் பார்த்துக் கேட்டுக் கொண்டே வந்த மாமியார் கேவிக் கேவி அழுகிறாள். "வேலைக்காரியைக் கூட பாத்துப் பாத்து டெஸ்ட் பண்ணித்தான் ஒத்துப்பா. ஆனா இப்ப அப்படிப் பாக்காம வச்சு வெள்ளிப் பாத்திரமெல்லாம் திருடு போயிடுச்சு."

"நீ எப்பப்பா வந்தே?" மேனகாவின் கணவன் வந்து கையைப் பிடித்துக் கொள்கிறான்.

"என் கூட இருக்கணும், என் கூட இருக்கணும்னு சொன்ன அவ. போயிட்டாளேப்பா. தனிமையோட கஷ்டம் இப்பத்தானே எனக்கும் புரியுது." அவள் கணவன் அழுது, அழுது அரற்ற, அங்கு கொஞ்ச நேரம் இருந்து விட்டு வீடு வந்து சேர்ந்த போது ஆச்சரியப்பட்டான்.

"எப்படீம்மா சேத்தை வாரி இறைச்சவங்க எல்லாம் தங்கையைப் புகழ்ந்து, புகழ்ந்து மாஞ்சிப் போயிடறாங்க. எப்படி அது?" அம்மா ஒரு பெருமூச்சோடு பேசுகிறாள்.

"இருக்கறவரைக்கும் யாரோட நல்லதும் நமக்குத் தெரியறதில்லே. போனப்புறம்தான் தெரியுது. தெரிஞ்சோ, தெரியாமையோ நாம அடுத்தவங்களோட சம்பந்தப்பட்டு இருக்கோம். மறைமுகமாவாவது அடுத்தவங்க உதவி நமக்கு கெடைக்குது. வர உதவி நிக்கும் போது, இழப்போட நஷ்டம் புரியுது." அம்மா ஒரு பெருமூச்சோடு சொல்ல, சொல்ல 'ஆம்' என்று தலையாட்டியவன் 'இத்தனையும் அவள் உயிரோடு இருக்கும்போது சொல்லக் கூடாதா?' – நினைத்து நினைத்து வேதனைப் பட்டான்.

---

எப்போதும் அடை தட்டும் போது வெங்காயம் தானா? முருங்கை கீரைதானா? வெரைட்டி இருக்கட்டுமே என்று, வெந்தியக் கீரையை சுத்தம் செய்து, பொடியாக நறுக்கி அடை மாவுடன் கலந்து அடை செய்தேன். கசப்பே தெரியாமல் சூப்பரான அடை. வெந்தயக் கீரை வாங்கினாலே, அடை செய்ய ஆரம்பித்து விட்டோம்.

– மீனா ரகுபதி.





முதலில் துவஜாரோகணத் துடன் 'காப்பு கட்டுதல்' எனப்படும் கங்கணம் கட்டிக் கொள்ளும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. இந்தக் காப்பு ஆண்களுக்கு மட்டுமே நடக்கிறது. இதனைக் கட்டிக் கொண்ட ஆண்கள் விரதம் இருந்து விழாவை எடுத்து நடத்த உறுதிபூண்டு ஆலயத்திலேயே இருக்கிறார்கள். இவர்கள்தான் எல்லா வேலைகளையும் முழு மூச்சுடன் செய்கிறார்கள்.

அன்று முதல் மகாபாரத சொற்பொழிவு ஆரம்பிக்கிறது. சொற்பொழிவை சொல்லுபவர்கள் நிரம்பப் படித்தவர்கள் அல்ல. அவர்களும் சாதாரண கிராமத்து மனிதர்களே. இந்த நிலை இப்பொழுது சற்று மாறியிருக்கிறது. இவர்கள் சொற்பொழிவின் போது நிறைய மேற்கோள்களை எடுத்துக் காட்டுகிறார்கள். இதற்காக இவர்கள் எல்லா நூல்களையும் படிக்கிறார்கள். நமக்கு எழும் சந்தேகங்களையும் தீர்த்து வைக்கிறார்கள்.

பத்தாம் நாள் திருவிழாவின் போது தெருக்கூத்து ஆரம்பிக்கின்றது. உண்மையில் இந்தத் தெருக்கூத்து கலைஞர்கள்தான் கலைச் சேவை செய்பவர்கள். இரவு

• மகாபாரத சொற்பொழிவு



# தொண்டையே மூலதனமாக வாழும் கலைஞர்கள்!

"கல்லூரி மாணவியான நான், எங்கள் கிராமத்தில் விடிய விடிய நடந்த மகாபாரதக் கூத்தை முதலில் 'போர்' என்ற முகச்சுளிப்புடன்தான் பார்க்க ஆரம்பித்தேன். ஆனால் நேரம் செல்லச் செல்ல அதோடே கரைந்து விட்டேன்.

கூத்து நடத்தும் அந்தக் கலைஞர்களின் வாழ்க்கை தான் எத்தனை உயர்வானது! அவர்களையும், இன்றைய திரைப்படக் கலைஞர்களையும் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை..." என்கிறார் இளம்பெண் இந்திரா.

எங்கள் கிராமத்தில் மகாபாரதப் பெருவிழா நடந்தது.

நேரம் முழுவதும் கண் விழித்து ஆடுகிறார்கள். இவர்களுக்கு ஒரு இரவுக்குக் கிடைக்கும் ஊதியமோ 50 முதல் 100 ரூபாய் வரை தான். இவர்கள் வெறும் பணத்துக்காக மட்டுமே ஆடுவதில்லை. மக்களின் பாராட்




## வெற்றிக் கதை!

### உழைப்பு உறுதுணையாயிருக்கும்



என் மூத்த மகன் கல்லூரியில் நுழைந்தான். காதல் மலர்ந்தது. கவிதை பிறந்தது. சிறிது காலத்தில் காதல் இறந்தது. ஆனால் கவிதை வளர்ந்தது. எல்லா இளைஞர்களையும் போல் கன்னத்தின் ஓரங்களில் முடியை வளர்க்கவில்லை. பேனாவின் நுனிகளிலே கவிதையை வளர்த்தான்.

கிராம அதிகாரியாக பணிபுரிந்த இவன் தந்தையின் வேலை அரசால் பறிக்கப்பட்டது. குடும்பத்தைக் காக்கும் பெரும் பொறுப்பு அச் சிறு வயதிலேயே கொடுக்கப்பட்டு விட்டது. கடமையை நிறைவேற்ற, கடும் பணிபுரிய, அரசாங்க வேலையைத் தேட என்று காலங்கள் கரைந்தது. அவனுடைய மாபெரும் முயற்சியால் பொதுப் பணித்துறையில் தன்னை புகுத்திக் கொண்டான்.

கல்யாணம் நடந்தது. கடைசித் தம்பியின் கல்விச் செலவும், இரு குடும்பத்தின் கவனிப்பு செலவு என கடமைகளும், கடன்களும் அதிகரித்துக் கொண்டே சென்றது. ஆனாலும் அவனை சோர்வடையச் செய்யவில்லை. இப்படிப்பட்ட இறுக்கமான சூழ்நிலைகளிலும் தன் கவியந்திரத்தை பழுதடைந்து போக விடாமல் மூளைக் கருவியால் செப்பனிட்டுக் கொண்டே வந்தான்.

இன்று அவன் பெற்ற சிறு குழந்தை முதல் அவனுடன் பணிபுரியும் மேலதிகாரி வரை பலரும் அவன் கவிதைகளை ஒரு வரி விடாது பாராட்ட, ''ஈன்றபொழுதில் பெருதுவக்கும் தன் மகனை சான்றோன்'' எனக் கேட்கும் தாயாக பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

தோல்விகளைக் கண்டு துவளாத மனமும் கடமையைக் கண்டு ஒதுங்காத குணமும் இருந்தால், ''வெற்றிக் கொடி கட்டுவது'' உறுதி.

— லெட்சுமி சங்கரன்.

---

டுக்காகவே ஆடுகிறார்கள். இந்தத் தெருக் கூத்துக் கலைஞர்களும் கதை சொல்பவர்களும் 64 ராகங்களையும் முறையாக பயன் படுத்துகிறார்கள். இது மிகவும் வியக்கத்தக்க விஷயமாகும். இவர்கள் தங்கள் உணர்ச்சிகளை அதி அற்புதமாக வெளிப்படுத்துகிறார்கள்.

இந்த இரு கலைஞர்களுமே தங்களின் அறிவுரைகளை வெளிப்படையாக துணிச்சலாகக் கூறுகிறார்கள். இதை நாம் திரைப்படத்திலோ அல்லது வேறு ஏதாவது துறையிலோ எதிர்பார்க்க முடியாது. இந்த விழாவின் சில முக்கிய அம்சங்களாவன :

**1. அரக்கு மாளிகை கொளுத்தப்படுதல் :** இந்த நிகழ்ச்சியின் போது எளிதில் தீப்பற்றக் கூடிய வைக்கோல், பனை ஓலை போன்ற வற்றால் செட் போடப்பட்டு கொளுத்தப் படுகிறது.

**2. பகாசுரன் உணவு எடுத்தல் :** இந்த நிகழ்ச்சியின் போது தெருக்கூத்து கலைஞர்கள் பகாசுரன் வேடம் அணிந்து தெருவில் ஆடிக் கொண்டு வண்டியில் உணவுப் பொருள்களை பெற்றுச் செல்கிறார்கள்.

**3. திரௌபதியின் திருக்கல்யாண வைபவம் :**

இந்த நிகழ்ச்சியின் போது திரௌபதி அம்மனுக்கு அர்ச்சுனனுடன் பகவான் கண்ணனின் முன்னிலையில் நடக்கிறது. நமது திருமணங்களில் என்னென்ன நிகழ்ச்சிகள் நடைபெறுமோ அவையாவும் நடக்கிறது. உதாரணமாக பொறியிடுதல், மாலை மாற்றுதல் போன்றவை. மாலை அம்மனின் சிலை ஊர்வலமாக எடுத்து வரப்படுகிறது. அப்பொழுது ஒரு தேங்காய் உடைக்கப்பட்டு தீபாராதனை காட்டப்படுகிறது. மற்றொரு தேங்காய் அம்மனின் மடியில் கட்டப்படுகிறது. இது ஒவ்வொரு வீட்டிலும் செய்யப் படுகிறது. இந்தத் திருமணத்தின் போது கடவுளுக்கு நாம் பிரியமாக 'மொய்' எழுதும் வழக்கமும் இருக்கிறது. அதை ஏழை பணக்காரன் வித்தியாசம் பாராமல் ஆர்வத்துடன் எல்லோரும் எழுதுகிறார்கள்.

**4. இடும்பி குறி சொல்லுதல் :** இந்நிகழ்ச்சி திரௌபதி திருமணத்திற்கு முன்னதாக நடக்கிறது. இது கதை சொல்பவரால் சொல்லப் படுகிறது. அவர் பம்பை, உடுக்கை, மணி போன்ற வாத்தியங்களை வைத்துக் கொண்டு ஆரம்பம் முதல் முடிவு வரை சூடம் ஏற்றி சொல்லப்படுகிறது. இந்த நிகழ்ச்சியின் போது பெரும்பாலானவர்களுக்கு ஆவேசம் வருகிறது.

**5. திரௌபதி வஸ்திராபரணம் :** இந்த



**வாழைத் தண்டை நறுக்கும் போது வரும் நாரை எடுத்துக் காயவைத்து திரியாக திரித்து விளக்குகளுக்கு உபயோகித்தால் பிரகாசமாய் எரியும். அதிக எண்ணெயைக் குடிக்காது.**

**— வசந்தி ரவி.**

நிகழ்ச்சி தெருக்கூத்து கலைஞர்களால் நடத்தப்படுகிறது. இந்த நிகழ்ச்சியின் போது சம்பந்தப்பட்ட வேடமிட்ட கலைஞர்கள் கூடம் ஏற்றி வழிபட்டுக் கொண்டேதான் ஆடுகிறார்கள். இருந்தும் அவர்களுக்கு ஆவேசம் வருகிறது. இதைக் கண்ணுறும் பக்தர்களுக்கும் வருகிறது.

**6. அர்ச்சுனன் தவநிலை (அ) பாசுபத அஸ்திரம் பெறுதல் :**

இந்த நிகழ்ச்சியின் போது பெரிய பனைமரம் நடப்பட்டு அதன் உச்சியில் ஒரு பலகை அடிக்கப்படுகிறது. அர்ச்சுனன் வேடமிட்ட கலைஞர் ஒவ்வொரு படிக்கும் ஒரு தேவாரப் பாடலை பாடிக் கொண்டு மேலே செல்கிறார். மேலே சென்று சிவபூஜை செய்கிறார். அவ்வாறு சென்று பூஜை செய்து அங்கிருந்து போடும் எலுமிச்சை பழம், பூ, வில்வ இலை போன்றவற்றை குழந்தை இல்லாத பெண்கள் மடி பிடித்து பெறுகிறார்கள். இதனால் குழந்தை பிறப்பதாக ஒரு ஐதிகம்.

**7. விராட பர்வம் :** இந்த நிகழ்ச்சி பாண்டவர் ஒரு வருட அக்ஞாத வாசத்தை விராட நாட்டில் கழித்ததை நினைவுகூர்கிறது. இந்த நிகழ்ச்சியின் போது ஊரில் மாடுகளை விரட்டும் இடத்திற்குச் சென்று சம்பந்தப்பட்ட கலைஞர்கள் அந்த இடத்தில் கதை சொல்லியும் மாடுகளை விரட்டியும் ஆடுகிறார்கள்.

**8. தீமிதி :** இந்த விழாவின் போது எரியும் தணல் பரப்பப்படுகிறது. நான்கு புறமும் அதைச் சுற்றி கூடம் ஏற்றப்படுகிறது. கதை சொல்லும் கலைஞர் சிறிது தணலை வேப்பிலையில் வைத்து அம்மனின் மடியில் கட்டுகிறார். பின்னர் ஒரு பூச்செண்டை அந்தத் தணலிலே போட்டுப் பார்த்துப் பின்னர் அந்தக் கலைஞர் பூச்செண்டை எடுத்துக் கொண்டு தீ மிதிப்பார். அதன் பின்னே விரதம் இருந்த பிரார்த்தனைக்காரர்கள் தீயில் இறங்குகிறார்கள். இந்த நிகழ்ச்சி மிகவும் மெய் சிலிர்க்க வைக்கிறது.

**9. தருமர் பட்டாபிஷேகம் :** இந்த நிகழ்ச்சி கடைசியாக நடக்கிறது. இதற்குப் பின்னர் காப்பு கட்டிக் கொண்டவர்கள் துரியோதனின் ஈமக்கிரியைகளை செய்கிறார்கள். பின்னர் அவர்கள் மேளதாளத்துடன் தங்கள் வீடுகளில் அழைத்து வந்து விடப்படுகிறார்கள். இதற்காக வேலையில் இருப்பவர்களும் லீவு போட்டு விட்டு வருகிறார்கள்.

இன்றைய சூழ்நிலையில் நமது குழந்தைகளுக்கு எதையும் நம்மால் விளக்கமாக எடுத்துச் சொல்ல முடிவதில்லை. ஆனால் இதுபோன்ற விழாக்கள் மிகவும் பயனுள்ளதாகிறது. ஒரு தொலைக்காட்சி நிகழ்ச்சியில் ஒரு தெய்வ வேடமிட்ட நடிகர் அடுத்த காட்சியில் ஒரு மோசமான வேடத்தில் நடிக்கிறார். இதனால் பிஞ்சு மனங்கள் பாதிக்கப்படுகின்றன. ஆனால் இதுபோன்ற விழாக்களில் குழந்தைகள் ஆர்வமாக எல்லாவற்றிற்கும் விளக்கம் கேட்டு பயபக்தியுடன் கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள்.

இவ்வளவும் செய்யும் இந்தக் கலைஞர்களுக்கு நமது அரசாங்கம் சில பயனுள்ள திட்டங்களை வகுக்கலாம். இந்தக் கலைஞர்கள் தங்கள் தொண்டையை மட்டுமே மூலதனமாக நம்பி இருக்கிறார்கள். இவர்களது தொண்டுக்கு காப்பீடு வழங்கலாம் மேலை நாடுகளைப் போல.

தற்போது இவற்றிற்கெல்லாம் வடிகாலாக 'கூத்துப்பட்டறை' என்ற நிறுவனம் இவர்களுக்கு ஆதரவாக களம் இறங்கி இருக்கிறது. இவர்களின் பணிகள் பற்றி இதன் பொறுப்பாளர்களான என். முத்துசாமி, (நிறுவனர்), மற்றும் பேராசிரியர் சி. ரவீந்திரன், (நவீன இந்திய மொழித் துறை, டெல்லி பல்கலைக் கழகம்) ஆகியோர்களிடம் இருந்து பெறப்பட்ட தகவல்களாவன :

நமது தமிழ்நாட்டில்தான் இதுபோன்ற கலைகளுக்கு சரியான ஆதரவு இல்லை. ஆனால் இந்த 'கூத்துப் பட்டறை' அயல் நாட்டு நிதி பெற்று நடத்தப்படுகிறது. மேலும் இந்த கூத்துப்பட்டறையின் மூலம் நன்றாக ஆடும் கலைஞர்களுக்கு ஸ்காலர்ஷிப் போன்றவை பெற்றுத் தரப்படுகிறது. இந்தக் கூத்துப் பட்டறையில் புதிதாக கற்றுக் கொள்ள ஆர்வமுள்ளவர்களுக்கும் கற்றுத் தரப்படுகிறது. கூத்துப்பட்டறை பற்றிய தகவல்களை பெற கீழ்க்கண்ட முகவரியில் அணுகலாம் :

என். முத்துசுவாமி, நிறுவனர், கூத்து பட்டறை டிரஸ்ட், 3/384 முதல் தெரு, ஸ்ரீ வெங்கடேஸ்வரா நகர், கொட்டிவாக்கம், சென்னை - 41. தொலைபேசி : அலுவலகம் : 4420302.

**— டி.எஸ். இந்திரா**



# செய்யும் தொழிலில் எப்படி வருமானம் பெருகும்?

**கர்மயோகி**

10 ஆண்டுகளாகத் தொழில் நடத்துகிறேன். ஆரம்பத்தில் தொழில் வளர்ந்தது. 4-ஆம் ஆண்டு 3 லட்சம் லாபம் கிடைத்தது. கடந்த 6 ஆண்டுகளாக அப்படியே இருக்கிறது. முன்னேற்றமில்லை. இதற்கு ஏதேனும் வழியுண்டா? இலாபம் பெருக அன்னை கூறும் வழிகள் ஏதேனும் உண்டா?

**கேள்வி: உங்கள் கடையில் தினமும் எவ்வளவு நாழியிருப்பீர்கள்?**

பதில்: காலையில் போய் கொஞ்ச நாழியிருந்து விட்டு பணம் தேடப் புறப்பட்டு விடுவேன்.

**கே: கடையில் திருடு போகுமா?**

ப: நம்பித் தான் செயல் படுகிறேன். ஏதோ சிறிதளவு திருடு போகலாம். அதிக அளவில் இருக்காது.

**கே: கணக்கு உடனுக்குடன் எழுதுவதுண்டா?**

ப: வசூலாகும் பணத்தை நான் வீட்டுக்கு எடுத்துப் போய் விடுவேன். அப்புறம் கணக்கு ஏன்?

**கே: கடை சுத்தமாக இருக்குமா?**

ப: தினசரி பெருக்குவோம். ஆயுத பூசை, பொங்கலுக்குக் கடையை அலம்புவோம்.

**கே: மாதம் என்ன விற்கிறது? அதில் கமிஷன் எவ்வளவு? நிகரமாக எவ்வளவு நிற்கிறது?**

ப: 19 லட்சம் வியாபாரம், 4% கமிஷன் 76 ஆயிரம் நிகரமாக 25 ஆயிரம் இருப்பு.

**வரும் 12 மாதத்தில் அல்லது நிச்சயமாக 2 வருஷத்தில் 25 ஆயிரம் நிகர இலாபத்தை 50 ஆயிரமாக்கலாம்.**

ப: நம்ப முடியவில்லையே.

**கே: கடை அசுத்தமாக இருக்கிறது, பணம் திருடு போகிறது, சரக்கு விரயமாகிறது,**

எவரும் வேலை செய்வதில்லை, வர வேண்டிய பணம் வசூலாகவில்லை, கவனம் இல்லவேயில்லை. இவற்றை மாற்றி நீங்கள் கடையை விட்டுப் போகக் கூடாது, தினமும் கடையையும், சரக்கு, அலமாரிகளையும் நன்றாக சுத்தப்படுத்தி, கணக்கை உடனுக்குடன் எழுதி, வசூலைக் கவனித்தால் நிலைமை மாறும்.

(முதலாளி இவற்றைச் செய்ய ஒத்துக் கொண்டு முனைப்பாக செயல்பட்டார். இந்தச் சின்னக் கடைக்கு எலக்ட்ரிக் பில் 700, 800 ரூபாய்தான் வரும். ஒருமாதம் 4,500/- ரூபாய் கட்டியிருக்கிறார்கள். சரக்கு பெருவாரியாகத் திருடு போக திட்டம் நடப்பது தெரிந்தது. சரக்கு சப்ளை செய்யும் கம்பெனிக்கு நாம் அதிகப்படியாக பணம் கொடுத்திருக்கிறோம், மார்வாரியிடம் வாங்கும் பணத்திற்குச் சென்ற மாதம் 50,000 வரை வட்டி கட்டியிருக்கிறார்கள் என்பன வெளி வந்தன.

முதலாளி அனைத்தையும் கவனிக்க முடிவு செய்தார். அடுத்த மாதங்களில் வியாபாரம் அதிகமாயிற்று. 23, 35, 38, 48, 55 லட்சமாக அடுத்த மாத வியாபாரம் பெருகியது. முதலாளிக்குத் திருப்தி. மாதம் 19 லட்ச வியாபாரம் 6 மாதத்தில் 36 லட்சமாக மாறியது)

**கே: வியாபாரம் கிட்டத்தட்ட இரு மடங்காகியது. சந்தோஷம். எப்படி என்று விளக்கினால் நல்லது.**



புதினா துவையல் அரைப்பதற்கு புதினாவை வாணலியில் போட்டு நன்றாக வதக்கக் கூடாது. வதக்கினால் வாசனை போய் விடும். எனவே சூடு வாணலியில் ஒரு பிரட்டு பிரட்டி உடனே எடுத்து விட வேண்டும். அப்போதுதான் துவையல் மிகவும் வாசனையாக ருசியாக இருக்கும்.

— லக்ஷ்மி ரங்கநாதன்



ப: ஆடிட்டரை அழைத்து வந்து இலாபத்தைக் கணக்கிட்டால் அது இரு மடங்காக ஆகியிருக்காது எனத் தெரியும். அதிகமாக இருக்கும்.

இதுவரை நீங்கள் கடையில் உட்காருவதில்லை. அதனால் வருபவர்களை கவனிப்பது இல்லை. இப்பொழுது கவனமிருப்பதால் வாடிக்கைக்காரர்கள் அதிகமாக வருகிறார்கள். சரிதானே.

**கே: நான் தினமும் பணம் புரட்டப் போய்விடுவேன்.**

ப: பணம் கடையிலிருப்பது உங்களுக்குத் தெரியவில்லை. கடன் வாங்கி, வட்டி கொடுத்திருக்கிறீர்கள். அதிக வட்டி இனி இல்லை. அது இலாபமாக மாறியுள்ளது. சுத்தம் அதிகமானதால் வியாபாரம் அதிகமாகிறது.

**கே: பார்ப்பவர்கள் எல்லாம் கேலி செய்கிறார்கள், என்ன இப்படி நாள் முழுவதும் துடைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று?**

ப: சுத்தம் பணத்தைக் கொண்டு வருகிறதல்லவா?

**கே: வருகிறது. தெரிகிறது. விளக்கமாகச் சொன்னால் தேவலை.**

ப: இது அனைவருக்கும் தெரியும் முறைகள்தானே. 6 மாதம் முன் இக் கருத்துகளை உங்களுக்கும், உங்கள் நண்பருக்கும் சொன்னேன். அவர் செய்தாரா?

**கே: ஆமாம், அவர் செய்யவில்லை, நான் மட்டும் எப்படிச் செய்தேன்? அன்னையை ஏற்றுக் கொண்டதாலேயா? அன்னை ஸ்ரீ அரவிந்தர் படங்களை இங்கு கொண்டு வந்து வைத்ததாலேயா?**

ப: செய்தால் பலன் உண்டு. செய்ய நமக்கு வேளை வர வேண்டுமல்லவா?

**கே: அதைச் செய்யும் நினைவை அன்னை கொடுக்கிறார். அன்னை வந்தால் நேரமும் வருகிறது போலும்.**

ப: என் அனுபவத்தில் அன்னையை அறிவது அதிர்ஷ்டம்.

**கே: ஆடிட்டர் கொடுத்த புள்ளிகள் அதைக் காட்டுகிறதே! அதைப் பார்த்தும் நம்ப முடியவில்லையே. கடைக்குப் புதிய பொலிவு வந்துவிட்டது. சரக்கை துடைக்க ஆரம்பித்தால், எதைத் துடைக்கிறோமோ, அந்த சரக்கு விற்று விடுகிறது. சுத்தத்திற்கும் பணத்திற்கும் என்ன தொடர்பு?**

## வெற்றிக் கதை



# தோல்விக்கு தோற்றமேது




**ஒ**ன்றுமறியாத இரண்டுங்கெட்டான் பருவம். +2 வகுப்பில் தேர்ச்சி. விரும்பிய குரூப் கிடைக்காமல் தமிழ் இலக்கியம் கிடைக்க, முதல் ஆர்வத் தோல்வி. இருப்பினும் அன்பான முதல்வர், 'தமிழ் இலக்கியம் படி. அதில் நீ முன்னேறுவாய்" என்று கூறினார். சரியென எடுத்ததில் விளையாட்டு, பேச்சு, நாடகம், கவிதை, கட்டுரை, பொதுவான வெளிப் போட்டிகள், முதன்மைப் பாடம், துணைப் பாடம் என அனைத்திலும் 'முதல் பரிசுகள்' குவிந்தன. பி.ஏ இறுதி யாண்டில் என் மனதில் தோல்வியின் சுவடேயில்லை.

கொடுத்த கிடைத்த பாடத்தில் வெற்றிக்கொடி நாட்டியதால், தமிழ்த் துறையா...? தமிழ்த் துறையா? என்று அந்த மூன்று வருட காலமும் தமிழுக்கும், தமிழாசிரியர்களுக்கும் பெருமை சேர்த்த மகிழ்ச்சியும், பூரிப்பும் இருக்கிறதே! சொல்லிலடங்காது. பேரின்பமன்றோ! அத்தனை பேர் முகத்திலும் என்னைக் காணின் புன்சிரிப்பு . அது தந்த சந்தோஷம் உயர்ந்த பரிசு. இன்றும் ஆசிரியர்கள் என்னை ஞாபகம் வைத்துள்ளனர்.

— இரா. இந்திராணி சுப்ரமணியம்

*ப: சுத்தம் சோறு போடும் என்பது பழமொழி. குளித்தால் உடல் fresh- ஆக இருக்கிறது அல்லவா? உடல் கலகலப்பானால் உள்ளே ஆத்மா விழிப்புறுகிறது. அது விழித்தால் அறிவும், சுறுசுறுப்பும் வருகிறது. பிறகு வியாபாரம் பெருகுகிறது. சுத்தமிருந்தால் அன்னை வருகிறார்கள். அன்னை என்றால் செல்வம். விற்காத பொருளைத் துடைத்தால் விற்கும். குரலைத் தாழ்த்திப் பேசினால் பணம் வரும்.*

***கே: ஆடிட்டர் புள்ளி அதைக் காட்டுகிறது. எப்படி அது?***

*ப: சத்தம் சக்தி. சத்தமாகப் பேசினால் சக்தி விரயமாகிறது. பணம் போகிறது. கணக்கு எழுதுவது பணத்திற்கு கவனம் செலுத்துவதாகும். கவனத்திற்கு பலன் அதிகப் பணம். புள்ளிகளைக் கொடுங்கள்.*

***கே: 6 மாதத்தில் வியாபாரம் 19 லட்சத்திலிருந்து 36-க்குப் போயிருக்கிறது கணக்கில் இன்னும் சேர வேண்டிய பில்களையும் சேர்த்தால் 40 ஆகும். சுமாராக இரு மடங்காகியிருக்கிறது. நான் இலாபம் இரு மடங்காகும் என நினைத்தேன். 6 மாத இலாபம் 16 லட்சம். மாதம் 2.60 லட்சம். சுமார் 10 மடங்காகியிருக்கிறது. என்னால் நம்ப முடியவில்லை.***

*ப: நடைமுறையில் தெரியவில்லையா?*

***கே: நான் இப்பொழுது மார்வாரியிடம் பணம் வாங்குவதில்லை. பேங்கில் செக் பாஸாகுமா என தினமும் ஏற்கெனவே பிரச்சினை. இப்பொழுது cash flow பிரச்சினை இல்லை. கொஞ்சம் பழைய பாக்கி அடைத்துள்ளேன். கடையிலும், வீட்டிலும் சந்தோஷமுள்ளது. அன்னையை ஏற்றதிலிருந்து இந்த மாற்றம் தெரிகிறது.***

*ப: அன்னையை மட்டும் ஏற்றிருந்தால் சுமார் 1 வருஷத்தில் இரு மடங்கு பலன் தெரியும். முறைகளை மட்டும் பின்பற்றினால் 2 வருஷத்தில் இருமடங்கு பலனுண்டு. நீங்கள் அன்னையையும், முறைகளையும் ஏற்றதால் 6 மாதத்தில் வியாபாரம் இருமடங்காகி, இலாபம் 10 மடங்காகிறது. இது எல்லா அன்பர்களுடைய அனுபவம். அன்னையை அனுப்புவதாலும் இதைச் செய்யலாம்.*



தேங்காய் பர்பி கிளறும்போது 1 சிட்டிகை ஆப்ப சோடாவை போட்டால் விரைவில் பர்பி பூத்து வரும். பர்பியும் வெள்ளை வெளேர் என்று இருக்கும். — என். விஜயலெட்சுமி

---

**கே: என் நண்பர் ஒரு பத்திரிகை ஆரம்பித்துள்ளார். சுமாராக நடக்கிறது. அவருக்கு நான் அதிகமாகக் கூற முடியாது. என்ன சொல்லலாம் என நினைக்கிறீர்கள்?**

ப: அவரே விரும்பி உண்மையாகக் கேட்டால் பலிக்கும். நாமே சொன்னால் உங்கள் நண்பர் போல் காதில் வாங்கிக் கொள்ள மாட்டார். தொழில் என்றால் பீஸ் கொடுத்து கேட்பார்கள். அது பலிக்கும். நண்பர் என்ற முறையில் பலிக்க வேண்டுமானால் அவரே கேட்டால்தான், அதுவும் உண்மையாகக் கேட்டால்தான் பலிக்கும்.

**கே: அவர் கேட்க மாட்டார்.**

ப: அவருக்குப் பலிக்காது.

**கே: அவர் கேட்கும்பொழுது சொல்கிறேன். என்னிடம் சொல்லுங்கள்.**

ப: இதைத் தொழிலாகச் செய்பவர்களிடம் உங்கள் பத்திரிகை நண்பர் போவதே சரி. அவருடைய சர்க்குலேஷன் எவ்வளவு?

**கே: 30,000 என்றார்.**

ப: சர்க்குலேஷன் எவ்வளவு ஆனாலும் 24 மாதத்தில் அது இரு மடங்காக ஏதாவது ஒன்றைச் செய்தால் போதும். 1) வருமானம் என்ற கட்டுரையில் கொடுத்துள்ள 12 தலைப்புகளில் முதல் முறையை பின்பற்றிப் பலன் தெரிந்தால் 10 முறைகளையும் முடிக்க வேண்டும். 2) அன்னையை ஏற்று அவருக்கேற்ற மனதுடன் அன்னையை அனுப்புவதை மேற்கொள்ள வேண்டும். 3) பத்திரிகை சர்க்குலேஷனை அதிகப்படுத்தும் புதிய முறைகள் ஏராளம். அவற்றைப் பின்பற்ற வேண்டும்.

**கே: அன்னையை எப்படி அனுப்புவது?**

ப : உங்கள் நண்பருக்கே ஆர்வம் வந்த பிறகுதான் அக்கேள்வி எழும். ஒரு சோதனை செய்யலாம். அவர் பத்திரிகை எல்லா Newstand-லிலும் விற்கிறது. ஒரு Newstand யை எடுத்துக் கொண்டு 30 நாள் அக்கடைக்கு அன்னையை அனுப்பினால் பலன் தெரியும்.

(அடுத்த மாதம் அவர்கள் சந்தித்த பொழுது கேள்வி கேட்டவர் நண்பரை அறியாமல், ஒரு Newstand-ல் 70 பிரதிகள் விற்பதை அறிந்து 30 நாள் அன்னையை அனுப்பி அடுத்த மாதம் 320 பிரதிகள் விற்பதைக் கண்டார் என்று கூறினார்)

**கே: இது மிகவும் சக்தி வாய்ந்த முறையாக இருக்கிறதே?**

ப: நம்புபவர்க்கு சக்தியுண்டு. உங்கள் நண்பர் குறுக்கு கேள்வி கேட்டால் பலிக்காது. தொழிலுக்கு உழைப்பு, பொறுப்பு, கவனம் முழுப் பலன் தரும். அது 70 பிரதிகளை ஓராண்டில் 100 ஆக்கும் ஆன்மீகம் உயர்ந்தது. அப்பலனைப் பெற அதற்குரிய முறை நம்பிக்கை, பொறுமை, உழைப்பு உடலுக்கும், கவனம் உணர்விற்கும், பொறுப்பு மனத்திற்கும் உரியது. ஆன்மா இவற்றை தன்னுட் கொண்டது. நம்புபவர்க்கு பலன் உண்டு. அன்னை ஆன்மீகத்திலும் சிறந்த அருளைத் தருபவர். அவர் நூல்களைப் பயின்று, முறைகளை அறிந்து, நம்பி, அன்னையை அனுப்பினால் 30,000 சர்க்குலேஷன் 6 மாதத்தில் 60,000 ஆகும்.

**கே: புதிய முறைகள் என்று கூறினீர்களே...**

ப: பத்திரிகை உலகம் நம் நாட்டில் மேல் நாட்டில் 1950-லிருந்ததைப் போலிருக்கிறது. சிலர் முன்னோடியாக இருக்கிறார்கள். வாசகர்கள் மனதை அறிவதற்கு அவர்கள் பயன்படுத்தும் முறைகள் ஏராளம். மிக உயர்ந்த முறைகள். ஏராளமான புத்தகங்கள் அவற்றைப் பற்றி வந்துள்ளன. அம்முறைகளை நம் நாட்டிற்கேற்ப மாற்றி அமைத்தால் பெரும் பலனுண்டு. 500 இதழ்கள், 15,000 இதழ்களான பத்திரிகைகள் நாம் அறிவோம். 5,000 மாறி 1,50,000 ஆனதும் தெரியும். அப்பத்திரிகைகள் தங்களை அறியாமல் இம் முறைகளைப் பின்பற்றியுள்ளார்கள். எல்லா முறைகளையும் பின்பற்றலாம். முயற்சி நம்பிக்கையைப் பொருத்தது.

**கே: என் நண்பரிடம் சொல்கிறேன்.**

ப: அவராகக் கேட்டாலொழிய பலனிருக்காது. உங்கள் அக்கறையால் மட்டுமே அவர் பத்திரிகை விரிவடையும்.

**கே: என்ன விற்கும்?**

ப: உங்கள் அக்கறையைப் பொறுத்தது.



**"ஒவ்வொரு ஆணின் வெற்றிக்கும் பின்னால் ஒரு பெண் இருக்கிறாள்!" என்பார்கள். வெற்றிக்குப் பின்னால் மட்டுமல்ல – அவரது கனவுகளையும், அவரது பொறுப்புகளையும், அவருக்குப் பின்னால் – அவரது மறைவிற்கு பின்னரும் – தனது கனவாக, தனது வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டு வாழ்ந்து வரும் பெண்மணிகளில் ஒருவர் திருமதி. வி.ஆர்.ஜி. ராஜி. வி.ஆர்.ஜி. என்ற பெயர் விளம்பரத் துறையில் ஒரு பிரபலமான பெயராகும். மிகச் சாதாரணமான ஒரு நிலையில் இருந்து, வாழ்க்கையில் பல கஷ்டங்களைத் தாண்டி, முன்னேறிக் கொண்டிருப்பவர். திருமதி வி.ஆர்.ஜி. ராஜி –**

# து

திருச்சி பொன்மலை என்ற ஊரில் காமாட்சி – சுப்பிரமணியத்தின் பெண் ராஜி. காமாட்சி அம்மாள் நன்றாக ஹார்மோனியம் வாசித்தபடி பாடுவார். சுப்பிரணியம் இரயில்வே தொழிற்சாலையில் பணிபுரிந்து கொண்டிருந்தார். பெற்றோருக்குக் கலையில் இருந்த ஈடுபாட்டினால், ராஜிக்குத் திருச்சியிலிருந்து திரு. ராதா கிருஷ்ணன் என்ற நடன ஆசிரியரிடம் நடனம் கற்றுக் கொடுத்தனர். பெற்றோரின் ஊக்கத்தினாலும், ஆசிரியரின் திறமையான கவனிப்பாலும், ராஜி பத்து வயதிலேயே நடன அரங்கேற்றம் செய்தார். தொடர்ந்து நடனம் கற்றபடி பல மேடைகளில் நாட்டிய நிகழ்ச்சிகள் நடத்தி வந்தார்.

பொன்மலையில் வருடா வருடம் இரயில்வேயில் பணி புரிபவர்களின் குழந்தைகள் பங்கேற்று கலை நிகழ்ச்சிகள் நடத்தி வந்தனர். இதில் வருடா வருடம் ராஜி பங்கேற்று வந்தார். பொன்மலையில் பள்ளிப் படிப்பு முடித்து, திருச்சி சீதா லட்சுமி இராமஸ்வாமி கல்லூரியில் பட்டப்படிப்பு முடித்து, வேலைக்குப் பார்த்துக் கொண்டிருந்த ராஜி, வழக்கம் போல் அந்த வருடமும், அதாவது 1969-ம் ஆண்டும் கலை நிகழ்ச்சியில் பங்கேற்று நடனமாடினார்.

அந்த நிகழ்ச்சியின் சிறந்த அம்சமாக ராஜியின் நடனம் தேர்ந்தெடுக்கப்பட்டு ஐநூறு ரூபாய் சன்மானம் வழங்கப்பட்டது. அதோடு இல்லாமல் அன்றைய தினம் இரவு விருந்தில் தென்னக இரயில்வேயின் ஜெனரல் மானேஜருடன் கலந்து கொள்ளும் அரிய வாய்ப்பும் பரிசாக அளிக்கப்பட்டது. விருந்தில் ஜெனரல் மானேஜரின் மனைவி தானும் நடனம் கற்றிருந்ததால், ராஜியை மிகவும் பாராட்டினார். அவரே தனது கணவரிடம், அறிமுகம் செய்து வைத்தார்.

"வேலை தேடிக் கொண்டிருப்பதாகச் சொல்கிறாய்! இரயில்வேயில் சேர விண்ணப்பம் போடு, கவனிக்கிறேன்" என்றார் அவர்.

அன்றைய விருந்தில் தன்னை மகிழ்விக்க அவர் கூறிய ஆறுதல் வார்த்தைகளே அவை என்று ராஜி நினைத்தார்.




ஆனால் சென்னைக்கு ஜெனரல் மானேஜர் வீட்டிற்குத் தந்தையுடன் சென்றபோது, "பொன்மலையில் நாட்டியமாடி பரிசு பெற்ற பெண்தானே நீ... உன் விண்ணப்பத்தைக் கவனித்து அனுப்பியிருக்கிறேன். நான் புதுதில்லிக்கு மாற்றிச் செல்கிறேன். உனக்கு வேலை கட்டாயம் கிடைக்கும்'' என்றார். அவர் கூறியபடி இரண்டே மாதங்களில் வேலை கிடைத்தது.

திருச்சியில் இரயில்வேயில் பணிபுரிந்து கொண்டிருந்த சமயத்தில் திரு. வி.ஆர். கோபாலகிருஷ்ணன் அவர்களைக் காதல் மணம் - பெற்றோரின் சம்மதத்துடன் - புரிந்து கொண்டார். அப்போது வி.ஆர்.ஜி. பத்திரிகைகளிலும், நாளிதழ்களிலும் வரும் விளம்பரங்களைச் செய்யும் விளம்பர ஏஜென்சியை நடத்தி வந்தார். இரயில்வேயில் பணிபுரிந்து வந்தாலும் விளம்பரங்களை, எப்படி 'டிஸைன்' செய்வது? எழுத்துக்கள் எந்தெந்த இடத்தில், என்ன வடிவத்தில் வர வேண்டும்? போன்றவற்றை தீர்மானிப்பதிலும், பிரிண்ட் போடுவதிலும் கணவருடன் இணைந்து செயல்பட்டார் ராஜி. இந்நிலையில் விளம்பரங்கள் பத்திரிகைகளை விட வானொலியில் அதிகம் பிரபலமாக வரத் தொடங்கியது. அந்தச் சமயத்தில் வானொலியில் விளம்பரம் செய்யும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கினார் வி.ஆர்.ஜி.

"இத்தனை காலம் பத்திரிகைகளில் விளம்பரங்களை எழுதி வந்திருக்கிற அனுபவம் இருப்பதால், வானொலி விளம்பரங்களையும், நாமே எழுதிப் பேசலாமே? இதற்கு என்று யார் உதவியையும் நாட வேண்டிய அவசியமில்லையே?'' என்று ராஜி கூறியதால், வானொலி விளம்பரங்களையும் தீர்மானித்து, வடிவமைக்கும் பொறுப்பு அவரிடம் வந்தது. திருச்சி வானொலி நிலையத்திற்கும், சென்னை வானொலி நிலையத்திற்கும், விளம்பரங்களை வடிவமைத்ததால், மாதத்தில் பாதி நாட்கள் சென்னையிலும், பாதி நாட்கள் திருச்சியிலும் கழிக்க நேர்ந்தது.

இதற்கிடையே வி.ஆர்.ஜி. தம்பதிகளுக்கு மூன்று குழந்தைகள் பிறந்தனர். இவ்வாறு பாதி நாட்கள் வெளியூரில் தங்குவதால், குழந்தைகளின் பராமரிப்பும், பள்ளிப் படிப்பும் தடைபட்டு வந்ததால், குடும்பத்துடன் சென்னைக்கே வந்து குடியேறினார்கள். புதிதாக சென்னைக்கு வந்து குடியேறிய சமயத்தில் சென்னை வானொலியில் விளம்பரப்படுத்திய வாடிக்கையாளர்களும், திருச்சி வாடிக்கையாளர்களும், மனதளவில் தெம்பும் ஊட்டி, ஆதரவும் அளித்தனர். இவர்களில் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள் கல்யாணி கவரிங் நிறுவனத்தினர்.

## ன்பச் சூழ்நிலையில் ணிவே ணையாக...!

சென்னையில் ஓரளவிற்குக் காலூன்ற வேண்டிய சமயத்தில், கணவருடன் இணைந்து பணிபுரிவதே முக்கியம் என்பதால் தனது இரயில்வே பணிக்கு, இரண்டு ஆண்டுகள் விடுமுறை கோரினார் ராஜி. கணவன் - மனைவி இருவரின் இணைந்த உழைப்பில் அவர்களது வானொலி விளம்பரத் தொழில் நன்கு செழித்து வளரத் தொடங்கியது. 1993-ம் ஆண்டு சென்னை வானொலியின் எஃப்.எம். ஒலிபரப்பில் அதாவது பண்பலை ஒலிபரப்பில், "வி.ஆர்.ஜி. நேரம்'' என்று ஒரு மணி நேர விளம்பரதாரர் நிகழ்ச்சியை செய்யும் வாய்ப்பும் கிடைத்தது.

"ராஜி! இதுவரை நாம் செய்து வந்த விளம்பரத் தொழில் வேறு. இவ்வாறு ஒரு மணி நேரம் விளம்பரதாரர் நிகழ்ச்சியை தயாரிப்பது வேறு. ஒரு மணி நேரத்தில் நேயர்களின் கலை ஆர்வத்திற்கும் ஈடுகொடுத்து, விளம்பரதாரர்களின் தேவைகளையும் பூர்த்தி செய்து வெற்றி பெற வேண்டும். இதற்கு அன்றாடம் உழைக்க வேண்டும். எந்தத் தடையோ, கஷ்




டமோ வந்தாலும் நாம் தளரக் கூடாது. முழு மூச்சாக இதில் இறங்க வேண்டும்'' என்றார் வி.ஆர்.ஜி.

அதன்படி முதல் நாள் நிகழ்ச்சியை மிகச் சிரத்தையாக, பதி னோரு மணி நேரம் உழைத்துச் செலவிட்டு தயாரித்தனர். உழைத்து தயாரித்திருந்தாலும், நல்ல முறையில் 'டேப்' அறுந்து போகாமல், மின்சாரத் தடை இல்லாமல் வெளிவர வேண் டுமே என்று மிகவும் கவலைப்பட்டனர். நிகழ்ச்சி நல்லபடியாக ஒலிபரப்பாகியது. அவர்களின் உழைப்பை வெளிப்படுத்தும் வகையில் நிகழ்ச்சியின் முடிவில், ''மூன்றெழுத் தில் என் மூச்சிருக்கும். அது முடிந்த பின்னா லும் பேச்சிருக்கும் - உங்கள் நண்பன் வி.ஆர்.ஜி.' என்ற வாசகம் வாசகர்கள் பலரைக் கவர்ந்தது.

நிகழ்ச்சித் தயாரிப்பதில் ஏற்பட்ட டென்ஷன் காரணத்தினாலோ, என் னவோ அடிக்கடி வி.ஆர்.ஜிக்குத் தலை வலி ஏற்படத் தொடங்கியது. சாதாரண தலைவலியாகவே தொடர்ந்து ஐந்தாறு நாட்கள் இருந்தது. ஒருநாள் அதிகமாகி, கண்கள் சிவந்து போகும் நிலைக்குப் போயிற்று. குடும்ப டாக்டரான திரு. வரகுணன் வந்து பரிசோதித்து பார்த்தபோது, வி.ஆர்.ஜிக்கு நினைவு அரைகுறையாகவே இருந்தது. திடீரென பத்து நிமிடங்கள் கழித்து எழுந்து. ''நீங்கள் எப்போது வந்தீர்கள் டாக்டர்?'' என்று கேட்டதும், குடும்பத்தாருக்கு நிலைமை மோசமாக உள்ளது என்று தெரிந்து, அவர் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

தீவிர சிகிச்சைப் பிரிவில் இரண்டு நாட் கள் பரிசோதனைகள் செய்யப்பட்டன. கொலஸ்ட்ரால், சர்க்கரை, இரத்த அழுத்தம் அனைத்தும் சரியான அளவில் இருந்ததால் 'ஸ்கான்' செய்யப்பட்டது. ஸ்கான் பரி சோதனை முடிவுகள் ராஜிக்கு இடியாக நெஞ் சில் இறங்கியது. பரிசோதித்த டாக்டர் ராஜியை அழைத்து,

''உங்கள் மனசை திடப்படுத்திக் கொள் ளுங்கம்மா. உங்கள் கணவருக்கு மூளையில் கட்டி - உருவாகி, இரு பாகங்களிலும் படர்ந் திருக்கிறது. இதனால் வாழ்நாளின் எண்ணிக் கைக்கு உத்தரவாதம் தர முடியாது. சில நாட் கள், சில வாரங்கள், சில மாதங்கள் என்று எப்போது வேண்டுமானாலும் அவர் உயிர் பிரியலாம். அதோடு இல்லாமல் படிப்படியாக உடல்நலம் குறைந்து ஏறக்குறைய ஒரு நடை பிணம் போல் ஆகிவிட வாய்ப்புண்டு. நீங்கள் வியாபாரத் துறையில் இருப்பதால் யார் யாருக்கு விவரம் சொல்ல வேண்டுமோ, சொல்லி விடுங்கள். உங்களால் செலவு செய்ய முடிந்தால், கான்சர் மருத்துவமனையில் ரேடியோதெரபி சிகிச்சை தரலாம். இதனால் வாழ்நாளை நீடிக்க முடியாது. ஆனால் அவ ரது இறுதி நாட்களை வலியின்றி கழிக்க உதவ முடியும்'' என்றார்.

யாரிடம் சொல்வது? வி.ஆர்.ஜி.யின் உடல் நிலை சரியில்லை என்று வாடிக்கையாளர் களிடம் சொல்வதா? சொன்னால் வியாபாரம் போய்விடும். பிறகு மருத்துவம் எப்படி அளிப் பது? குழந்தைகளிடம் சொல்வதா? அதைத் தாங்கிக் கொள்ளும் வயது அவர்களுக்கு இல்லையே? ''மெதுவாக எவ்வளவு நாள் முடி யுமோ தள்ள வேண்டியதுதான்!'' என்று மனதை திடப்படுத்திக் கொண்டார்.

உலகமே இருண்டு விட்ட நிலையிலிருந்து



விழித்து எழுந்தார். காலை முதல் மாலை வரை வீட்டு வேலை, இரயில்வே பணி, சமையல் அனைத்தையும் முடித்து இரவு மருத்துவ மனையில் தீவிர சிகிச்சைப் பிரிவின் வாசலில் படுத்துக் கொண்டிருக்கும்போது, வி.ஆர்.ஜி. நேரத்தின் 'ஸ்கிரிப்டை' எழுதுவார் ராஜி. ஸ்கிரிப்ட் எழுதும்போதே எங்கே விளம்பரம், எப்போது பாடல், எங்கு என்ன பேச வேண் டும் போன்றவற்றை எழுதிக் கொடுத்து விடு வார். அதன்படி 'ரெகார்டிங்' நடந்து வந்தது. எப்போது சாப்பிட்டோம், எப்போது உறங் கினோம் என்று தெரியாமல் நாட்கள் நகர்ந்தது ராஜிக்கு.

வி.ஆர்.ஜி. நேரம் 'ரெகார்ட்' ஆகிக் கொண்டு வந்த 'சங்கீதா ஸ்டுடியோ'வின் உரி மையாளர்கள் திரு. மகேஷ், திரு. கிருஷ்ணா இருவரும் ஒருநாள் ராஜியைக் காண வந்தனர். ''உங்கள் கணவர் உடல்நலம் குறையத் தொடங் கும் முன் அவரிடம் எங்கள் ஸ்டுடியோவை

விற்கப் போவதாகக் கூறினோம். "ஒரு ஸ்டுடியோ வாங்க வேண்டுமென்பது என் நீண்ட நாள் கனவு. நானே வாங்கிக் கொள்கிறேன்!" என்றார். இப்போது ஸ்டுடியோவை விலைக்குக் கொடுத்து விடப் போவதால் உங்களிடம் வந்துள்ளோம்" என்றனர்.

"ஸ்டுடியோ வாங்க வேண்டும் என்பது அவர் ஆசை. உண்மைதான். ஆனால் அதற்குத் தேவையான பணம் என்னிடம் இப்போது இல்லை. ஏற்கெனவே வியாபாரத்திற்குக் கையெழுத்து கூட அவரால் போட முடியவில்லை. சிட்டி யூனியன் பாங்க் அளித்துள்ள ஸ்பெஷல் பர்மிஷன் பேரில் நான்தான் கையெழுத்திடுகிறேன். இந்த நிலையில் நான் எப்படி ஸ்டுடியோ வாங்குவது?" என்று திகைப்புடன் கேட்டார் ராஜி.

"நாங்கள் முதலில் பேசியபடியே ஸ்டுடியோவை உங்களிடம்தான் தரப் போகிறோம். சாவியைப் பிடியுங்கள். உங்களுக்கு எப்போது முடிகிறதோ, அப்போது பணம் தந்தால் போதும்'' என்றனர் திரு. மகேஷ், திரு கிருஷ்ணா இருவரும்.

பூர்வ ஜென்ம புண்ணியத்தின் பலன் என்பது இதுதானோ என்று மகிழ்ந்து போனார் ராஜி. நன்றியில் கண்கள் குளமாய் நிரம்பின. சிட்டி யூனியன் வங்கியிடம் கடனாகப் பணத்தைப் பெற்று, ஸ்டுடியோவில் சில கருவிகள் வாங்கி அமைத்து வாடகைக்கு விடத் தொடங்கினார் ராஜி.

இதற்கிடையே வானொலியில் பண்பலை ஒலிபரப்பில் மதிய நேரமும், ஒரு மணி நேரம் விளம்பரதாரர் நிகழ்ச்சி செய்யும் வாய்ப்பு கிட்டியது. ஸ்டுடியோ வாங்கி விட்டதையும், மதிய நேரத்திலும் நிகழ்ச்சி தொடங்கப் போவதையும் திரு. வி:ஆர்.ஜியிடம் கூறியதும் மகிழ்ச்சியில் நெகிழ்ந்தார். உணர்ச்சிகளை வெளிப்படுத்த, பேச முடியவில்லை. ராஜியின்




கைகளைப் பற்றி உடல்குலுங்க அழுதார்.

மரணம் என்பது ஒரு மனிதனை எவ்வாறு மெல்ல மெல்ல தழுவுகிறது என்பதைக் கண் எதிரில் கண்டு துடித்துப் போனார் ராஜி. அடி அடியாக எடுத்து நடந்து வந்த வி.ஆர்.ஜி. நிற்க, உட்காரக் கூட முடியாத நிலையில், போர்வையைத் தூளி போல் ஆக்கி, அதில் அவரைத் தூக்கிச் சென்றனர் இரு மகன்களும். ரேடியோதெரபி சிகிச்சை அளிக்க - வி.ஆர். ஜியின் உடல்நலக் குறைவை சமாளிக்க சுமார் நான்கு லட்ச ரூபாய் செலவாயிற்று. ஆனால் முன்னேற்றமே இல்லை. இந்த நிலையில் அவர்கள் மகள் ப்ரியாவிற்குத் திடீரென 'அப்பெண்டிசைடிஸ்' அறுவை சிகிச்சை செய்ய நேர்ந்தது. அவளுக்கும் துணையாக மூன்று நாட்கள் இரவில் படுத்துக் கொண்டார் ராஜி. மூன்றாவது நாள் விடியற்காலையில் குடும்ப டாக்டர் வரகுணன் வந்து ராஜியை அழைத்தார்.

"அவருக்கு மிகவும் மோசமாகி விட்டது கொஞ்சம் உடனே வருகிறீர்களா?" என்றார்.

"என்னாயிற்று டாக்டர்? தைரியப்படுத்திக் கொள்கிறேன். என்ன என்று சொல்லுங்கள்!" என்று கலங்கினார் ராஜி.

"வி.ஆர்.ஜியின் உயிர் பிரிந்து விட்டது. மனதைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள்" என்றார் நண்பர் வி. குமார். "இத்தனை நாள் பட்டபாடு எல்லாம் வீணாகி விட்டது. முடிவு வந்து விடும் என்று தெரிந்தாலும் அவர் பிரிவை என்னால் தாங்க முடியுமா? உடனே என்

---

**ஒரு திருமணத்தில் வாயகன்ற பேசினில் நிறைய தண்ணீர் ஊற்றி அதில் வெற்றிலையை ஊறப் போட்டு வைத்திருந்தார்கள். சாப்பிட்ட பின் வெற்றிலைப் போட வந்தவர்கள் அந்தத் தண்ணீரில் வெற்றிலையைக் கழுவி உபயோகித்தனர். ஒரு பந்தி சாப்பாடு முடிந்தவுடன் அந்தத் தண்ணீர் மாற்றப்பட்டதையும் கவனித்தேன். வெற்றிலையைத் துடைக்க முடியாமல் தவிப்பதைத் தவிர்க்க பக்கத்தில் ஒரு பெரிய நாப்கின்னும் வைத்திருந்தனர். புழு, பூச்சி இல்லாத சுத்தமான வெற்றிலை!**



**– ஜானகி ரங்கநாதன்**




உயிரும் பிரிந்து விடக் கூடாதா?'' என்று ராஜியின் மனம் தவித்தது.

"என்னாச்சம்மா?" என்று மகள் ப்ரியா கேட்டதும், சமாளித்துக் கொண்டார். தனக்குக் கடமை, பொறுப்பு என்று மூன்று குழந்தைகளை கடையேற்ற வேண்டிய நிலை இருக்கிறது என்று உணர்ந்தார் ராஜி.

"டாக்டர், என்னிடம் ஆறாயிரம் ரூபாய் தான் இருக்கிறது. அது அவரது இறுதிச் செலவிற்கு வேண்டும். பணம் கட்டா விட்டால் ப்ரியாவை எப்படி அனுப்புவார்கள்? அவளது அப்பாவை அவள் பார்க்கணுமே?" என்று அழுதார் ராஜி.

"நான் பொறுப்பேற்றுக் கொண்டு கூட்டி வருகிறேன். அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். மருத்துவமனையில் நான் பேசி கூட்டி வருகிறேன்'' என்றார் வரகுணன்.

கூடை நாற்காலி ஒன்றில் ப்ரியாவைத் தூக்கி வந்து காட்டிய பிறகு, ஈமச்சடங்குகள் வி.ஆர்.ஜிக்கு நடந்தேறியது. அன்றைய தினம் மட்டும் வானொலியில் வி.ஆர்.ஜி. நேரத்தில் பக்திப் பாடல்கள் ஒலிபரப்பப்பட்டன. அவரின் மறைவு பற்றிக் கேட்டு பல நேயர்கள் வந்து வருத்தம் தெரிவித்தனர். அடுத்த நாளே தொடர்ந்து நிகழ்ச்சிகளை வானொலியில் அளிக்க அலுவலகம் சென்று விட்டார் ராஜி. பத்தாம் நாள் காரியத்தின் போதும் கூட, கடமை தவறாது வேலைக்குச் சென்றார். பதினொன்று, பன்னிரெண்டாம் நாள் வீட்டிலிருந்தார். பதின்மூன்றாம் நாள் மதியமே வேலைக்குச் சென்றார். உற்றார் உறவினர் பேசும் பேச்சிற்காக அவரது கால்கள் நிற்கவில்லை. அதன் பிறகு திரும்பிப் பார்க்கவே நேரம் இல்லாமல் போயிற்று. கடமை அவருக்கு வழிகாட்டிற்று.

நான்கு ட்ராக் வசதியிலிருந்த ஸ்டுடியோ எட்டு ட்ராக்காக மாறி டிஜிடல் ஸ்டுடியோவாக இன்று மாறி விட்டது. வானொலித் துறையில் இருந்து முன்னேறி தொலைக் காட்சியில் பல தொடர்களை தயாரிக்கத் தொடங்கினார் ராஜி.

"வானொலியின் காலம் வளர்ந்து விஷுவல் மீடியாவின் ஆதிக்கம் அதிகமாக உள்ள இந்தத் தருணத்தில், அதில் நான் மட்டுமல்ல- என் குழந்தைகளையும் நுழைத்து, தேர்ச்சி பெறச் செய்து விட வேண்டுமென தீர்மானித்தேன். அதன்படி 'சுமதி', 'படிக்காத மாப்பிள்ளை', 'கிராமத்துப் பறவை', 'புதிய வாசல்', 'கோடீஸ்வரியின் காதலன்', 'கல்யாணமே வைபோகமே', 'பணமிருக்க பயமேன்?' என்று பல தொடர்களை சன் டீவியில் தயாரித்து வெளியிட்டுள்ளேன். என் மகன்கள் ராம் ஷர்மா, ராஜேஷ் நாராயணன், மகள் ப்ரியா ஆகியோரை இத்துறையில் சிறு வயது முதல் ஈடுபடுத்தியிருக்கிறேன். இவ்வாறு வீடியோ சீரியல் தயாரிக்க ஒரு வீடியோ தியேட்டர் தேவைப்பட்டதால், அதையும் ஆரம்பித்திருக்கிறோம். அடுத்த முயற்சியாக தினமும் ஒளிபரப்பாகக்கூடிய 'SOAP OPERA' எனப்படும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன்'' என்கிறார் ராஜி.

எந்தவிதமான பின்னணியும் இல்லாமல் விளம்பரத் துறை பற்றிய அறிமுகமே திருமணமான பிறகுதான் என்ற நிலையில் கை நிறையப் பணமும் இல்லாதபோது தைரியமும் தன்னம்பிக்கையும் மட்டுமே மூலதனமாகத் துணைநிற்க வெற்றிப் படிகளில் முன்னேறிக் கொண்டிருக்கிறார் திருமதி ராஜி. வி.ஆர்.ஜி.

"பணம் இருப்பவர்களுக்கும் பிரச்னைகள் பல உள்ளன. பணம் இல்லாதிருப்பதும் பிரச்னைதான். பிரச்னைதான் வாழ்க்கை! அதனைத் தைரியத்துடனும் தன்னம்பிக்கையுடனும் போராடி நடத்த வேண்டும். சாதாரணப் பெண்ணாக ஆரம்பித்த என் வாழ்க்கையை ஒரு வெற்றிக் கொடி நட்டு விட்டுத் தான் முடிப்பேன். அந்த வெற்றி நிறைந்த வாழ்க்கையை நானே என் சுயசரிதமாக வெளியிட வேண்டும். அதனைப் படித்து, பெண்மணிகள் பலர் தன்னம்பிக்கை பெற்று முன்னேறி நடக்க வேண்டும் என்பதே என் ஆவல்!'' என்கிறார் ராஜி. வி.ஆர்.ஜி.

பேட்டி : **ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

---



**பிள்ளையார் சதுர்த்திக்கு களிமண் பிள்ளையார் வாங்கி வந்தவுடன் ஈரமாக இருக்கும்போதே, பொன் நிற வட்ட வடிவ சமிக்கையை மாலை போல் வரிசையாக ஒட்டி விடுங்கள். காசு மாலை அணிவித்தது போல் அழகாக இருக்கும். விளிம்பின் ஓரங்களில் நெல்மணிகளைப் பதித்தால் அலங்காரமாக இருக்கும்.**

**– வி. விஜயராணி.**

## ஸ்ரீ முத்துமாரி அம்மனின் அருளும் ஆசியும் பரிபூரணமாக அடைய தமிழக பக்த கோடிகளுக்கு ஒரு அபூர்வ சந்தர்ப்பம்

தமிழகத்தில் மிகப்பிரசித்தி பெற்ற சமயபுரம் அருள்மிகு ஸ்ரீமுத்துமாரி அம்மன் அருளால் தங்கள் குடும்பத்திலும் வாழ்க்கை யிலும் தொழில் ஸ்தானத்திலும் சகல முன்னேற்றங்களும் லாப ஸ்தானங்களும் ஏற்பட சமயபுரம் அருள்மிகு ஸ்ரீமுத்துமாரி அம்மனின் அருளும் ஆசியும் பெற்று கடந்த 25 ஆண்டுகளாக தமிழக பக்த கோடிகளின் குடும்பத்திலும் வாழ்க்கையிலும் சுபிட்சங்களையும் ஐஸ்வர்யங்களையும் ஏற்படுத்தி தமிழக பக்தகோடிகளிடையே அழியாப் பேரும் புகழும் பெற்று மறைந்த அருள்வாக்கு *ஸ்ரீலஸ்ரீ எஸ். பகவதி அம்மையாரின்* குமாரரும் பரம்பரை தொழில் வாரிசுமாகிய முத்து மாரி அம்மனின் அருளும் ஆசியும் பெற்ற தேவி உபாசகர் அருள்வாக்கு *ஸ்ரீலஸ்ரீ எஸ். சாஸ்திரிதாஸ்* ஸ்வாமிகள் ஜாதகம், கைரேகை இரண்டும் இல்லாமல் அம்பாளின் அருளால் தங்கள் குடும்பத்தில் உள்ள நன்மை, தீமைகளைத் தெரிந்து கொள்ளவும் எதிர் காலத்தைப் பற்றி அறிந்து கொள்ளவும் தாங்கள் நியாயமாக நினைத்த காரியங்கள் அனைத்தும் வெற்றி யடையவும் திருமணத்தில் தடைகள் உள்ள ஆண்களும், பெண்களும் திருமணமாகி பல ஆண்டுகள் சென்றும் குழந்தை பாக்கியம் இல்லாதவர்களும் செய்யும் தொழில் மந்தம் மற்றும் தங்கள் குடும்பத்தில் உள்ள சகல பிரச்ச னைகளுக்கும் ஸ்வாமி அவர்களை நேரில் சந்தித்து அம்மனின் அருள்பெற்று சகல நன்மைகளும் அடையுங்கள். நேரில் சந்திக்க முடியாத வெளியூர் பக்த கோடிகள் தங்கள் பெயர், வயது, பிரச்சனைகள் என்ன என்பதை விபரமாக தமிழில் எழுதி சுய விலாசமிட்ட மூன்று ரூபாய் கவர் இணைத்து *எஸ். சாஸ்திரிதாஸ் ஸ்வாமிகள் அருள் நிறுவனம், தபால் பெட்டி எண். 619, திருச்சி - 620 008, தென்னிந்தியா* என்ற முகவரிக்கு அனுப்பினால் அதை அம்மனின் விசேஷ பூஜையில் வைத்து அம்மன் அருள்வாக்கும் பிரசாதமும் அனுப்பி வைக்கப்படும். சமயபுரம் மகமாயிக்கு காணிக்கை பக்தகோடிகள் விருப்பப்படி எம்.ஓ.மூலம் அனுப்பலாம்.





*குறிப்பு* : நேரில் சந்திக்க விரும்பும் பக்தகோடிகள் பிரதி வெள்ளி, ஞாயிறு ஆகிய கிழமைகளில் மட்டும் அருள் நிறுவனம் பிளாட் நெ. 7, டோர் நெ. 1-101, ரெங்கராஜபுரம், மாருதிநகர், பஸ்ஸ்டாப், திருச்சி - சமயபுரம் மெயின்ரோடு, பிச்சாண்டார் கோவில் (P.O.), திருச்சி ஜில்லா. Pin : 621 216 என்ற முகவரியில் சந்திக்கலாம்.

ௐ

## எண்ணமும் செயலும் தூய்மையானால் நடப்பவைகள் நன்மையில் முடியும்

*பிரபஞ்சத்தில் பஞ்ச பூதங்களின் இயக்கத்தால் கிரகங்கள் இயற்கைக்கு உட்பட்டு தங்களின் சுழற்சியால் , ஒவ்வொருவரின் வாழ்கையில் ஏற்றங்களையும், தாழ்வுகளையும் ஏற்படுத்துகிறது. இவற்றின் அடிப்படையில் நாங்கள் ஜாதகங்களை தெய்வீக முறையில் மிகவும் துல்லியமாக ஆராய்ந்து, அவர்களின் கிரகநிலைக்கு ஒப்ப ராசிகற்களை, உத்திரவாதத்துடன் வழங்குகிறோம். நாங்கள் இப்படி வழங்கி பெற்றுக்கொண்டவர்கள் பதவிஉயர்வு, தொழில் மேன்மை, உடல் ஆரோக்கியம்,குடும்ப குழப்ப நிவர்த்தி, திருமண வாழ்க்கையில் சிறப்பு, புத்திர பாக்கியம் ஆகிய பலன்களை பெற்றுள்ளனர். எங்களிடம் எல்லா வகையான ஜாதி கற்களும் துல்லியமாக பரிசோதிக்கப்பட்டவை.*

பலவிதமான Original Fancy Beeds மற்றும் ஒரிஜினல் தாளிப்பவளம் எங்களிடம் உள்ளது.

*வருகை தாருங்கள்! மாவட்டத்தின் பிரத்தியேக ஜாதிக்கற்களின் சங்கமம்!!*

## பாலாஜி ஜெம்ஸ் & ஜுவல்ஸ்

867, 11வது வீதி, காந்திபுரம், கோயமுத்தூர் - 641 012.

போன்: 0422 - 495087. Cell: 98422 - 33111

**E-mail:** balajigems@yahoo.com **Internet:** www.directoryindia.com/balaji/gems

எங்களுக்கு எங்கும் கிளைகள் கிடையாது

UIPC(C)

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

***அசுவினி, பரணி, கிருத்திகை 1-ஆம் பாதம்.***

இராசிநாதன் செவ்வாய் இம் மாதம் 8-ஆம் இடத்தில் சஞ்சாரம் செய்கிறார். விருச்சிகம் செவ்வாய்க்கு ஆட்சி வீடாவதால் அதிக தொல்லைகளைத் தர மாட்டார். குடும்பத்தில் குழப்பங்களைக் குறைக்கச் செய்வார். சில தைரியமான முடிவுகளை எடுக்கச் செய்வார். குழந்தைகளுக்காக காத்திருப்பவர்களுக்கு புத்திரயோகம் கூடி வரும். மாத ஆரம்பத்தில் கலைஞர்களுக்கு பாராட்டும், புகழும் உண்டாகும். கலைத்துறையில் நெருங்கிய தொடர்புடையவர்களுக்கு அதிர்ஷ்டகரமான வாய்ப்புகள் தேடி வரும். ஏழரை ஆண்டு சனி மறைமுகமாக எச்சரிக்கைகளைக் கொடுத்துக் கொண்டிருப்பார்.

சினிமா படம் எடுப்பவர்கள், சினிமா சம்பந்தப்பட்ட தொழிலில் முதலீடு செய்பவர்கள், நன்கு யோசித்து செயல்படவும். கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட தொழிலில் நாட்டம் உடையவர்கள், நல்ல லாபம் அடையும் நேரம். பைனான்ஸ் தொழில் செய்பவர்களும், சீட்டு நடத்துபவர்களும் பொருளாதார நெருக்கடிக்கு ஆளாகலாம். தற்போது வீடு, பூமி போன்ற விவகாரத்தில் ஈடுபட்டுள்ளவர்கள், தடைகள் விலகி முன்னேற்றம் காண்பார்கள். 6-க்குரிய புத பகவான் 5-ல் இருப்பதால் தொழில் அபிவிருத்தி செய்ய கடன் வாங்க நேரிடலாம்.

சொந்தத் தொழில் செய்பவர்கள் தொழிலில் தற்போது எந்தவித மாற்றமும் செய்ய வேண்டாம். மனைவியின் உடல் நலனில் குறைவு ஏற்பட்டு மருத்துவச் செலவு உண்டாக நேரிடும். மற்றவர் தலையீடு காரணத்தால் உறவு வர்க்கங்களில் மனக்கசப்பு உண்டாகலாம். வார்த்தைகளில் கூடுதல் கவனம் தேவை. அரசியலில் தீவிர ஈடுபாடு உடையவர்கள் ஏதாவது ஒரு கட்சியில் சேரக்கூடிய சூழ்நிலை உண்டாகும். அரசுத் துறையில் அதிகாரம் உடைய பதவியில் இருப்போர் அரசியல் மாற்றங்களால் தொல்லைக்கு ஆளாகலாம், நான்காம் இடத்தில் உள்ள ராகு தாய் வழி உறவுகள் மூலம் மனக்கவலையை உண்டு செய்வார்.



செவ்வாய்க் கிழமை தோறும் முருகனை பூஜை செய்து வரவும். முடிந்தால் மலை மேல் உள்ள முருகனை தரிசனம் செய்யவும்.



## ரிஷப ராசி:

***கிருத்திகை 2, 3, 4- ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2-ஆம் பாதங்கள்.***

மாதத்தின் முற்பகுதியில் ராசிநாதன் சுக்கிரன் வக்கிர கதியில் சஞ்சரிக்கிறார். சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்து சஞ்சரிப்பது, சற்று தொல்லை தரக்கூடிய அம்சம். ஆனாலும், மாத நடுப் பகுதியில் புதன் உச்சம் பெற்று சஞ்சரிப்பது நன்மை தரக்கூடிய அம்சம். ஆட்சி பெறும் சூரியனும், உச்சம் பெறும் புதனும் பலவித நன்மைகளைப் புரிவார்கள். கட்டிட விஷயத்தில் முடக்கம் இருந்தால் அது விலகும்.

சிலருக்கு எதிர்பாராத தனலாபமும் உண்டாகும். கலைத்துறையில் குறிப்பாக நகைச்சுவை பாத்திரத்தில் நடித்து வருபவர்கள் எதிர்பாராத புகழை அடைவார். சிலருக்கு அரசாங்க விருதும் கிடைக்க நேரிடும். 3-ஆம் இடத்தில் ராகு சிறு அதிர்ஷ்டங்களைத் தேடித் தருவார். உங்கள் யோககாரகன் சனி விரயத்தில் நீச்சம் பெற்றாலும், செவ்வாய் கேந்திரத்தில் ஆட்சி புரிவது நீசப்பங்க ராஜ யோகத்தைக் கொடுக்கும். சிலருக்குத் திடீர் இரு

**செப்டெம்பர் 1999**

மணம் கூடி வரலாம். இரும்பு தங்கம் சம்பந்தப்பட்ட தொழிலில் சிரமத்தை அனுபவித்தவர்கள் எதிர்பாராத லாபத்தை நோக்கி அடியெடுத்து வைப்பார்கள். சுக்கிரனது வக்கிர சஞ்சாரம், மனைவியின் உடல்நலனிலும், குழந்தைகளின் கல்வியிலும் கவலை உண்டுசெய்யும். ரத்த சம்பந்தப்பட்ட தொல்லை உடையவர்களும், முதுகு வலி உடையவர்களும், இம்மாதம் மருந்துகளை கவனத்துடன் உட்கொள்ள வேண்டும்.

சிலருக்கு, பொருள் வரவு சரளமாக இருந்தாலும் செலவுகள் கூடுதலாகக் காணப்படும். அரசியல்வாதிகளுக்கு இடமாற்றங்கள் ஏற்படக்கூடிய காலம் இது. தைரியமாக இருக்கலாம். வெற்றி நிச்சயம்.

வெள்ளிக்கிழமை தோறும் லெக்ஷ்மி பூஜை செய்து வரவும். தேவையற்ற சஞ்சலங்கள் விலகுவதும், தனப்பிராப்தியும் ஏற்படும்.



## மிதுன ராசி:

***மிருகசீரிஷம் 3,4,-ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3-ஆம் பாதங்கள்.***

குரு பகவான் 11-ஆம் இல்லத்தில் தற்போது இருப்பதும் புதன் சூரியனுடன் சேர்ந்திருப்பதும் உச்சத்தை நோக்கிச் செல்லும் சாதகமான நிலை. 6-ஆம் இல்லத்தில் உள்ள செவ்வாய் சத்ரு உபாதையை குறைக்கிறார். குரு நீசம் பெற்ற சனியுடன் சேர்ந்தாலும் குரு பார்வைக்கு தோஷம் இல்லை. உங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடை இராது.

பிள்ளையாருக்கு கொழுக்கட்டை செய்தபின் குழந்தைகள்/பெரியோர்களுக்காக கொஞ்சம் சேமியாவை ஒடித்து கொழுக்கட்டையை அதில் புரட்டி ஆவியில் இட சேமியா கொழுக்கட்டை எல்லோரின் கைத் தட்டலையும் பெறவைக்கும்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.

கணவன் மனைவி உறவு வழக்கம் போல் மகிழ்ச்சியாக இருக்கும். புதபகவான் வீடு வாங்கவும் குடும்ப வாழ்வில் மகிழ்ச்சி உண்டாவதற்கும், பதவி உயர்வு பெறுவதற்கும், பெரிதும் உதவி புரிவார்.

கட்டிட பொறியாளர்கள், கலை சம்பந்தப்பட்ட பொருள் விற்பவர்கள் அரசுத்துறை அதிகாரிகள், வங்கித்துறை பணியாளர்கள், மொத்தப் பொருள்களை வாங்கி விற்பவர்கள் ஆகிய அனைவருக்கும் திருப்திகரமான சூழ்நிலை நிலவும்.

கடன், சத்ரு விவகாரங்கள் பூமி சம்பந்தப்பட்ட தொல்லைகள் குறையும். சிலர் சொந்தத் தொழிலை விரிவாக்கம் செய்ய நிலம் வாங்க வேண்டி வரலாம். ராகு பகவானால் சிறு தொல்லைகள் ஏற்பட்டாலும், அதிகம் கவலைப்படத் தேவையில்லை.

விஷ்ணு ஆலயங்களை தரிசிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். 8-ல் உள்ள கேது பகவானின் வேகம் குறைய சதுர்த்தி அன்று அஷ்ட திரவியங்களால் கணபதி ஹோமம் செய்யலாம். அல்லது சதுர்த்தி அன்று அருகம் புல்லால் விநாயகப் பெருமானைப் பூஜித்து வரவும்.

## கடக ராசி:



***புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.***

உங்கள் ராசி ஜலராசியாக அமைவதால் எப்போதும் பிரயாணத்தில் நாட்டம் உங்களுக்கு உண்டு. தடைப்பட்ட அந்நிய தேச பிரயாணம் கைகூடி வரும். இந்த மாதத்தில் திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் நிச்சயம் நடக்க வாய்ப்புள்ளது. குறிப்பாக ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு நேரம் அனுகூலமாக உள்ளது.

குடும்ப ஸ்தானத்தை குரு பார்ப்பதால் நன்மையே ஏற்படும். ராசி கேந்திரமாகிய குரு பகவான் இருந்து ஆறாம் இடத்தைப் பார்வை இடுவதால், கடன் தொல்லைகளைக் குறைக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. சுப கிரக தசை நடப்பவர்களுக்கு நன்மைகள் கூடுதல் ஆக தென்படும்.

சுக ஸ்தானாதிபதி சுக்ர பகவான் இரண்டாம் இடத்தில் புதன், சூரியனுடன் சேர்ந்துள்ளதால், தாயாரின் உடல்நிலை பாதிக்கப்பட்டு முற்றிலும் சரியாகும். புத பகவானின் சஞ்சாரம் சாதகமாக உள்ளதால் குழந்தைகளின் கல்வி, மனைவியின் உடல்நிலை போன்றவற்றில் நல்ல முன்னேற்றமும், பொருளாதாரச் சூழ்நிலை நன்கு அமையவும் வாய்ப்புள்ளது.

உத்தியோகரீதியாகவோ, தொழில் காரண

–ஆத்மாஸ்

மாகவோ, குடும்பத்தை விட்டு சில நாட்கள் வெளியூரில் தங்க வேண்டி வரலாம். அதனால் நன்மைகள் அதிகம் உண்டாகும். வாகன ஸ்தானத்தை குரு பார்வை இடுவதால் புதிய வாகனங்கள் வாங்கும் வாய்ப்போ, பழைய வாகனங்களைப் புதுப்பிக்க வேண்டிய சூழ்நிலையோ உண்டாகலாம்.

செவ்வாய்க்கிழமைதோறும் துர்கை சந்நிதானத்திற்குச் சென்று அர்ச்சனை செய்து வரவும். முடிந்தால் இம்மாத ஜென்ம நட்சத்திரம் அன்று துர்கா ஸுக்தத்தால் ஆஹுதி செய்து துர்கையைப் பிரார்த்திக்கவும். இந்த ஹோமத்தைச் செய்ய முடியாதவர்கள் இந்த யாகங்கள் நடைபெறும் இடத்தில் கலந்து கொண்டால் பலன் அடையலாம்.



உக்காரை : து. பருப்பு, க. பருப்பு சமபங்கு எடுத்து நெய் ஆக்கி ஆவியில் இட்டு உதிர்த்து தேவையான வெல்லப் பாகு செய்து தே. துருவல், ஏ. பொடி சேர்த்து பூரணம் செய்து சொப்பு செய்து கொழுக்கட்டைகளாகச் செய்யலாம்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.

## சிம்ம ராசி:



*மகம், பூரம், உத்திரம் 1–ஆம் பாதம்.*

உங்கள் ராசிநாதன் சூரிய பகவான் புதனுடன், சுக்கிரனுடன் கூடி சஞ்சரிப்பது, நன்மைகள் கூடுதலாகவும், தொல்லைகளை குறைவாகவும் தரக்கூடிய அம்சம் ஆகும். ஜென்மராசியில் உள்ள சுக்கிர பகவான் 6–ந் தேதிக்குப் பின் வக்கிர கதியில் கடகத்திற்குச் செல்வதால் அவரால் பெரிய பாதிப்புகள் ஏற்பட வாய்ப்புகள் இல்லை.

ஒன்பதாம் இடத்தில் உள்ள குருவும், அவருடன் சேர்ந்துள்ள சனி பகவானும், சில வெற்றிகளை தர உள்ளார். புதபகவானது சஞ்சாரம் இம் மாதம் முழுவதும் எல்லா விஷயங்களிலும், எந்தத் துறையில் உள்ளவர்களுக்கும் உதவும் நிலையில் இருப்பது உங்களது நல்ல முயற்சிக்கு வெற்றியை உண்டு பண்ணக்கூடிய அம்சமாகும். இல்லத்தில் குதூகலமும், மகிழ்ச்சியும் காணப்படும். நல்ல நிகழ்ச்சியை முன்னிட்டு உறவினர்கள் வருகை தருவார்கள். கடன் தொல்லைகள் குறையும்.

தங்க நகைகள், அடகு வைக்கப்பட்டிருந்தால் அதை மீட்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். பூமி சம்பந்தப்பட்ட தொழில் செய்பவர்கள் சற்று நிதானத்துடன் நடந்து கொள்வது நல்லது. விரய ஸ்தானத்தில் ராகுவும், சுக்கிரனும் சேர்ந்து சஞ்சரிக்கும்பொழுது, டீ.வி அல்லது கம்ப்யூட்டர் போன்ற நவீன பொருட்களில் தொல்லை ஏற்படலாம். மின்சாரப் பொருட்களை மிக கவனமாகக் கையாளவும்.

புதிய தொழில் ஆரம்பிக்க எண்ணுபவர்கள், கணபதி பூஜை செய்து விட்டு அல்லது கணபதி ஹோமம் செய்து விட்டுப் பின் ஆரம்பிக்கவும். பொதுவாக இந்த ஆண்டு குரு சாதகமாக சஞ்சரிப்பது நன்மை செய்யும். குறிப்பாக யோக தசை நடைபெறுபவர்கள், மற்றும் குருதசை நடைபெறுபவர்கள் அதிக நன்மைகளை அடைய முடியும்.

நான்காம் இடத்தில் செவ்வாய் சகோதர வழியில் நன்மைகளை உண்டு செய்வார். அரசியல்வாதிகளுக்கு இது ஆதாயமான மாதமாகும். உங்கள் தன்னம்பிக்கையும், தைரியமும் உங்களை வெற்றிப் பாதைக்கு அழைத்துச் செல்லும். சிலர் அரசியலில் தங்கள் தனித்தன்மையை நிலைநாட்டுவார்கள். பெண்களுக்கு ஏற்றம் தரக்கூடிய மாதமாகும். அரசுத் துறையில் உள்ளவர்களுக்கு ஏற்றமும், பதவி உயர்வும் உண்டாகும். இந்த மாதம் செவ்வாய், வெள்ளிதோறும் மகாலெக்ஷ்மி பூஜை செய்து வருவது நன்மை பயக்கும்.

## கன்னி ராசி:



*உத்திரம் 2,3,4–ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1,2,–ஆம் பாதங்கள்.*

மாதத்தின் முற்பகுதியில் சுக்கிர பகவானும், பிற்பகுதியில் சூரியனும், புதனும் சேர்ந்து ஜென்மராசியில் சஞ்சாரம் செய்யப் போவது உங்களுக்குப் பலவித நன்மைகளை உண்டு செய்யும். என்றாலும் பூமி சம்பந்தப்பட்ட விஷயங்கள், இளைய சகோதரர்களின் ஆரோக்கியம் போன்றவற்றில் கூடுதல் கவனம் தேவை. பூமி சம்பந்தப்பட்ட முடிவுகள் எடுப்பதை சில நாட்களுக்குத் தள்ளிப் போடவும்.

கலைத்துறையில் இருப்பவர்கள், புதிய

ஒப்பந்தங்கள் செய்யும் பொழுது எல்லா விஷயங்களையும் நன்கு யோசித்து பின் முடிவு எடுக்கவும். செங்கல், மண் போன்ற பூமி சம்பந்தப்பட்ட தொழில் செய்பவர்களுக்குச் சாதகமான சூழ்நிலை நிலவுகிறது.

காவல் துறையில் பணிபுரிபவர்கள் இடமாற்றத்தால் ஏற்றம் பெறுவார்கள். அரசு, அரசு சார்ந்த துறையில் பணிபுரிபவர்கள், மேலதிகாரிகளால் பாராட்டும், அரசாங்க உதவிகளும் கிடைக்கப் பெறுவார்கள்.

அன்னிய தேசத்திற்குச் சென்று நவீன கல்வியைப் பயில எண்ணுபவர்கள் சிறு தடைகளை சந்திக்க நேரிடலாம்.

நீசமாக உள்ள சனி பகவானை செவ்வாய் நீசபங்கம் செய்வதால் ஆரம்பத்தில் கடினமாக தென்படும் பிரச்னைகள் கூட மாத இறுதியில் மேன்மை நிலையை அடையும். ரத்த சம்பந்தப்பட்ட நோய் உடையவர்கள் தற்போது தீவிர மருத்துவம் செய்து கொள்ள வேண்டும். தாய் வழி உறவினருடன் ஏதும் சிறு காரணத்தால் உறவு பாதிக்கும்வண்ணம் நிகழ்ச்சிகள் உண்டாகி மனதிற்கு வருத்தத்தை அளிக்கலாம்.

உங்களது ஜென்ம நட்சத்திரம் அன்று அருகில் உள்ள அம்மன் கோவிலுக்குச் சென்று பால், தயிர், தேன் கொண்டு அபிஷேகம் செய்து வழிபாடு நடத்தவும். நவகிரக வழிபாடு செய்வதும் மேன்மை தரும்.



## துலா ராசி:

***சித்திரை 3,4 – ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் - 1, 2, 3 – ஆம் பாதங்கள்.***

மாத முற்பகுதியில் ராசிநாதன் சுக்கிர பகவான் சற்று பலஹீன நிலையில் சஞ்சரிக்கிறார். மற்ற கிரகங்களும், சற்று சுமாரான நிலையில் தான் சஞ்சாரம் செய்கிறார்கள். உங்களது செயல்கள் அனைத்திலும் சிறு தடைகள் காணப்படும். குழந்தைகளின் கல்வி, மற்றும் குடும்பச் சூழ்நிலைகள் மனதிற்கு சஞ்சலம் ஏற்படுத்தும்.

சொந்தத் தொழில் செய்பவர்களுக்கு எதிர்பார்த்த இடத்திலிருந்து பணம் வரத் தாமதம் ஆகும். மாதத்தின் பிற்பகுதியில் எதிர்பாராத நபர் ஒருவர் மூலம் நன்மை ஏற்படும். பணம் கொடுக்கல் வாங்கலில் அதிக எச்சரிக்கையுடன் செயல்படவும். வாகனங்களையும், பொருட்களையும் பாதுகாப்புடன் வைத்துவிட்டுச் செல்லவும். அரசுத் துறையில் உள்ளவர்கள் அதிக அளவு நிதானத்துடன் செயல்படவும். சுபநிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும்பொழுது, நகைகள் அதிகம் அணிந்து செல்ல வேண்டாம்.

வெளிநாட்டுக்குச் செல்ல முயற்சி செய்பவர்கள், விசா, பாஸ்போர்ட், சம்பந்தமான விஷயங்களில் தடை ஏற்பட்டு விலகும். புதிய தொழில் ஆரம்பிக்கலாமா? என்று சிந்தனை செய்பவர்கள், சில நாட்கள் கழித்து ஆரம்பிக்கவும். புதிய நண்பர்களிடம் அதிக எச்சரிக்கை தேவை. ரகசியங்களை பாதுகாக்க வேண்டிய நேரம். மற்றவர்களிடம் பழகும் போது அன்பான அணுகுமுறையைக் கையாள வேண்டும். அவசரப்படுவதும், கோபப்படுவதும் நண்பர்களையும் விரோதிகளாக்கும்.

செவ்வாய்க்கிழமை தோறும் கந்தசஷ்டி கவசம் சொல்லி வரவும். முடிந்தால் ஒருமுறை இம்மாதம் திருப்பதி சென்று வரவும். உங்கள் மனதில் உள்ள குழப்பங்களுக்குத் தெளிவான வழி கிடைக்கும் என்பதில் திடமான நம்பிக்கையுடன் இருங்கள்.



## விருச்சிக ராசி:

***விசாகம் 4–ஆம் பாதம், அனுஷம், கேட்டை.***

ராசிநாதன் செவ்வாய் இம்மாதம் முழுவதும் பலத்துடன் சஞ்சரிக்கிறார். ஜீவனாதிபதி சூரிய பகவான் மாத முற்பகுதியில் பலம் பெற்றும், பிற்பகுதியில் இலாப ஸ்தானத்திலும்

***100 கிராம் பொட்டுக்கடலை, 75 கிராம் சர்க்கரை இரண்டு ஏலக்காயுடன் பொடித்து ஒரு கைப்பிடி உலர்ந்த கொப்பரைத் துருவல் சேர்க்கவும். சிறிது கசகசாவும் நெய்யில் வறுத்து சேர்த்து இளம் தீயில் சிறிது நீர் விட்டு பூரணமாகக் கிளறி, சிறிய சிறிய உருண்டைகளாக்கி முதல் நாளே தயார் செய்து மறுநாள் மாவு கிளறி பூரணம் வைத்து ஆவியில் கொழுக்கட்டைகளாக வேக விடவும்.***





இதே பூரணத்தில் மேல் மாவு மைதா மாவு பிசைந்து சிறு அப்பள மாக்கி குவித்து குவியும் போது சிறிது நீர் தொட்டுக் கொள்ள கொழுக்கட்டை விரியாது. சூடான எண்ணெயில் பொரிக்கலாம்.

இந்த பொரித்த கொழுக்கட்டை கர்நாடகா ஸ்பெஷல்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



அனுகூல நிலையில் சஞ்சாரம் செய்யப் போகிறார். புதனும், அனுகூல நிலையில் இருப்பது நண்பர்களால் நல்ல ஆதாயத்தை ஏற்படுத்தும்.

அரசு, அரசு சார்ந்த பணி செய்பவர் களுக்கு நல்ல மாற்றங்களை உண்டுசெய்யும். காவல் துறை பணியாளர்கள் சாகசங்கள் பெறும் வாய்ப்பை அடைவார்கள். நான்காம் பாவாதிபதி தசை நடப்பவர்கள் வீடு யோகம் உள்ளவர்கள், தற்சமயம் வீடு கட்டக்கூடிய வாய்ப்பைப் பெறுகிறார்கள். உத்தியோகத்தில் சில புதிய மாற்றங்களை எதிர்பார்க்கலாம். இது எத்துறையினர்க்கும் பொருந்தும்.

மாத ஆரம்பத்தில் தாயார் உடல்நிலையில் சிறிது கவலை தோன்றக்கூடும். கலை உலகில் உள்ளவர்களுக்குக் குறிப்பாக சினிமாத் துறையில் நடிப்பவர்களுக்குப் புகழ் உண்டு செய்யும் வண்ணம் புதிய வாய்ப்புகள் கிடைக் கும். புது ஒப்பந்தங்களும், புதிய தொழிலுக்கு ஆன வளமான சூழ்நிலைகளும் உருவாகும். நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

மாத நடுப்பகுதியில் வேற்றுமொழி பேசு பவரால் சிறு பிரச்னை உண்டாகலாம். அது உங்கள் அந்தஸ்தை பாதிக்கும்வண்ணம் உண் டாகலாம். ஆயினும், கிரகங்கள் பூரண பலத் துடன் சஞ்சரிப்பதால் பிரச்னைகளை சாதுர் யமாக சமாளிப்பீர்கள். உங்கள் பக்கத்தில் நியாயம் உங்களுக்கு உறுதுணையாக இருக் கும். வீடு அல்லது மனை வாங்கும் போது நன்கு வாஸ்து தோஷம் இல்லையா? என்று பார்த்து வாங்கவும்.

6–ல் உள்ள குரு பழைய கடன்களை சரிசெய்ய வழிசெய்வார். மாதக் கடைசியில் மருத்துவச் செலவு உண்டாகும். தொடர்ந்து விஷ்ணுசகஸ்ரநாம பாராயணம் செய்வது மேன்மை தரும். புதன்கிழமைதோறும் லக்ஷ்மி நரசிம்ம ஸ்வாமியை பூஜை செய்து வாருங்கள். எல்லா தடைகளும் விலகி பலம் உண்டாகும்.

தனிப்பட்ட மந்திர உபதேசம் இருந்தால் அதை இடைவிடாமல் ஜெபித்து வரவும்.

## தனுசு ராசி:



*மூலம், பூராடம், உத்தி ராடம் 1–ஆம் பாதம்.*

மாதம் முழுவதும் குரு பகவான் பலத்துடனும் மாத முற்பகுதியில் 9–ஆம் இடமான பாக்கி யஸ்தானத்தில் சூரிய பகவான் பலத்துடனும், மாத பிற்பகுதியில் ஜீவனஸ்தானத்திலும் சஞ்சாரம் செய்வார். சொந்தத் தொழில் செய்பவர்களுக்கு இது ஏற்றமிகு வாரம்.

தங்க ஆபரண வியாபாரம் செய்பவர் களுக்கும், வாங்கி விற்பவர்களுக்கும், அனுகூல மான காலம். அரசியல்வாதிகளுக்கு மிக தொல்லைகள் மிகுந்த மாதம். எதிர்கட்சி களிலிருந்தும் அழைப்பு வர பெறுவார்கள். குழந்தைகளால் மகிழ்ச்சி உண்டாகும். வீடு, வாகனம் வாங்க வங்கிக் கடனை எதிர் பார்த்தவர்களுக்கு வங்கி, மற்றும் நிதி நிறு வனங்கள் கைகொடுக்கும்.

வீட்டு உபயோகப் பொருட்கள் வாங்கு வது, பழைய வாகனங்களை சீரமைப்பது போன்ற சூழ்நிலைகள் உண்டாகும். உறவினர் களின் இல்ல வைபவங்களுக்குக் கலந்து கொள்ளும் போது யாரிடமும் அதிகம் பேச வேண்டாம். தேவையற்ற சச்சரவுகள் உண்டா கும் வாய்ப்பு உள்ளது. காவல்துறை பணியில் உள்ளவர்கள் நல்ல முன்னேற்றம் அடை வார்கள்.

சூரிய பகவானால் தந்தை வழி உறவுகள் பலப்படும். இரும்பு வியாபாரம் செய்பவர்கள் வியாபாரத்தை விரிவுபடுத்த வேண்டாம். பெண்களுக்கு இது மகிழ்ச்சிகரமான மாதம். சந்திர தசை நடைபெறுபவர்களுக்கு சந்திரன் பலமாக அமைந்து விட்டால் கடல் பிரயா

ணம் கைகூடி வரும்.

தினந்தோறும் விநாயகர் அகவல் படித்து வரவும். விநாயகரைப் பூஜித்து எந்த ஒரு நற்காரியத்தையும் தொடங்கவும். ஏழைகளுக்கு எள் கலந்த அன்னத்தைத் தானம் அளிப்பதும், ஆன்மீக உபந்யாசங்களை கேட்பதும் மன திற்கு மகிழ்ச்சியை உண்டாக்கும்.



## மகர ராசி:

*உத்திராடம் 2,3,4-ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1,2-ஆம் பாதங்கள்.*

இந்த மாதம் முழுவதும் சுக்கிர, சூரிய சஞ்சாரங்கள் அனுகூலமாக இல்லை. ஆயி னும், குரு பகவான் விரயஸ்தானத்தைப் பார் வையிடுவது தேவையற்ற விரயத்தைக்கூட நன்மையாக மாற்றும். உடல்நிலையில் சிறு பாதிப்புகள் தென்பட்டாலும் கவலைப்பட வேண்டிய அம்சம் ஒன்றும் இல்லை.

திருவோணத்தில் பிறந்தவர்கள் புதிய திருப்பங்களை சந்திப்பார்கள். வெளிவட் டாரப் பழக்க வழக்கங்களில் சிறு குழப்பங்கள் தெரிந்தாலும் விரைவில் தெளிவு உண்டாகும். உங்கள் ராசி அனைவரையும் வசீகரிக்கக் கூடிய ராசி. பெரிய தலைவர்கள், அதிகாரிகள் உங்களைத் தேடி வரக்கூடும்.

குழந்தைகள் கல்வியில் அதிக கவனம் தேவை. மருத்துவ ஆலோசனை பெறாமல், மருந்துகளை உட்கொள்ள வேண்டாம். ரத்த அழுத்த நோய் உள்ளவர்கள் கூடுதல் கவனத் துடன் இருக்கவும். தடைப்பட்ட பதவி உயர்வு களைப் பற்றி மறுபரிசீலனை உண்டாகும். வீடு பழுது பார்ப்பது, வீடு வாங்குவது போன்ற விஷயங்களில், சிக்கனத்தைக் கடைப்பிடிப்பது நல்லது.

ஆண் ஜாதகருக்குப் பெண்களாலும், பெண் ஜாதகரானால் ஆண்களாலும் தேவை யற்ற சச்சரவு உண்டாகலாம். ஆனால் உங்கள் நாணயத்திற்கோ, செல்வாக்கிற்கோ குறை வராது.

தற்போது மகா கணபதி ஜபம் செய்து வரவும். முடிந்தால் கணபதி ஹோமம் செய் வது நல்லது. ஜென்ம நட்சத்திரம் அன்று கொழுக்கட்டை செய்து விநாயகருக்குப் பூஜை செய்து வரவும். தடைகள் விலகி நன்மை உண்டாகும். அன்னிய தேசத்திலிருந்து நல்ல செய்தி ஒன்று வர காத்திருக்கிறது.

## கும்ப ராசி:



*அவிட்டம் 3,4-ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி முதல் மூன்று பாதங்கள்.*

நீண்ட நாட்களாக சிறு சிறு தொல்லை களுடன் நகர்ந்து வந்த வாழ்க்கைப் பாதை வரக்கூடிய காலங்களில் நல்ல மாற்றத்தை அடையும். இதுவரை எந்தச் செயலும் உங்களுக்கு முழுமையான லாபம் தரவில்லை.

குருப்பெயர்ச்சியும் சிறு வெற்றியைத் தந்தா லும் பெரிய லாபம் ஆகப்பட்டது விலகிச் சென்று கொண்டிருந்தது. ஆனால் வரக்கூடிய காலங்களில் புத பகவான் அருளால் முயற்சிகள் முழு பலனைக் கொடுக்கும். எண் ணிய எண்ணங்கள் விரைவில் முடியும். ராகு பகவானால் வந்த அறுவை சிகிச்சை பயம் விலகும். சுக்கிர பகவான் அருளால் சுப நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பு உண்டாகி மனதிற்கு மகிழ்ச்சி தரும்.

பந்து மித்திரர்களுடன் உறவு பலப்படும். வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு வாகன லாபம் அல்லது பதவி உயர்வு ஏதாவது ஒன்று உண்டாகும். விஷ்ணு ஆலயங்களுக்குச் சென்று வாசனை மலர்களால் அர்ச்சனை செய்யவும்.

இப்பொழுதெல்லாம் கம்ப்யூட்டர் உபயோகிக்காத வர்களே இல்லை என்று சொல்லலாம். தொடர்ந்து கண் உற்றுப் பார்த்து பணி செய்வதால் கண் சோர்வடையும். இரவில் வெள்ளரிக்காயை வட்ட மாக வெட்டி, கண் மூடி இந்த வில்லைகளை கண் களின் மேல் வைத்திருந்தால், (அரை மணி நேரம் இப்படி வைத்திருந்தால் நல்லது) குளிர்ச்சியாக இருக்கும்.

- விஜயா கிருஷ்ணமூர்த்தி.





# ஓர் வேண்டுகோள்!

## ஸ்ரீ மயூரவல்லித் தாயார் ஸ்ரீ பாத கைங்கர்ய சபை

மயிலை அருள்மிகு ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஆலயத்து எம்பெருமான், அடியார்கள் குழாம் கூடி மகிழ, திருவாய்மொழி துவஜாரோஹண கருட மண்டபங்களைக் காணவிழைக்கிறான்.

கோபுரவாசல் உட்புறம் கொடிமரம் இடை வெளி விட்டு, ஸ்ரீ ஆஞ்சநேயர் சந்நிதிக்கு முன் இந்த மண்டபம் ஸ்ரீ கருடன் சந்நிதியை ஒட்டி அமையும்.

இந்தப் புதிய திருவாய்மொழி மண்டபத்துக்கு சுமார் பன்னிரண்டு லட்சம் ரூபாய் செலவாகும் எனக் கணக்கிடப்படுகிறது.

பக்தர்களின் பரிவுமிக்க நிதியுதவியோடுதான், மேற்படி மண்டப நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்ற இயலும். சம்ப்ரோக்ஷணம் ஆகஸ்ட் 22ந் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 6.00 முதல் 7.30 மணி வரை மிகச் சிறப்பாக நடந்தேறியது.

இதைக் கண்ணுறும் பக்தகோடிகள் தாராளமாகப் பொருளுதவி புரிந்து பகவத் கைங்கர்யத்தில் பங்குபெற வேண்டும் என்பது எமது பணிவன்பான வேண்டுகோள்.

குறிப்பு : நன்கொடை அளிப்போர் தவறாமல் ரசீது கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டுகிறோம்.

தொடர்பு முகவரி : ஸ்ரீ மயூரவல்லித் தாயார் ஸ்ரீ பாத கைங்கர்ய சபா,
8/1, மாரித் தெரு, மந்தைவெளி, சென்னை - 28. போன் : 4940992

# அதிர்ஷ்ட கற்களின் மகிமை

என் மகனுக்கு பல மாதங்களாக வயிற்று வலி இருந்து வந்தது. நான் பல மருத்துவர்களிடம் காண்பித்தும் சரியாக குணமடையவில்லை. இதனால் அவனுடைய படிப்பும் பாதிப்பு ஏற்பட்டு விட்டது. ஏதேச்சையாக என் நண்பன் ஒருவரின் மூலம் Lakshmi Pearlsக்கு விஜயம் செய்தேன். அவர்கள் என் மகன் ஜாதகத்தை பார்த்து அதற்குத் தகுந்த கற்களை கொடுத்து அணியச் செய்தார்கள். இப்போது அவன் வயிற்று வலி நல்ல குணமடைந்து கல்வியில் நல்ல முன்னேற்றத்தையும் காண முடிகிறது. ஸ்ரீதர், சென்னை - 15.

வாழ்வில் சகல சௌபாக்கியமும், ஐஸ்வர்யமும் பெருகிட எல்லா பிரச்னைகளிலும் வெற்றி பெற, ஜாதகம், கைரேகை, எண் கணிதம், கட்டை விரல் மூலம் துல்லியமாக ஆராய்ந்து, உங்களுக்கு அதிர்ஷ்டக்கல் அணிய பரிந்துரைக்க கட்டணம் ரூ. **101/-** மட்டுமே. **D.D/M.O.** வை லக்ஷ்மி பேர்ல்ஸ் என்ற பெயருக்கு அனுப்பவும். (ரூ. 151/- வெளியூர் அன்பர்களுக்கு)

ஒரிஜினல் ஜாதி கற்கள், நவரத்திரனங்கள், தங்கம், உயர்தர முத்து மற்றும் புதிய பேஷன் ஜுவல்லரி கிடைக்கும்.



# LAKSHMI PEARLS

## GEMS & JEWELLERY

"ARIHANT VTN PRESIDENCY" Shop No. 4, 139, North Usman Road, (Near Panagal Park), T. Nagar, Chennai - 600 017. Phone : 8211263.

**SUNDAYS ALSO OPEN 10 A.M. TO 3.00 P.M.**

இம்முறை கிருஷ்ண ஜெயந்தி அன்று உங்கள் இல்லத்தில் கிருஷ்ண பகவானை சகல உபசாரங்கள் செய்து பூஜை செய்யவும். பகவானுக்கு இனிப்பு நைவேத்யம் செய்து குழந்தைகளுக்குக் கொடுக்கவும். கிருஷ்ண மந்திரத்தை விடாமல் ஜபம் செய்யவும். சகலவித சௌகர்யங்களும் உண்டாகும்.

ஆஞ்சநேய ஸ்வாமியை புதன் மற்றும் சனிக்கிழமை தோறும் பூஜித்து வரவும். "ராம் ராமாய நம" என்று 28 முறை தொடர்ந்து சொல்லவும். ஆஞ்சநேயர் கோவிலுக்கு தினமும் சென்று வருவது நன்மைபயக்கும். ஆஞ்சநேயர் அருளால் சகல தடைகளும் விலகும்.

**– ஸ்வாமி கண்ணன் பட்டாச்சாரியா**



## மீன ராசி:

*பூரட்டாதி 4–ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

மீன ராசிக்காரர்களுக்கு இம்மாத ஆரம்பத்தில் சற்று தொல்லையும் முடிவில் நன்மையும் ஏற்படும். சுபநிகழ்ச்சி ஒன்றும் நடக்கும். எதிர்பார்த்த படி இட மாற்றமோ, பதவி மாற்றமோ கிடைக்கலாம். 6–ஆம் இடத்தில் ஆட்சி புரியும் சூரிய பகவான் சத்ருக்களை வணங்க வைப்பார்.

சரீரத்தில் வியாதியின் தாக்கம் குறையும். 2–ல் உள்ள நீச்ச சனி தற்சமயம் குடும்பத்தில் சிறு சலனத்தை உண்டுசெய்வார். சுக்கிர சஞ்சாரமும் அனுகூலமாக இல்லை. புதிய விஷயங்களில் எச்சரிக்கை தேவை. அரசுப் பணியில் உள்ளவர்களுக்கு சற்று சோதனையான காலம். எந்த ஒரு விஷயத்திலும் ஒரு முறைக்கு இருமுறை யோசித்தபின் முடிவை எடுக்கவும். உங்கள் திட்டங்களை முன்கூட்டியே தீர்மானித்துக் கொள்வது நல்லது.

இறைபக்தியும், கடமை உணர்வும் உள்ளவர்கள் எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை. அரசியல்வாதிகள் கடின முயற்சியால் வெற்றியை அடைவார்கள். கணக்கு வழக்குகளை சரிபார்த்துக் கொள்வது நல்லது. மாத மத்தியில் சிறு பிரயாணம் ஏற்படும்.

### மாதம் ஒரு மந்திரம்

*அஸாத்ய ஸாதஸ்வாமிந்*
*அஸாத்யம் தவகிம் வத!*
*ராம தூத க்ருபாஸிந்தோ*
*மத்கார்யம் ஸாதய ப்ரபோ!!*

ஸாத்யம் என்பது முடியக்கூடியது என பொருள். அஸாத்யம் என்றால் ஸாதிக்க முடியாதது என பெரியோர்கள் கூறுவார்கள்.

யாராலும் சாதிக்க முடியாத காரியங்களையும் சாதித்துக் கொடுப்பவர் ஆஞ்சநேயர். ராமதூதனால் முடியாதது எதுவும் இல்லை. அப்பேர்ப்பட்ட ராதூதன் நமக்குக் க்ருபை செய்வார். நம்முடைய எல்லா காரியங்களையும் சுபமாக ப்ரபு முடித்துக் கொடுப்பார்.

மேற்கண்ட ஸ்லோகத்தை விடாமல் சொல்லி வருவது சகல மங்களங்களையும் உண்டுசெய்யும். அனுமன் அருள் பெற்றவர்களுக்கு முடியாத காரியம் என்பது ஒன்றும் இல்லை. குழந்தைகள் முதல் பெரியவர் வரை ராதூதனை சிந்தித்து அவனருள் பெறலாம்.

**– ஸ்வாமி கண்ணன் பட்டாச்சாரியா.**

**கணேஷ் சதுர்த்திக்கு வாங்கும் விளாம் பழத்தை இம்முறை பச்சடி செய்து பாருங்களேன். ஓட்டை உடைத்து எடுத்து விட்டு உள்ளிருக்கும் பழத்தை எடுத்து, அதில் தூளாக்கிய வெல்லம் சேர்த்து நன்கு மசிக்கவும். பிறகு கட்டித் தயிர் கலந்து, ஒரு சிட்டிகை உப்புப் போட்டு, நன்கு கலக்கவும். ஒரு ஸ்பூன் எண்ணெயில் கடுகு, உ. பருப்பு, மிளகாய் வற்றல் தாளித்துக் கொட்டவும். மணமும், குணமும் நிறைந்த பச்சடி இது.**

**– விஜயராணி**



கடந்த ஓராண்டாக பேராசிரியர் கல்கியின் நூற்றாண்டு விழா இந்தியா எங்கும் கொண்டாடப்பட்டு, வரும் செப்டம்பர் 9-ந் தேதியன்று நிறைவுறுகிறது. எழுத்துலகின் தனிச் சக்கரவர்த்தியாக தமிழுலக மக்களின் மனதை ஆண்டவர் கல்கி. இன்று பல எழுத்தாளர்களுக்கும் முன்னோடி. அவர் எழுத்தில் தொடாத துறை இல்லை எனலாம். பத்திரிகையாசிரியராக அவர் சாதித்தவை இன்று வரை சரித்திரம்.

பேராசிரியர் கல்கியின் எழுத்துக்களில் பெண்மையின் பரிமாணங்கள் முழுமையாக மிளிரும். அவருடைய பெண் பாத்திரப் படைப்புக்கள் கற்பனை என்பதையே மறந்து உண்மை என சாதிக்கும் அளவு சித்திரத்திருப்பார். உதாரணம் சிவகாமியின் சபதம் கதாநாயகி சிவகாமி.

இங்கு தன் தந்தையின் எழுத்துக்களில் லயித்த அவருடைய பெண் திருமதி ஆனந்தி கூறுகிறார்....

# கல்கியின் கனவு

ஆனந்தி

அலை ஓசை நாவலைப் படிக்கும்போது அதுவும் பெண்கள் பேசியதாக கல்கியவர்கள் எழுதியிருக்கும் சம்பாஷணைகளைப் படிக்கும்போது எனக்கு ஒரே ஆச்சரியமாக இருக்கும். பெண்கள் பேசிக் கொள்வதையும், இளம் பெண்கள் கடிதங்கள் எழுதிச் செல்லும் பாணியையும் இவர் எவ்வளவு சரியாகப் புரிந்து கொண்டு எழுதியிருக்கிறார் என்று வியப்பேன்.

பற்பலவித மனோ பாவங்களையுடைய பெண்களைப் பற்றி கல்கி தமது நாவங்களிலும் சிறு கதைகளிலும் எழுதியிருக்கிறார். கிராமத்திலேயே வாழும் படிப்பறிவில்லா ஆனால் சாமர்த்தியமுள்ள வைதீகக் குடும்பத்துப் பெண்கள், நகரங்களில் வாழும் இளம் பெண்கள், பி.ஏ., பி.எல் படித்து வக்கீலாக விளங்கும் பெண்கள், இசையில் வல்ல சிறந்த பாடகிகள், வேறு மாநிலத்தவரை மணந்து கொண்ட பெண்கள், பாலிய விதவைகள், அரசிளங்குமரிகள், எத்தனை வகைப் பெண்மணிகளைப் பற்றி கல்கி எழுதியிருக்கிறார்!

இத்தனை வகை குணாதிசயங்களையும் அவர் எப்படிப் புரிந்து கொண்டார்?

பொதுவாகப் பெண்களிடமும், சிறப்





பாகத் தமிழ் நாட்டுப் பெண்களிடமும் கல்கிக்கு இருந்த மரியாதையும், அனுதாப மூமே அவரை இவ்வளவு ஆழமாகச் சிந்தித்துப் பெண்களின் பிரச்னைகளை அனுதாபத்துடன் அணுகி எழுத வைத்தது எனத் தோன்றுகிறது.



கல்கியவர்கள் ஊருக்கு உபதேசம் செய்வதோடு நிறுத்திக் கொண்டதில்லை. தன் வாழ்க்கையில் முதலில் சீர்திருத்தக் கருத்துக்களைத் தானே கடை பிடித்தார்.

அவருக்குக் கல்யாணம் நடந்தபோது மாப்பிள்ளை அழைப்பு ஏற்பாடு செய்திருந்தார் என் தாத்தா. பெட்ரோமாக்ஸ் விளக்குகள் நாலே நாலுதான் ஏற்பாடு செய்திருந்தாராம். பிள்ளை வீட்டைச் சேர்ந்த பெண்மணிகள் அதை ஒரு சாக்காய் வைத்துக் கொண்டு கூச்சல் போடத் தொடங்கினார்கள். கல்கிக்குக் கோபம் வந்து விட்டது. சாரட் வண்டியில் எழுந்து நின்று,



"என்னைப் பார்க்க இந்த நாலு விளக்குகளே போதும். இப்படிக் கூச்சல் போடும் உங்களைப் பார்க்க ஒரு விளக்கே போதும். இந்த வெட்டி சம்பந்தி சண்டைகளை என்னால் பொறுக்கவே முடியாது. இது இல்லை... அது இல்லை... இது வேண்டும், அது வேண்டும் என்று யாரும் மூச்சுப் பேச்சுக் காட்டக் கூடாது! ஏதாவது சொன்னால் கல்யாணமே வேண்டாம் என்று போய் விடுவேன்" என்றாராம்!

அவரைக் கல்யாணத்துக்கு சம்மதிக்க வைப்பதே பெரும் பிரயத்தனமாக இருந்தது. தேசத் தொண்டுதான் தன் பணி என்று தீவிரமாக வேலை செய்து வந்த கிருஷ்ணமூர்த்திக்கு ஒரு கால் கட்டுப் போடுவது அவசியம் என்று குடும்பத்தார் நினைத்ததில் அதிசயம் என்ன? "கதர்" மாப்பிள்ளை தான் நினைத்ததை சாதித்தார். சம்பந்தி சண்டைகள் இல்லாமல் கல்யாணம் நடந்தேறியது. கிருஷ்ணமூர்த்தியைக் கைப்பிடித்த ருக்மிணியின் வீட்டாருக்குப் பரம சந்தோஷம்! "இப்படி ஒரு மாப்பிள்ளையா?" என்று வியந்து போனார்கள். இத்தனைக்கும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட கல்யாணம்.



சென்னையில் குடித்தனம் வைத்தபோது, ருக்மிணிக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதைத் தெரிந்து கொண்டபோது சற்று அதிர்ச்சியடைந்தாலும் உடனே சமாளித்துக் கொண்டு,

"உனக்குப் படிக்கச் சொல்லிக் கொடுக் காட்டா நீ என்ன பண்ணுவே? உன்னைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பலே. ஆனால் இப்பக் கூட







படிக்கக் கற்றுக் கொள்ளலாம். நீ ஆசைப் பட்டால் நான் சொல்லித்தரேன்" என்று சொல்லி ருக்மிணியையும் சமாதானப் படுத்தும் பெருந்தன்மை அவருக்கு இருந்தது! புத்தகமும் சிலேட்டும் பலப்பமும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து அதை நிறைவேற்ற வும் செய் தார். "உன் அப்பாதான் எனக்கு மாதா பிதா, குரு, தெய்வம் எல்லாம்" என்று என் தாயார் சொல்வார்கள்.

கல்கியவர்கள் ஒரு எழுத்தாளனாக மலர்ந்த பொழுது பெண்கள் முன்னேற்றம் பற்றிய கருத் துக்கள் ஏற்கெனவே அவர் மனத்தில் உருக் கொண்டிருந்ததால் பெண்களைப் பற்றி மிக நுண்ணிய உணர்வுகளுடன் சிறு கதைகளிலும், நாவல்களிலும் கதாநாயகிகளைப் படைக்க முடிந்தது.

பெண்களுடைய உரிமைகளை நிலைநாட் டும் எண்ணம் மிகப் பெரிய முற்போக்குக் கருத் தாக தியாக பூமியில் வெளியாகியது.

கணவன் வீட்டில் அல்லல் பட்டு, கர்ப் பிணியாக இருந்தபோது கைவிடப்பட்ட சாவித்திரி, தன் அத்தையின் சொத்துக்களுக்கு வாரிசாகி றாள். அதன் பிறகு கணவன் ஸ்ரீதரன், அவளுடன் சேர்ந்து வாழ விரும்புகிறான். அவள் மறுக்கவே தாம்பத்ய உரிமை கோரி வழக்குப் போடுகிறான். ஸ்ரீதரனின் வக்கீல் குறுக்கு விசா ரணை செய்தபோது,

சாவித்திரி என்ற உமாராணி ஆவேசத் தோடு, "என்னிடமுள்ள பணத்துக்காக ஆசைப் பட்டுக் கொண்டுதான் இப்போது கிருகஸ்தாச் ரமம் நடத்த வந்திருக்கிறார்" என்று சொல்லி விட்டு நீதிபதியைப் பார்த்து,

"இது நியாயமா? ஒரு பெண்ணை அவள் பேரில் இஷ்டமில்லாத புருஷனுடன் வாழும் படி நிர்பந்தப்படுத்துவது நீதியா? தெய்வத்துக் குத்தான் அடுக்குமா? உலகமெல்லாம் சுதந்திரம் சுதந்திரம் என்று முழங்கிக் கொண்டிருக்கும் இந்நாளில் ஒரு பெண் பேதையைச் சட்டத்தின் பேரால் இத்தகைய கொடுமைக்கு ஆளாக் கலாமா?



**ஒரு சகோதரி ஆகஸ்ட் இதழில் நார்த்தங்காய் சாதம் செய்வது பற்றி எழுதியிருந்தார். நார்த்தங்காய் சாறு பிழிவதற்கு முன் அடுப்பில் காட்டி சற்று சுட்டுவிட்டு நறுக்கி சாறு எடுத்தால் தோலில் உள்ள கசப்பு ஏற்படாது. இதுவே நான் நார்த்தங்காய் சாதம் செய்யும் போது கையாளும் முறை. மிகவும் ருசியாக இருக்கும். பித்தத்திற்கும் நல்லது.**

**— எல். ஆனந்தவல்லி**

மனைவியைப் புருஷன் தள்ளி வைத்தால் மனைவி கோரக்கூடிய பாத்யதை என்ன? ஜீவ னாம்சந்தானே. அந்த மாதிரி நானும் இவருக்கு ஜீவனாம்சம் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால் இவருடன் சேர்ந்து வாழ்வதற்கு மட்டும் சம்மதிக்க மாட்டேன். ஒரு நாளும் மாட்டேன்" என்று சொல்கிறாள்!

கல்கி அறுபது ஆண்டுகளுக்கு முன் இந்தக் கருத்தை எவ்வாறு துணிந்து சொன்னார் என் பது வியப்பாக இருக்கிறது. தியாக பூமி ஆனந்த விகடனில் தொடராக வெளியாகிக் கொண் டிருந்தபோது ஒரு வாரப் பத்திரிகைக்கு ஏற் பட்ட "கிராக்கி" மாதிரி பிறகு ஏற்பட்டதா என்பது சந்தேகம்தான்.

கல்கியின் எழுத்துக்களால் கவரப்பட்டு ஏராளமான பெண்கள் பத்திரிகைகளையும், நூல்களையும் படிக்க ஆரம்பித்தார்கள் என் பதும் உண்மை. கல்கியின் எழுத்துக்களைப் படித்த பெண்மணிகள் தங்களுக்கும் ஒரு தனித் துவம் உண்டு என்பதை உணரத் தொடங்கி னார்கள்.

தியாக பூமி திரைப்படம் சென்ற ஆண்டு பார்க்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது! அதைப் பார்த்த என் மகள்கள் இரண்டு பேரும் ஆச் சரியப்பட்டார்கள். "தாத்தா இன்றைக்குச் சொல்லுகிறோம் என்று பெண்கள் நினைத்துக் கொண்டிருக்கிற கருத்துக்களை அறுபது ஆண்டுகளுக்கு முன்பே சொல்லியிருக்கிறாரே" என்று வியந்தார்கள்.

கள்வனின் காதலியில் அந்தக் காலத்தில் விதவா விவாகத்தை ஆதரித்து எழுதியிருப் பது, இதுவும் படிக்கும் வாசகர்கள் ஒப்புக் கொள் ளும்படி எழுதியிருப்பதுதான் அவருடைய எழுத்தின் வெற்றி என்று சொல்லுவேன். எப்பேர்ப்பட்ட சமூகச் சீர்திருத்தங் களையெல் லாம் தன் எழுத்தில் எடுத்துக் கொண்டு இருக் கிறார்!

வயதான கிழவரான தாமரை ஓடைப் பண் ணையார் கல்யாணியைப் பார்த்து ஆசைப்பட் டுக் கல்யாணம் செய்து கொள்கிறார். கல்யாணி யும் தானுமாக எடுத்துக் கொண்ட போட்டோ வைப் பார்த்த போது அவருக்கு நெஞ்சு துணுக் குறுகிறது. கல்யாணி ஜீவனில்லாமல் வெறும் உடலாக நடமாடிக் கொண்டிருப்பதைக் கண்டு வெதும்புகிறார். படுத்த படுக்கையாகிறார். இறந்து போவதற்கு முன்னால் கல்யாணியிடம்,

"கல்யாணி! நான் உனக்கு விடுதலை அளிக் கிறேன். இந்தக் கல்யாண பந்தத்திலிருந்து கடவுள் சாட்சியாக உன்னை விடுதலை செய் கிறேன், வருங்காலத்தில் நீ உன் மனத்துக்குப் பிடித்த வாலிபன் யாரையேனும் கல்யாணம் செய்து கொண்டால் என்னுடைய ஆத்மா வுக்கு அதனால் அதிருப்தி ஏற்படாது. திருப்தி

# எங்கு வாங்குவீர்?




~~125/-~~ **109.95**




~~135/-~~ **125.00**




~~80/-~~ **73.40**




~~125/-~~ **113.45**




~~73.60~~ **67.95**




~~122/-~~ **113.00**




~~82/-~~ **75.25**




~~12/-~~ **10.45**




~~42/-~~ **38.20**

மேலே உள்ள பொருட்கள் மட்டுமில்லாமல் எல்லா வீட்டு உபயோக பொருட்களுமே சென்னையிலேயே குறைந்த விலையில் சுபிக்ஷாவில் மட்டும்தான் கிடைக்கிறது. சுபிக்ஷா இன்று எல்லா வீட்டு உபயோக பொருட்களின் விற்பனையிலும் சென்னையில் No.1.




## சென்னையில் 31 சுபிக்ஷாக்கள்

மருந்துகளுக்கு **10%** தள்ளுபடி

- அடையார் 68/5, டீச்சர்ஸ் காலனி.
- அண்ணா நகர் W-125, 3வது அவென்யு
- அண்ணா நகர் (மே) 1944, 18வது மெயின்
- அசோக் நகர் 32, முதல் அவென்யு
- அரும்பாக்கம் D-103 MMDA காலனி
- ஆதம்பாக்கம் 1/C கருணீகர் தெரு
- ஆதம்பாக்கம் 15 பழண்டியம்மன் கோயில் தெரு
- ஆழ்வார்பேட்டை 101 டி.டி.கே. சாலை
- எழும்பூர் 22 எழும்பூர் நெடுஞ்சாலை.
- குரோம்பேட்டை 81 ராதா நகர் மெயின் ரோடு
- கீழ்பாக்கம் 20A/3, டெய்லர்ஸ் சாலை
- கோடம்பாக்கம் 332, ஆற்காடு சாலை.
- சாலிக்கிராமம் 7/4, அருணாச்சலம் சாலை.
- தி.நகர் 12 தணிகாச்சலம் ரோடு
- திருவான்மியூர் 2வது கிழக்குத் தெரு, காமராஜ் நகர்.
- விருகம்பாக்கம் 90/1 காளியம்மன் கோயில் தெரு
- வேளச்சேரி 137 வேளச்சேரி தாம்பரம் ரோடு
- நங்கநல்லூர் 140, காலேஜ் ரோடு.
- நுங்கம்பாக்கம் 114, வில்லேஜ் ரோடு.
- பெசன்ட் நகர் 2, எல்லையம்மன்கோயில் தெரு.
- மடிப்பாக்கம் 1/A4, மடிப்பாக்கம் மெயின் ரோடு

**புதிய சுபிக்ஷாக்கள்:**

சேலையூர்
11, கேம்ப் ரோட்

பெரம்பூர்
13&14, குருமூர்த்தி கார்டன் தெரு

பாடி
4, எம்.டி.எச். ரோடு

கிழக்கு தாம்பரம்
2, 2வது மெயின் ரோடு, சிட்லபாக்கம்
சானடோரியம், ரயிலடி அருகில்

- மந்தைவெளி 113, ஆர்.கே. மடம் சாலை.
- மவுண்ட் ரோடு 2, வெல்டர்ஸ் ஸ்ட்ரீட்.
- மயிலாப்பூர் 4/1, பீமசேனா கார்டன் தெரு.
- போரூர் 221 மவுண்ட் பூந்தமல்லி ரோடு
- மேற்கு மாம்பலம் 15, பிருந்தாவன் தெரு.
- மேற்கு மாம்பலம் 15/1, தம்பையா ரோடு

XXX/- ---> மற்ற கடைகளில் விலை
XXX.XX ---> சுபிக்ஷா விலை

**Subhiksha**
Pay Less ... Always

☎ **4910392**

*சராசரி குடும்பத்தின் மாதாந்திர தேவையின் அடிப்படையில்

*All trademarks acknowledged as properties of their owners

# ஆரோக்கியமான தூக்கத்திற்கு அருமருந்து!



DP Foam வழங்கும் PUF மெத்தைகள், களைத்து வரும் முதுகுகளுக்கு மிருதுவான மருந்து. நாளெல்லாம் உழைத்த சோர்வு தீர உறங்க சுகமான படுக்கைகள். DP Foam மெத்தைகள் மற்ற Foam மெத்தைகளைவிட அடர்த்தியாக இருப்பதால் முதுகிற்கு இதமான பாதுகாப்பு தருகின்றன. நீண்டகாலம் உழைக்கின்றன. பருத்தி மெத்தைகளில் ஆவது போல் தூசி படராது. கழுவலாம். சுலபமாக மடித்தும் வைக்கலாம்.

குடும்பத்தில் அனைவரும் நிம்மதியாக தூங்கி புத்துணர்ச்சியுடன் விழித்தெழ, உங்கள் மெத்தைகள் DP Foam ஆக இருக்கட்டும்.*




Sweet Dreams

Mattresses

துடிப்பான துவக்கத்திற்கு, நிம்மதியான இரவுகள்.

DP Foam ஸ்வீட் ட்ரீம்ஸ் மெத்தைகள், காண்டோர் தலையணைகள், அதிஅடர்த்தி மெத்தைகள், கன்வல்யூட் மெத்தைகள், பேபி காட், ஸ்போர்ட் கிட்ஸ் மற்றும் போல்ஸ்டர்கள், சென்னையிலும் பாண்டியிலும் உள்ள எங்கள் கம்பெனி கடைகளில் மட்டுமே கிடைக்கும்.




- சென்னை: 180, லஸ் சர்ச் சாலை, கடை எண் 29, T. N. H. B. ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், லஸ் கார்னர், மைலாப்பூர், சென்னை-4. (காமதேனு தியேட்டர் அருகில்) போன்: 498 2663.
- பாண்டிச்சேரி: 13, ரங்கப்பிள்ளை தெரு, பாண்டிச்சேரி-605001 போன்: 221095

FIDELIS -DP FOAM-366

தான் உண்டாகும்" என்று கூறிவிட்டு இறந்து போகிறார்.

அதன் பிறகுதான் தன்னுடைய காதலன் முத்தையனைப் பற்றிய மனோ ராஜ்யங்களில் ஈடுபடுகிறாள் கல்யாணி.

அதே போல் "கேதாரியின் தாயார்" பெண்களை அலங்கோலப்படுத்தும் அந்தக் காலத்து மூட வழக்கத்தைக் கண்டித்து எழுதப்பட்ட சிறுகதை. தன் தாயாரையும், விதவையான இளம் சகோதரியையும் பார்த்தே கிருஷ்ணமூர்த்திக்கு வேதனை ஏற்பட்டிருக்க வேண்டும்.

கேதாரியின் தந்தை அவன் குழந்தையாக இருக்கும்போதே ஓடிப் போய்விட்டார். தாயார் ரொம்பக் கஷ்டப்பட்டுக் கேதாரியைப் படிக்க வைக்கிறார். கேதாரியும் நன்றாகப் படிக்கிறான். ஒரு பணக்காரப் பண்ணையார் பெண்ணையும் கொடுத்து ஐ.ஸி.எஸ் படிக்க இங்கிலாந்துக்கு அனுப்பி வைக்கிறார்.

அம்மாமியின் கணவர் இறந்து போனதாகச் செய்தி வருகிறது. கேதாரியின் தாயாரை அவர்கள் வழக்கப்படி அலங்கோலம் செய்யும் சடங்கு நடந்து விடுகிறது. சீமையிலிருந்து திரும்பி வந்த கேதாரி சீக்கிரத்தில் செத்துப் போய் விடுகிறான். அவனுடைய மனைவியைப் பற்றி கல்கி எழுதுகிறார்.

"அவர்களுடைய வீட்டில் தற்செயலாகக் கேதாரியின் மனைவியைச் சந்திக்க நேரிட்டது. அவளைப் பார்த்ததும் என் உடம்பு நடுங்கிற்று. மயிர் சிலிர்த்தது. அவளைக் 'கிளி' என்று சொன்னேனல்லவா? அந்தக் கிளிக்கு இப்போது மொட்டையடித்து முக்காடும் போட்டிருந்தார்கள்." இப்படி முடிகிறது அந்தச் சிறு கதை. இதைப் படித்தவர்கள் இன்று கூட அந்த அதிர்ச்சியிலிருந்து சிறிது நேரம் விடுபட முடியாமல் தவிக்கிறார்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் இந்தச் சிறுகதை எப்படிப்பட்ட தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள்.

கல்கியவர்களின் சரித்திர நாவல்களில் வரும் கதாபாத்திரங்கள் நம்மோடு உறவாடுபவர்களாகவே தெரிகிறார்கள். அதிலும் பெண்களை வரலாற்று நாவல்களில் அவர் சித்தரித்திருப்பது மிகச் சிறப்பாக இருக்கிறது.

பொன்னியின் செல்வனில் செம்பியன் மாதேவி என்ற மூதாட்டியை எவ்வளவு உயர்வாகச் சித்தரித்திருக்கிறார் கல்கி. சிவ பக்தியில் சிறந்தவராகவும் தியாக சிந்தை உடையவராகவும் அறிவிற் சிறந்தவராகவும் அவரைப் படைத்திருக்கிறார் கல்கி. செம்பியன் மாதேவியார் அப்படித்தான் இருந்திருப்பார் என்ற முடிவுக்கே நாம் வரும்படி செய்து விடுகிறார். கல்கிக்குப் பெண் குலத்திடம் இருந்த மரியாதையை இந்தப் பாத்திரப்படைப்பில் நாம் காண்கிறோம்.

இளவரசி குந்தவைப் பிராட்டியார்! இந்த மாதிரி ஒரு பெண் கதாபாத்திரம் இதுவரை படைக்கப்பட்டதில்லை என்று தோன்றும் வகையில் குந்தவையை உயர்த்தியிருக்கிறார் கல்கி. குந்தவையின் மேதா விலாசம், அவளுடைய ஆளுமை, அவளிடம் மக்களுக்கு இருந்த விசுவாசம், அவளுடைய பெருந்தன்மை, நாட்டுப் பற்று, அறிவுக் கூர்மை எல்லாம் நம்மைப் பரவசப்படுத்துகின்றன. வந்தியத் தேவன் என்ற வாலிபன் குந்தவையை எவ்வளவு மதித்துப் போற்றுகிறான்.

பொன்னியின் செல்வன் நாவலில் வரும் மாந்தர்கள் அனைவரும் குந்தவைப் பிராட்டியாரிடம் மரியாதையுடன் சற்று பயமும் உடையவர்களாக இருக்கிறார்கள். சக்கரவர்த்தி சுந்தர சோழர் முதல் பழுவேட்டரையர்கள், அறிவிற் சிறந்த, மகா மந்திரியான அநிருத்தப்ரமராயர், செம்பியன் மாதேவியார், பொன்னியின் செல்வனான அருள்மொழி வர்மர் இப்படி அனைவருமே அப்பெண்ணிடம் மரியாதை காட்டுகிறார்கள். இத்தனைக்கும் குந்தவைப் பிராட்டியார் தகுதியானவர்தான் என்ற அளவுக்கு அவருடைய பாத்திரப் படைப்பு அமைந்திருக்கிறது.

பெண்களை மதித்துப் போற்றியவர் கல்கி. ஏராளமான பெண் எழுத்தாளர்களை உருவாக்கியவர் கல்கி. ஏராளமான பெண் வாசகர்களை உருவாக்கியவர் கல்கி. எத்தனையோ பெண்கள் நடனம் பயின்று மேடையில் ஆட வழி வகுத்தவர் கல்கி. பெண்கள் அனைவரும் கல்வியறிவு பெற வேண்டும் என்று விரும்பியவர் கல்கி. ஒரு பெண்ணைப் படிக்க வைத்தால் ஒரு குடும்பமே பண்பாடும், கல்வியறிவும் பெறும் என்று நம்பியவர் கல்கி. பெண்களை மதிக்க வேண்டும் என்று ஆண்களின் மனத்தில் ஆழமான எண்ணத்தை உருவாக்கியவரும் கல்கிதான். அவருடைய கனவு நிறைவேற வேண்டும் என்பதுதான் நம்முடைய விருப்பம், ஆதங்கம் எல்லாம்.



**ஆரணியில் மூர்த்தி என்பவரின் டெய்லர் கடையில் நான் படித்து ரசித்த வார்த்தைகள்.**

**கான மயிலாட**
**கடன் வந்து மேலாட**
**வாங்கியவன் கொண்டாட**
**நான் இங்கு திண்டாட**
**தயவு செய்து கடன்**
**சொல்லாதீர்கள்.**

**– முள்ளிப்பட்டு கண. சிவகுமார்**

ஸ்ரீ:

ஸ்ரீமந் நடனகோபால நாயக்யை நம:




"ராணி சாரீஸ்"

"RANEE SAREES"

MADURAI

SPECIAL QUALITY

COLOURS ARE GUARANTEED

FOR DHOBI WASH

COPY RIGHT REGD. A-52846/95

சேலைகளின்
நிறம்
அது நிரந்தரம்
அதுவே...
ராணி சாரீஸ்
தரம்!

மதுரை **ராணி சாரீஸ்** சுங்குடிப் புடைவைகளுக்கு

## சென்னையில் நிரந்தர தனி ஷோரூம்

- 5.40 மீட்டர் முதல் 9.20 மீட்டர் வரை ராணி சாரீஸ் கிடைக்கும்.
- மதுரை Special cotton Sundhar Sarees, பெங்கால் காட்டன், பாலி காட்டன், நெகம்ம், வேங்கடகிரி, கோடம்பாக்கம், அனைத்துரக பேன்ஸி காட்டன் மற்றும் அனைத்து ரக சுங்குடி சேலைகள் கிடைக்கும்.
- சல்வார், சூடிதார் மெட்டீரியல்ஸ் கிடைக்கும்.
- திருமண விசேஷங்களுக்கான உயர்தர வேஷ்டிகள் கிடைக்கும்
- சென்னையில் ஒரிஜினல் ராணி சாரீஸ் இங்கு மட்டுமே உண்டு. மற்றவை நம் தயாரிப்பல்ல

## ராணி சாரீஸ் எக்ஸ்குளுஸிவ் ஷாப்பி

கோல்டு கிரஸ்ட் காம்ப்ளக்ஸ் முதல் மாடி

54 & 55 வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், பனகல் பார்க்,

(ஸ்ரீ சாரதா வித்யாலயா பள்ளி எதிரில்)

சென்னை – 17 Ph: 8225778

SNC MDY

'வருங்காலத்தில் நூல்களுக்கு உள்ள வரவேற்பு வெகுவாகக் குறைந்து விடுமா?' என்ற சந்தேகம் அவ்வப்போது படித்தவர்கள் மத்தியில் எழுவதுண்டு. இந்தக் கவலை நியாயமானது தான் என்பது போல் அமைந்துள்ளது எடின் பரோவிலிருந்து வந்துள்ள ஒரு தகவல். அங்குள்ள நிறுவனம் ஒன்று 1768லிருந்து 'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா' என்ற நூலைத் தொடர்ந்து வெளியிட்டு வந்துள்ளது. மிகப் பெரும்பாலான சந்தேகங்களுக்கு விடை கொடுக்கும் இந்த நூல் வெகு பிரபலமான ஒன்று. இந்த நூலை வெளியிடுவதைத் தான் நிறுத்திக் கொண்டதாக அறிவித்திருக்கிறது வெளியீட்டு நிறுவனம். நூலின் விற்பனை குறைந்து கொண்டு வருவதுதான் காரணமாம். தங்களுடைய மிகப் பெரும்பாலான வாசகர்கள் இந்த நூலின் சி.டி. ரோம் வடிவத்துக்கு மாறிவிட்டார்களாம்.



• முதல் பெண் தலைமை

ஆந்திர அரசின் மீது உச்ச நீதி மன்றத்தில் பொது நல வழக்கு ஒன்று தொடுக்கப்பட்டது. அரசின் சார்பில் சில மாதங்களுக்கு முன் அளிக்கப்பட்ட ஒரு விருந்தில் புள்ளிமான், முயல், காட்டுப் பன்றி போன்ற பாதுகாக்காப்பட்ட வன விலங்குகளின் இறைச்சி பரிமாறப்பட்டது என்பது குற்றச்சாட்டு. பரபரப்பை ஏற்படுத்திய இந்த வழக்கில் கோழி, ஆடு போன்றவற்றின் இறைச்சிகள் மட்டுமே விருந்தில் இடம் பெற்றன என்ற மாநில அரசு தரப்பு வாதத்தை ஏற்று வழக்கை தள்ளுபடி செய்திருக்கிறது நீதி மன்றம்.

# நியூஸ் ஜாலட்

அமெரிக்காவில் உள்ள கென்னடி விணவெளி மையத்திலிருந்து 'கொலம்பியா' என்ற விண்கலம், முதலில் ஏற்பட்ட சில தடைகளுக்குப் பின், வெற்றிகரமாகக் கிளம்பியது. இதன் மூலம் விண்வெளி வீரர்கள் அடங்கிய குழுவுக்குத் தலைமை ஏற்ற முதல் பெண்மணி என்ற பெருமை எலின் காலின்ஸ் என்பவருக்குக் கிடைத்துள்ளது.



அமெரிக்க முன்னாள் அதிபர் ஜான் எஃப் கென்னடியின் மகன் . கென்னடி ஜூனியர் விமான விபத்தில் இறந்தார். தனது மனைவி மற்றும் மைத்துனியுடன் நியூ ஜெர்ஸியிலிருந்து தனி விமானத்தில் புறப்பட்டுச் சென்றார். விமானத்தைக் கென்னடி ஜூனியரே ஓட்டினார். இந்த விமானம் கடலில் விழுந்து நொறுங்கியது. கென்னடி குடும்பத்தில் பலரும் கோரமான முறையில் இறப்பது அமெரிக்கர்களை துயரத்தில் ஆழ்த்தியுள்ளது.



• வேடிக்கை அல்ல: வேதனை

பொறியியல், மருத்துவத்தில் நிபுணத்துவம் பெறுவதற்கான சிறப்புப் படிப்பிற்கு இட ஒதுக்கீடு அடிப்படையில் தேர்வு செய்யக் கூடாது. தகுதி மட்டுமே அடிப்படையாக

• சகித்துக் கொள்ள முடியாதவர்?



• விமான சோகம் •

இருக்க வேண்டும் என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது.

**பி**பிசி செய்திப் படமொன்றைத் தயாரித்து வருகிறது. இதில் பிரிட்டனின் முன்னாள் பிரதமர் ஜான் மேஜர் தனது பேட்டியில் அவருக்கு முன் அப்பதவியை வகித்த மார்கரெட் தாட்சரைப் பற்றி மிகவும் கடுமையாக கருத்துக்களை வீசியிருப்பது பரபரப்பான விஷயமாகி உள்ளது. "தாட்சரின் நடவடிக்கைகள் சகித்துக் கொள்ள முடியாதவையாக இருந்தன. எப்போதும் ஏதாவது (சதி) திட்டங்கள் தீட்டுவதும், அவ நம்பிக்கையோடு இருப்பதும் அவரது தனிச் சிறப்புகள்" என்கிறார்.

**செ**ன்ற மாதம் பதினோராம் தேதி முழு சூரிய கிரகணம். இந்த நூற்றாண்டின் கடைசி சூரிய கிரகணமான இது ஐரோப்பாவின் பல நாடுகளிலிருந்து. இந்தியாவில் பரோடா, ஸ்ரீகாகுளம் ஆகிய பாதை வழியாக நிகழ்ந்தது. விசேஷக் கண்ணாடி அணிந்துதான் அன்று சூரியனைப் பார்க்க வேண்டும் என்ற எச்சரிக்கையை மீறியதால் இரான் நாட்டின் ஒரு பகுதியில் வாழும் 450 மக்களுக்குக் கண் பார்வை கடுமையாக பாதிக்கப்பட்டிருக்கிறது.

• சீனாவும் தயார்



**மு**ன்னாள் பெட்ரோலியத் துறை அமைச்சர் சதீஷ் சர்மா தனது அதிகாரத்தைத் தயாராகப் பயன்படுத்தி பெட்ரோல் பம்ப்களை விநியோகித்தார். இதற்காக அவர் ஐம்பது லட்ச ரூபாய் நஷ்டஈடு கட்ட வேண்டும் என்று 1996ல் நீதிமன்றம் கூறியதற்கு எதிரான மறுபரிசிலனை மனு தொடர்பாக உச்சநீதி மன்றம் சமீபத்தில் தீர்ப்பு வழங்கியிருக்கிறது. அமைச்சரின் செயல் அராஜகம் என்று கடுமையாகக் கூறிவிட்டு அதே சமயம் அவர் அபராதத் தொகை தர வேண்டியதில்லை என்றும் கூறியது பலத்த விமர்சனத்துக்கு உள்ளாகியிருக்கிறது.

**கை**சல் இடத்தில் நடந்தது அந்த பயங்கரமான ரயில் விபத்து. அவத்-அஸாம் எக்ஸ்பிரஸும், பிரம்மப் புத்ரா மெயிலும் மோதிக் கொண்டதில் பதிமூன்று ரயில் பெட்டிகள் அலங்கோலமாகச் சிதைவடைய, முன்னூறு பேர் உயிரிழந்தனர். அறுநூறு பேருக்கு மேல் பலத்த காயம். ரயில்வே அமைச்சர் நிதிஷ் குமார் ராஜினாமா செய்திருக்கிறார். ரயில்வே ஊழியர்கள் சிலரின் கவனக்குறைவே இந்த மாபெரும் விபத்துக்கு வழிவகுத்திருக்கிறது.

**ப**டத்தில் இருக்கும் ஒன்பது வயது சிறுவனின் பெயர் ட்ராவிஸ் பார்க்கர். இந்த அமெரிக்கச் சிறுவன் ஏதோ விளையாட்டுக்காக இந்தக் கோமாளித்தனமான உடையை அணியவில்லை. இவனது மரபணுவில் உள்ள ஒரு குறைபாடு காரணமாக சூரிய வெளிச்சம் என்றாலே இவனுக்கு அலர்ஜி. இவனுக்காக நாஸா விண்வெளி அமைப்பு ஸ்பெஷலாக வடிவமைத்துக் கொடுத்துள்ள ஏர் கண்டிஷன் செய்யப்பட்டுள்ள உடையிது.

**ரா**க்கெட் மூலம் மனிதனை விண்வெளிக்கு அனுப்புவதில் ரஷ்யாவும் அமெரிக்காவும் எப்போதோ வெற்றி கண்டுவிட்டன. இப்போது இந்தப் பட்டியலில் சீனா. கோபி பாலைவனத்தில் உள்ள விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் இதற்கான ராக்கெட் தயார் நிலையில் உள்ளது.

— ஜி.எஸ்.எஸ்.

## 3ரோஸஸ் பிரமாதமான PERSONALITY பக்கம்

### உன்னிலிருந்தே அனைத்தும் ஆரம்பம் – 2

# வாழ்க்கை அனுபவிப்பதற்காக!

எங்கெங்கோ பிறந்து வளர்ந்த இருவர் மணந்து, வாழ்ந்து, குழந்தைகள் பெற்று அவர்களை வளர்த்து – இப்படியான இல்லற வாழ்வில், ஒரு ஆண் பெண்ணின் முக்கால்பாக ஆயுட்காலம் கழிகிறது. சராசரியாக 40 முதல் 50 ஆண்டுகளுக்கு சேர்ந்து வாழ வேண்டிய அவ்விருவரும் எப்படி ஒன்று சேர்கின்றனர்?

"இன்று பிடித்த இந்தக் கையை, தொண்டு கிழம் ஆனாலும் விடமாட்டேன். ஜீவிதாப்தம் நீயும் நானும் இப்படியே இருக்க வேண்டும்" என்று திருமணத்தின் போது சப்தபதி மந்திரத்தைக் கூறி கைபிடிக்கும் அந்த இருவர் வாழ்விலும் நான்தோறும் அங்கம் வகிப்பவை பல்வேறு விஷயங்கள். அவற்றில் உடல் உறவு என்பது நெடுங்காலத்துக்கு அங்கம் வகிக்கும் முக்கியமான ஆனால் புனிதமான சமாசாரம் ஆகும். இதன் மூலம் தனிநபர் நிறைவை அடைகிறாரோ இல்லையோ – குழந்தைகள் பிறந்து, தலைமுறை தொடர, மனிதகுலம் தழைக்க இந்த விஷயம் மிக முக்கியப் பணியினை செய்யவே செய்கிறது.

திருமணத்திற்குப் பின்பே இடம்பெற வேண்டிய சங்கதி இது என்றாலும், மேற்கத்திய கலாச்சார பாதிப்பு, சினிமா, சினிமா போஸ்டர்கள், தரம்கெட்ட பத்திரிகைகள், கேபிள் டி.வி. முதலிய காரணிகளால் இன்றைய சூழலில் திருமணத்திற்கு முன்பே கூட சிலரது வாழ்வில் இது இடம்பெற்று விடுகிறது. ஊசி இடம் கொடாமல் நூல் நுழைய இயலாது – இது மறுக்க முடியாத உண்மை. எனவே, பெண்ணின் விருப்பம் மற்றும் சம்மதம் இன்றி இந்த சங்கதி நடைபெற வழியில்லை. பெண்ணே! உன்னிலிருந்தே தான் ஆரம்பம்...

எனவே திருமணத்துக்கு முன் இது இடம் பெறாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு உன் கையில். ஆனால் இளம்தலைமுறை பெண்களின் கேள்வி : "கற்புநெறி எனக்கு மட்டும்தானா? இதை ஏன் நான் கடைபிடிக்கணும்? வாழ்க்கை அனுபவிப்பதற்குத்தானே? கற்பு நெறிக்கு திருமணம் அவசியந்தானா?" இதுபோன்ற கேள்விகள் சமீபத்தில் எடுக்கப்பட்ட சர்வேயின் போது கேட்கப்பட்டன. 'இந்து' ஆங்கில நாளிதழில் கூட வந்தது. எனவே, இதைச் சற்று தெளிவுபடுத்திக் கொள்ளுதல் நல்லதல்லவா?

கற்பு என்பது இருபாலருக்குமே வேண்டியது. இது இருபாலராலும் கடைபிடிக்க வேண்டிய ஒரு ஒழுக்கநெறி. இதில் மாற்றுக் கருத்துக்கு இடமே இல்லை. நமது முன்னோர்கள் பல ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து கிடைத்த அனுபவத்தில் தோன்றிய நிலை தானே தவிர – இது ஆண் வர்க்கத்துக்குப் பிடித்தமானது என்பதால் ஏற்படுத்தப்பட்டது அல்ல என்பதை அனைவரும் உணரணும்.

"பால் கவர்ச்சி என்பது ஆசையின் வேற்றுருவமே! வயது ஏற ஏற இயற்கை



யாகவே ஒவ்வொருவர் மனதிலும் இந்த குணம் ஏற்படும். எந்த எண்ணம் ஏற்பட்டு, எந்த நட்பின் துணைகொண்டு, எந்தச் செயல் மூலம் இந்த உடல் வந்ததோ, அந்த உடலுக்கு அதே எண்ணம் வரத்தான் செய்யும். அந்த நட்பின் மீது மனம் செல்லத்தான் செய்யும். அந்தச் செயலைத்தான் செய்யவும் தூண்டும்'' – மகரிஷி வேதாத்திரி சொல்கிறார். ஆனால் எப்போது? யாருடன்? – இதுவே கேள்வி.

விஞ்ஞானபூர்வமான கருத்துக்களையும் மனவளக் கலையையும் செலவின்றி ஆரவாரமின்றி அமைதியுடன் மக்களுக்குப் போதித்து வரும் மகரிஷி வேதாத்திரி அவர்களின் பதிலையே தருகிறேன் : "ஒரு செயலை... செய்தால் என்ன விளையும் என்று பார்க்கிற போது, அந்த விளைவானது தனக்கோ பிறர்க்கோ தற்காலத்திலோ பிற்காலத்திலோ அறிவுக்கோ உடல் உணர்ச்சிக்கோ துன்பம் தருமானால் அதைத் தவிர்க்க வேண்டும். இதுதான் ஒழுக்கம். உடலுறவின் போது அவ்விருவர்க்கிடையேயும் உயிர்க்கலப்பு பெரும் அளவில் நடைபெறுகிறது. அப்போது ஏற்படும் கழிவு கலப்பினால் பிறக்கும் இருமிகள் மிகவும் வீரியம் உடையவை. சம்பந்தப்பட்டவர்களை குறிப்பாக பெண்களை மிகவும் பாதிக்கிறது."

நற்பண்பாகிய கற்பையும் இழந்து, கருச்சிதைவும் செய்து கொண்டு, களங்கத்தையும் மனதில் சுமந்து கொண்டு, பல சமயங்களில் நீ குழந்தையையும் சுமந்து வாழ நேரிடுகிறது. ஆனால் ஆண்மகனோ, பெண்ணே! உன்னை வீழ்த்தி விட்ட வெற்றிக் களிப்பில், "சற்புத்திரன் போல" உலாவுவான். இது தேவையா? அதனால் பெண்ணுக்குத் துன்பம் தராத, அதே நேரம் அவளுக்கு முழுப் பாதுகாப்பும் தரக்கூடிய திருமண வாழ்க்கை முறை ஏற்படும் வரை அவள் இதுபோன்ற செயலை தவிர்க்கவே வேண்டும்.

"ஒரே செயல் ஒரு இடத்தில் ஒரு காலத்தில் ஒருவகை விளைவையும், இன்னொரு இடம் இன்னொரு காலத்தில் வேறு விளைவையும் தரும்" – மகரிஷி வேதாத்திரி. நான் இதில் சொல்லாமல் சொல்லும் செய்தி புரிகிறதா பெண்ணே? இப்படி மருத்துவரீதியான காரணம் மட்டுமின்றி மனோரீதியான காரணங்களும் உண்டு.

உடல் கவர்ச்சிக்கு காதல் என்று பெயரிடப்பட்டு ஆண் பெண் இடையே ஏற்படும் அறிமுகத்தின் போது இடம்பெறும் உறவின் உச்சக்கட்ட நெருக்கமே உடலுறவு. இந்த உச்சியை திருமணத்திற்கு முன்பே அடைந்து விட்டால், பிறகு..? மலை ஏறி உச்சியைத் தொட்டவுடன் அடுத்து, "இறங்கத்தானே" வேண்டும்? அதே போல்தான் "அதை" ருசித்த பின், காதலில் ஈடுபாடு குறைந்துவிடும். பரஸ்பர பந்தம் இல்லை என்பதால், ஒருவர்க்கு மற்றவரிடம் முன்பு போல் ஈடுபாடு இல்லாமல் போய் – காலப்போக்கில் விலக நேரிடும். பெரும்பாலும் இவர்களின் காதல், திருமணத்தில் முடிவதில்லை. விளைவு?

ஆணும் பெண்ணும் வேறு ஒருவருடன் வாழ வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்படுகின்றனர். ஆண் சமாளித்துக் கொள்வான். காரணம் இவனுக்கு மனதை இழக்கவும் தெரியும். அதைத் திரும்ப எடுத்துக் கொள்ளவும் தெரியும். ஆனால், பெண்ணுக்கு? இழக்க மட்டுமே அறிந்தவள். அபிமன்யூவைப் போல வியூகத்தை உடைத்து உள்ளே செல்லத்தான் தெரிந்தவள். திரும்பி வெளியே வர அறியாதவள். அவளின் நிலை...?

மனதோ ஒருவனிடம். வாழ்க்கையோ ஆயுள் பரியந்தம் வேறொருவனுடன். தன்னை மணக்காத ஒருவனுக்கு, தன்னை "ருசித்து" விட்டு ஓடிவிட்ட ஒருவனுக்கு அவசரப்பட்டு தன்னையே தந்து விட்ட சுயமை அவளை விரட்டி விரட்டி அடிக்க... மணவாழ்வில் முழுமையாக ஈடுபட முடியாமல்... போலியாக... நடித்துக் கொண்டு... தன்னைத்தானே நொந்து கொண்டு – வாழ்வே ஒரு சுமையாகி விடுகிறது.

ஏற்கெனவே "என்ன பாவம் செய்தேனோ பெண்ணாய் பிறந்து விட்டேன்" என தன்னை தாழ்த்திக் கொண்டவள் இவள். இப்போது தன்னை ஒரு பாவமூட்டை அவமானச் சின்னம் என்று வேறு நினைப்பாள். அவளால் எப்படி தன்னையோ தன் குடும்பத்தினரையோ உள்ளன்போடு நேசிக்க இயலும்? "அவன்'' இவளை பிளாக்மெயில் செய்ய ஆரம்பித்தால் நிலைமை இன்னும் மோசமாகி விடும்.

சில சமயங்களில் காதலனை மறக்க இயலாமல், கட்டிய கணவனை நேசிக்க இயலாமல் போய் விடலாம். "அவனுடன்'' தொடர்பு கொள்ளும் நிலை ஏற்படலாம். அல்லது "அவன்'' பிளாக்மெயில் செய்ய, அதன் காரணமாக அவனுடன் தொடர்ந்து, "தொடர்பு" கொள்ள வேண்டி நேரிடலாம். இது மணந்தவனுக்குத் தெரியவந்தால்...? இப்படிச் சில சங்கடங்கள் சஞ்சலங்கள். கிடைத்த திருமண வாழ்வின் இனிமையைக் கூட ரசிக்க முடியாமல்



பயத்துடன் வாழ நேரிடுகிறது.

உன் "பதில் - பார்வையாலும்" உன் "ஒத்துழைப்பாலும்"தானே இத்தனை சங்கடங்களும் உனக்கு வந்தன? யோசித்துப் பார்த்தால் உனக்கே புரியும் - உன்னால்தான் ஆரம்பம் என்பதும் உன்னிலிருந்துதான் ஆரம்பம் என்பதும். ஓசை எழுப்ப இரு கைகள் தேவைப்படுகின்றன. வாழை இலை முள்ளில் பட்டாலும், முள் வாழையிலையில் பட்டாலும் கிழிவதென்னவோ வாழை இலைதான். நிரந்தர உண்மைகள் இவைகள்.

காதலிக்கும் காலத்தில் பொதுவாகவே இருவரும் வானத்துக்குக் கீழ் இருக்கும் அனைத்து விஷயங்களையும் பேசி, எழுதித் தீர்க்கின்றனர். திருமண நாள் - அவர்தம் ஈருடலும் ஓருடலாகும் அந்த சுப நாளுக்காக ஏங்கிக் காத்திருக்கின்றனர். என்ன என்ன என்றும், அது எப்படி இருக்கும் என்றும் ஏங்கித் தவிக்கும் "அந்த" விஷயம் என்னவென்று புரிந்து விட்டால்... அதன் பின்பு...? அவர்கள் இடையே பேசுவதற்கோ, பரிமாறிக் கொள்வதற்கோ, எதிர்பார்ப்பதற்கோ புதிதாக ஏதுமில்லை என்ற நிலைமை ஏற்பட்டு விடுகிறது. காலப்போக்கில் வெறுமை உணர்வுகளை தோற்றுவிக்கும். இது திருமணத்திற்கு முன்பே "அனுபவித்து" விட்டவர்களை வெகுவாக பாதிக்கும்.

இருவரையும் கட்டிப் போட பந்தம் ஏதுமில்லாத போது அவர்களின் காதல் பெரும்பாலும் (95%) திருமணத்தில் முடிவதில்லை. திருமணம் வரை காத்திருக்கும் இருவரையும் கூட இந்த நிலை தாக்கும். ஆனால் திருமண பந்தம் அவர்களை பிரிந்து போக விடாது. அந்த வகையில் திருமணம் ஓர் அரண்தான் - குறிப்பாக பெண்ணுக்கு.

அதற்காக காதல் வேண்டாம் எனச் சொல்லவில்லை. தவிர்க்க முயலுங்கள். இருபாலரும் அவரவர் 'காதல் பார்ட்டியை' அடையாளங்கண்டு பரஸ்பரம் மனதிலுள்ளதை தெரிவித்தவுடன் முடிந்தவரை விலகி, தூர விலகி, எட்டநின்று ப்ரியத்தை மனதில் வைத்து மணநாள் வரை வாழுங்கள். இந்த இடைவெளியின் அளவைப் பொறுத்து உங்க மணவாழ்வின் மகிழ்ச்சி உயரும். இது பல பேரின் அனுபவம். என்னைக் கேட்டால் "காதலியுங்கள் - திருமணத்துக்குப் பின் - உங்கள் கணவனை/ மனைவியை" என்றே சொல்வேன்.




கீதையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா சொல்கிறார்: "பக்தியோடு எனக்கு இலை, மலர், பழம், நீர் முதலியவற்றை அர்ப்பணம் செய்தால் நான் ப்ரியமுடன் அருந்துகிறேன்" அதற்காக பூச்சி அரித்த இலை பழங்களையோ, கெட்டுப் போன பழம், நீரையோ பூஜையில் வைப்போமா? மிகச் சிறந்தவற்றையே அன்றி வேறு எதையும் அர்ப்பணிக்க முயல மாட்டோம்... இல்லையா?

அந்த இறைவனுக்கும் பெற்றோர்களுக்கும் அடுத்த புனிதமான உறவைத் தரும் திருமணத்தில் அர்ப்பணிக்க...? இலை மலர் பழம் நீர் நான்கையும் உன்னகத்தே கொண்ட இனிய பெண்ணே! சொல்... திருமணத்திற்கு அர்ப்பணிக்கப்படும் இந்நான்கும் சிறந்ததாக தூய்மையானதாக புனிதமானதாக இருக்க வேண்டாமா? உன்னைத் தன் துணையாகக் கொண்டு தன் வீடு, தன் மனைவி, தன் பிள்ளைகள் என எல்லாம் தனதாகக் கொண்ட ஓர் வாழ்க்கைக்கு நம்பிக்கையுடன் காத்திருக்கும் உன் வருங்கால கணவனுக்கு, பூச்சி அரித்தவைகளையும் கெட்டுப் போனவைகளையுமா அர்ப்பணிக்கப் போகிறாய்? பதிலை உன்னிடமே விட்டு விடுகிறேன். யோசி. முடிவெடு. செயல்படு.

ஆண் மகனின் "காதல்" ஜாடைகளுக்கு நீ முகம் திருப்பி புன்னகைக்காமல், பதிலளிக்காமல் சென்று பார். உன் பின்னேயே வந்தவன் வேறு பெண்ணைத் தேடிப் போய் விடுவதை நீயே காண்பாய். எனவே உன் சம்மதமின்றி, உன் பங்கின்றி உன்னைச் சுற்றி எதுவும் நடக்காது. உன்னால், உன்னுடன், உன்னிலிருந்தேதான் அனைத்தும் ஆரம்பம். நீ ஆட்டுவித்தால் ஆடாதாரே பெண்ணே?

இந்த கற்புநெறியை நீ திருமணத்திற்குப் பின்னும் தொடரணும் என்பதே என் ஆலோசனை. திருமணத்திற்கு முன் உன் செயல்கள் உன்னை மட்டுமே பாதிக்கும். திருமணத்திற்குப் பின், மணவாழ்க்கை எனும் கோட்டைக்குள் இருந்து கொண்டு, தரம் தாழ்ந்து நீ நடந்து கொண்டால் அது உன்னை மட்டுமல்ல, உன் கணவரையும், உன் குழந்தைகளையும் கூடப் பாதிக்கும். எனவேதான் சொல்கிறேன்: மணம் புரிந்து பெண்ணே! உன் கணவனைக் காதலி.

ஆணே! உன் மனைவியைக் காதலி.

— 'காரைக்குடியான்'




# ஈடு இணையற்ற உலகத்தரம்

# உலகம் வியந்து மகிழும் டிசைன்கள்







**Anglo french**

*Classique Collection*

**உண்மையிலேயே உலகத் தரம்**

உலகம் முழுதும் பரவியிருக்கும் மற்றுமோர் இந்தியப் பெருமை – பாண்டிச்சேரியின் ஆங்லோ ஃபிரெஞ்ச் டெக்ஸ்டைல்ஸ். துணி வகைகளின் கலையை 100 ஆண்டுகளுக்கு மேலாக மேன்மேலும் மேன்மைச் சிறப்புடையதாகச் செய்து வருகிறது. எனவே இதன் பெயரும் புகழும் லண்டன், பாரிஸ், மிலன், ஜூரிக் மற்றும் உலக நாடுகளில் உள்ள பல பெரிய நகரங்களில் எல்லாம் பரவியிருப்பதோடு, இதன் தயாரிப்புகள் அங்குள்ள இல்லங்களை எல்லாம் அலங்கரிப்பதில் வியப்பு ஏதும் இல்லை.

சர்வதேசப் பாராட்டைப் பெற்ற எங்களுடைய 'கிளாஸிக் கலெக்ஷன் – இல்லங்களுக்கான முழுமையான துணி' வகைகளை இப்போது இந்திய இல்லங்களுக்காக அறிமுகப்படுத்துவதில் நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம். இதன் கவர்ச்சிகரமான அணிவரிசையில் உள்ளவை: படுக்கை விரிப்பு செட்டுகள், தலையணை உறைகள், மேஜை லினன்கள், குளியலுக்கான உடைகள், டவல்ஸ், அலங்கார துணி வகைகள்... இவை யாவும் உங்கள் இல்லத்தின் எழிலுக்கு சர்வதேச அழகை அள்ளித் தரும்.

**எண்ணம் எல்லாம் சிறந்த தரம்.**
**மேன்மைச் சிறப்பில் என்றும் நாட்டம்.**



**Anglo French Textiles,** Mudaliarpet, Pondicherry - 605 004. India,
Ph: 0413 - 3589 51 - 58 Fax: 0413 - 357710 / 357638

Anugrah 2777 / 99 TAM





• சிவாஜி

# வறுமை சாதனைக்குத் தடையல்ல!

"எங்க ஒரே மகனைப் படிக்க வைச்சு பேரும் புகழுமா ஆக்கணும்னு ஆசைதான். ஆனா இங்கே சாப்பாட்டுக்கே வழியில்லையே" என்று புலம்பும் பெற்றோர்கள் பலரை நாம் சந்தித்திருக்கிறோம்.

"எனக்கு மட்டும் புகழடையணும் சாதனை பண்ணணும்னு ஆசையில்லையா? நாலு காசு இருந்தால்தானே எதையும் சாதிக்கலாம்" என்று தாங்கள் சாதனை புரியாததற்கு வறுமையை சாதகமாக்கிக் கூறும் இளைஞர்கள் பலரையும் சந்தித்திருக்கிறோம்.

குறிக்கோளின்மை, சுறுசுறுப்பின்மை, தன்னம்பிக்கையின்மை இப்படி அடுக்கடுக்காக பல்வேறு மாசுக்கள் தங்கள் மீது படிந்திருக்க தாங்கள் வாழ்வில் பிரகாசிக்காததற்குக் காரணம் செல்வமின்மைதான் என்று இவர்கள் திட்டவட்டமாகக் கூறுகிறார்கள்.

இவர்களுக்காகவே இதோ – சாதனை சிகரத்தைத் தொட விரும்பி பெரும் முயற்சியுடன் செயலாற்றுபவர்களுக்கு வறுமை, நோய் போன்ற பெரிய பல விஷயங்கள் தடைக் கற்களாக ஒருபோதும் இருந்ததில்லை என்பதை பல்வேறு சாதனையாளர்களது வாழ்க்கை வரலாறுகள் வாயிலாக அறியலாம்.


• ஜி.டி. நாயுடு

ஆல்பர்ட் ரைட், வில்பர்ட் ரைட் எனும் ரைட் சகோதரர்கள் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆல்பர்ட் ரைட் வெளியில் செல்லும் போது வில்பர்ட் வீட்டில் இருப்பாராம். வில்பர்ட் ரைட் வெளியில் செல்ல விரும்பினால் ஆல்பர்ட் வந்த பிறகே செல்ல முடியுமாம். ஏன் தெரியுமா? அவர்களுக்கு இருந்ததோ ஒரே சட்டை. மாற்றி உடுத்திக் கொள்ள மறு சட்டை இல்லாத அளவிற்கு வறுமைப்பிடியில் சிக்கி இருந்த அவர்கள் வறுமையை நினைத்து வருந்தி அதனால் பாதிக்கப்பட்டு சோர்ந்து இருந்தால், விண்ணில் பறக்கும் விமானத்தைக் கண்டுபிடித்திருக்க முடியுமா?

வகுப்பில் அழுக்குச் சட்டை அணிந்து வந்ததற்காக பெஞ்சில் ஏறி நின்று அவ்


• ஜெயகாந்தன்



வாறு தான் வந்ததற்குக் காரணம் சோப் வாங்க ஒரு அணா இல்லை என்று வகுப் பாசிரியரிடம் கூறியவர் யார் தெரியுமா? முன்னால் பல் கலைக்கழகத் துணைவேந்தர், ஆங்கிலேயருக்குச் சவால் விடும் அளவிற்கு ஆங்கிலப் புலமை பெற்றிருந்த ரைட் ஹானரபிள் சீனிவாஸ சாஸ்திரி!

வறுமை காரணமாக படிக்க வசதியில்லாமல் தனது 7-வது வயதிலேயே பள்ளிப் படிப்பை நிறுத்தி விட்டு வேலைக்குச் சென்றவர்தான் பிற்காலத்தில் விஞ்ஞானியாக சாதனை புரிந்து இரயில் எஞ்சின் கண்டு பிடித்த ஜார்ஜ் ஸ்டீவன்ஸன்.

பசிக் கொடுமை தாங்க முடியாமல் ஏழை களுக்கு வழங்கப்படும் இலவச ரொட்டிக்காக மணிக்கணக்காக கியூவில் நின்று மழைத் தண்ணீரில் ஊறவைத்து தன் பசியைப் போக்கிக் கொண்டவர்தான் பிற்காலத்தில் கோடி கோடியாக சம்பாதித்து பணத்திலேயே புரண்ட ஹாலிவுட் நடிகை சோபியா லாரென்.

வீட்டில் எண்ணெய் வாங்க வசதியில்லாத தால் வீட்டில் விளக்கேற்றிப் படிக்க முடியா மல் தெருவிளக்கில் படித்து முன்னேறிய முத்துசாமி ஐயர் வாழ்க்கை வரலாறு நீங்கள் அறிந்ததே.

மேலும் ஏழைக் குடும்பத்தில் பிறந்து வறுமையில் வாடி வாழ்க்கையையே ஒரு போராட்டமாகத் துவங்கி பிற்காலத்தில் உலகப் புகழ்பெற்ற தொழில் அதிபர்கள் பலர். உதாரணமாக சிம்ஸன் அனந்தராமகிருஷ் ணன் ஆரம்பத்தில் ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாகப் பணியாற்றியவர். மிகப் பெரிய தொழில் நிறுவனமான டிவிஎஸ் சுந்தரம் ஐயங்காரைப் பற்றி அறியாதவர்கள் உலகில் இல்லை. அவர் தன் இளம் வயதில் ஒரு சைக்கிள் கடையில் வேலை பார்த்து தன் பசியைப் போக்கிக் கொண்டவர்.

விஜிபி சகோதரர்கள் என்ன பிறக்கும் போதே கோடீஸ்வரர்களாகவா பிறந்தார்கள்? ஏழைக்குடும்பத்தில் பிறந்து தாய் சுட்டுத் தந்த பலகாரங்களை விற்று பிறகு வீடு வீடாக பத்திரிகை போட்டு தங்கள் வாழ்க்கையைப் போராட்டத்துடன் துவங்கியவர்கள். இன்று அவர்களது கிளை நிறுவனங்கள் எண்ணிக் கையில் அடங்காதவை.

மதுரை ஜெயராஜ் நாடார் ஆரம்பத்தில் லாரியில் சரக்கு ஏற்றுபவராகத்தான் தன் வாழ்க்கையைத் தொடங்கி னார்.

தொழில் துறையில் மட்டு மின்றி தங்கள் கடின உழைப் பால் சாதனை சிகரத்தைத் தொட்டு, சாதனை புரிய வறுமை ஒரு தடையல்ல என்று நிரூபித்தவர்கள் எண் ணற்றோர். அவர்களுள் குறிப் பிடத்தக்கவர்கள் –

ஏழைக் குடும்பத்தில் பிறந்து வறுமையோடு போரா டிய ஆபிரஹாம் லிங்கன் அமெரிக்க ஜனாதிபதியாக வில்லையா?

வறுமை வாட்டியபோதும் பாரதியின் எழுச்சிக் குரல் உலகமெங்கும் ஒலிக்கவில்லையா?

பலநாள் பட்டினி கிடந்து நாடகக் கொட் டகைகளில் ஏறி இறங்கி துன்புற்றபோதும் தன் முயற்சியாலும், உழைப்பாலும் கோடிக் கணக்கான ரசிகர்களின் உள்ளங்களில் நீங்காத இடம்பிடித்த செவாலியே சிவாஜி கணேசன் சாதனை உலகம் அறியுமல்லவா!

சிறுகதை மன்னன் ஜெயகாந்தன் தன் வாழ்க்கையின் ஆரம்ப நாளில் பத்திரிகை ஆபீஸில் ஒரு சாதாரண பணியாளராக இருந்து வந்தார்.

எஸ்.எஸ். வாசன் அவர்களும் ஆரம்ப காலத்தில் தன் வறுமையைப் போக்க விளம் பரம் சேகரிக்கும் தொழிலில் ஈடுபட்டார். மில்லில் கூலி வேலை பார்த்து வறுமையை பொருட்படுத்தாது முன்னேறியவர்தான் சின்னப்பதேவர். பஸ்ஸில் டிரைவராகப் பணிபுரிந்து தன் வாழ்க்கையை துவங்கியவர் தான் ஜி.டி. நாயுடு. நாடகக் கொட்டகையில் சோடா விற்றவர்தான் பின்னாளில் புகழ் பெற்ற கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன். இவ்வளவு ஏன் நாடகக் கொட்டகைகளில் எடுபிடி வேலை பார்த்தவர்தான் ஆங்கில நாடகங்களின் முடிசூடா மன்னனாகத் திகழ்கின்ற ஷேக்ஸ்பியர்!

இன்னும் எத்தனையோ உதாரணங்களைச் சொல்லலாம். சாதனை புரிய விரும்பும் ஒவ்வொருவரும் தனக்குரிய திறமையைத் தேடிக் கண்டுபிடித்து, அந்தத் திறமையை உழைப்பால் மெருகேற்றி புகழ்பெற்றே தீருவேன் எனும் குறிக்கோளை மனதில் நிறுத்தி அயராது பாடுபடும்போது வறுமை ஒரு தடைக்கல்லாக நிச்சயம் இருக்காது.

**— கீதா தெய்வசிகாமணி**

4

*சென்ற இதழில் தேவியின் ஸ்ரீநகரத்திலுள்ள கோட்டைகள் வரிசையாகச் சொல்லப்பட்டன. மேலும் தொடருகிறது...*

# கோட்டையாளும் கௌமாரி!

## 13. வைடூரியக் கோட்டை

மிக உயர்ந்தும் மிகுந்த பிரகாசத்துடனும் வைடூரிய கோட்டை இருக்கிறது.

இந்த 13-வது கோட்டைக்கும் வஜ்ர கோட்டைக்கும் மத்திய பகுதியில் அழகிய வனங்கள், மண்டபங்கள் மாளிகைகளுடன் சிறந்து விளங்குகிறது. அங்கே காமேஸ்வரியை திடமாக உபாஸிக்கும் அனந்தன், வாசுகி, தக்ஷகன், கார்கோடகன், சங்கன், குளிகன், பத்மன், மஹாபத்மன் என்ற எட்டு ஸர்ப்பங்களும் பலிசக்கரவர்த்தி போன்ற அசுரர்களும் வாசம் செய்கிறார்கள்.

எல்லா தெய்வங்களோடு பாம்பு ஏதாவது ஒருவிதத்தில் இணைக்கப்பட்டுள்ளது. தெய்வத்தின் சக்திக்கு ஒரு சின்னமாக அது திகழ் கிறது. அதுபோலவே மனிதனின் சக்தியானது தியானம், அப்பியாஸத்தின் மூலம் குண்டலினி சக்தி ஸர்ப்பமாக வடிவெடுத்து விஷத்துடன் கிளம்புகிறது. அதனை சாதனையின் மூலம் பஞ்சேந்திரியங்களின் ஒழுங்குபடுத்தப்பட்ட கர்மாக்களால் விஷத்தை அடக்க, அது ஞானமாக மாறுகிறது என்பது தத்துவமாகும்.

## 14. இந்திர நீலக்கோட்டை

பற்பல சிறப்புக்களுடன், பல கோபுரங் களையும் ஆகாயத்தின் நீல நிறம் போல் உள்ள இந்திர நீலக் கோட்டை இருக்கிறது.

இதற்கும் வைடூரிய கோட்டைக்கும் இடையில் பலவிதமான அழகு பொருந்திய மாடமாளிகைகள் இருக்கின்றன. இங்கு தர்மநெறி தவறாத மனு, மந்தாதை, பகீரதன், கயன், ப்ருது, பரதன் முதலிய சக்கரவர்த்திகள் தேவியை நமஸ்கரித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

## 15. முத்துக்கோட்டை

தனது காந்தியால் எல்லா திசைகளையும் பிரகாசிக்கச் செய்து கொண்டும், பல கோபுரங்கள் தோரணங்கள் கட்டிய தூண்களுடன் கூடிய மாளிகைகளும் நிறைந்த "முத்துக் கோட்டை" இருக்கிறது.

15. I) இதற்கும் இந்திர நீல கோட்டைக்கும் இடைப்பட்ட பகுதியில் பலவித பழங்கள், புஷ்பங்கள் நிரம்பிய மரங்களையுடைய தோட்டங்களும், மாளிகைகளும் இருக்கின்றன. அதில் கிழக்கு திசையில் எல்லா செல்வங்களை உடைய ஸ்ரீமானும், திக்கஜங்களின் நாயகனும் ஆன "இந்திரன்" தன் கையில் வஜ்ராயுதத்தைத் தாங்கி, தன் தேவி சசிதேவியுடன் ஐராவதத்தின் மேல் அழகுடன் அமர்ந்து இருக்கிறார்.

ஆயுதங்களில் இந்திரனின் வஜ்ராயுதம் தலைசிறந்தது. அந்த வஜ்ராயுதம் என்பது தேவியினால் இந்திரனுக்குக் கொடுக்கப்பட்டது. நைஷ்டிக பிரம்மசாரியும், தபோவலிமை மிக்கவருமான ததீசி என்ற மஹரிஷி என்பவர் தேவியை குறித்து தவம் செய்து கொண்டிருந்தார். அசுரர்களை அடக்


• ஸ்வர்ண மேருவுடன் ஸ்ரீஇராஜராஜேஸ்வரி

கத் தேவையான ஆயுதத்தை இந்திரன் தேவியிடம் வேண்ட அன்னை பராசக்தி வஜ்ரேசி என்ற தன் சக்தியின் மூலம் (11.12 – வது கோட்டையின் மத்தியில் வஜ்ரநதி யின் கரையில் இருப்பவர்) ததீசி மஹரி ஷிக்கு முக்தியை கொடுத்து அவருடைய முதுகு எலும்பை ஆயுதமாக இந்திர னுக்குக் கொடுத்தார். வஜ்ரேஸி முதுகு எலும்பை ஆயுதமாக கொடுத்தபடியால் அது "வஜ்ராயுதம்" என்ற பெயருடன் ஆயுதங்களில் சிறந்த ஆயுதமாக இந்திரனி டம் இருக்கிறது. அதன் காரணமாகத்தான் "ஆயுதானாம் அஹம் வஜ்ரம்" என்று கீதையில் பகவான் கூறுகிறார்.

15. 2) தென்கிழக்கான அக்னி மூலை யில் விசிறி, ஸ்ருக், ஸ்ருவம் (ஹோமங்களில் பயன்படுத்தும் இரண்டு கரண்டிகள்) ஆஜ்ய (நெய்) பாத்திரம் அன்னம், சக்தி இவைகளை தரித்துக் கொண்டு இரண்டு முகம், ஒரு ஹ்ருதயம், இரண்டு மூக்கு, நான்கு காது, ஆறு கண்கள், ஏழு நாக்கு களுடன் மூன்று பாதங் களுடனும் பூணூல் தரித்து, மணிமகுடம் அணிந்து செம்மறி ஆடு வாகனத்தின் மேல் 'ஸ்வாஹா – ஸ்வதா" என்ற பத்தினிகளுடன் திரிபுர சுந்தரியை தியானித்த வண்ணமாக "அக்னி பகவான்" இருக்கிறார்.

15. 3) தெற்கு திக்கில் யமபட்டினம் என்ற இடத்தில் மிகவும் கருப்பாக இருட்டு போல், இரண்டு கோரை பற்கள் வெளியில் நீண்டு இருக்கும் யமன் எருமை வாகனத்தில் கையில் தண்டாயுதம், பாச கயிற்றை ஏந்தி "சியாமளா" என்ற தன் தேவியுடன் சர்வேஸ்வரியை தியானித்த படி இருக்கிறார்.

தர்மராஜா என்ற பெயர் முக்கியமாக இரண்டு பேர்களுக்குத்தான் உண்டு. தேவர் களில் யமன் யமதர்மராஜா என்றும், மனிதர் களில் யுதிஷ்டரனுக்கு தர்மராஜா என்றும் கூறப்படுகிறது.

ஜீவன் மரணத்திற்குப் பிறகு ஸ்தூல தேகத்தை விட்டு யமபுரம் (பட்டினம்) என்ற இடத்தில் யமதர்மராஜாவுக்கு முன் போகிறது. அங்கு சித்திரகுப்தன் "அக்ர சந்தானம்" என்ற கணக்குப் புத்தகத்தில் இருந்து ஜீவன் அந்த பிறவியில் செய்த பாவ புண்ணியங்களை கணக்கு பார்த்து கூற, யமன் தர்மம் பிசகாது தீர்ப்பு கூறு கிறான். அதன்படி ஜீவனுக்கு நரகம்,

**ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள்**

சொர்க்கம், மோக்ஷம் கிடைக்கிறது. ஆகவே ஸாதகன் செய்யும் ஸாதகம், நடத்தை இவைகளின் தன்மை கணக்கு பார்க்கப்பட்டு அம்பிகையிடம் செல்லவோ அல்லது குறைகளை நிவர்த்தி செய்ய மறுஜென்மம் எடுக்கவோ வழிவகை செய்யும் இடமாக யமபுரம் திகழ்கிறது.

யோகத்தில் தன்னைத்தானே அடக்கி ஆளுவதற்கும் யமம் என்று கூறப்படுகிறது. யோகத்தின் முதல் அங்கமாக யமம் விளங்குகிறது. தன்னை அடக்கும் வழியைப் பழகாவிட்டால் யோகம் அமையாது என்ற கருத்தாகும்.

15. 4) தென்மேற்கு (நிருதி) மூலையில் மனித வாகனத்தில் ஈட்டி, இரும்புதடி, கட்கம், கேடம் முதலிய ஆயுதங்களை கையில் தரித்துக் கொண்டு கருத்த மேனியுடன் "தீர்கா தேவி" என்ற தன் பத்தினியுடன் "நிருதி" என்ற ராக்ஷஸன் வாசம் செய்கிறான்.

மனிதனின் மனத்தில் ஏற்படும் கெட்ட எண்ணங்களை குறிப்பிடுவது மனித வாகனம். மனிதனின் தர்ம - அர்த்த - காம - மோக்ஷத்தை குறிப்பது ஆயுதங்கள். இவைகளை ஆழ்ந்து தீர்க்கமாக கவனிப்பதால் தீர்க்கா தேவியாகிறாள். ஆகவே மனிதனின் ராக்ஷஸகுணங்கள் உன்னிப்பாக (தீர்க்கமாக) கவனிக்கப்படுகிறது.

15. 5) மேற்கு திக்கில் நல்ல வெண்மை மேனியுடன் பெரிய மகர மீன் (முதலை) வாகனத்தில் பாசாயுதத்தை தன் கையில் ஏந்தி "காளி" என்ற தன் சக்தியோடு "வருணன்" விளங்குகிறார்.

விண்ணுலகம், மண்ணுலகம் இரண்டிலும் தன் ஆட்சியை புரியும் இவர் வேதங்களில் சிறப்பித்துச் சொல்லப்படுகிறார். ஸகல தீர்த்தங்களுக்கும் அதிபதியாயும், கடலுக்கு அரசனாகவும் இருப்பதால் "சிந்துபதி" என்று போற்றப்படுகிறார்.

15. (6) வடமேற்கு (வாயு) மூலையில் மான் வாகனத்தில் துவஜம் என்ற ஆயுதத்துடன் "அஞ்சனாதேவி"யை ஆலிங்கனம் செய்து கொண்டு "வாயுபகவான்" இருக்கிறார். மிகவும் தத்துவ ஞானத்தை அடைந்த கோரக்ஷநாதன் மற்றும் யோகிகளின் கூட்டத்தோடும், இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற சக்திகளுடன் வாயு பகவான் வாசம் செய்கிறார்.

வாயு என்ற காற்று எவ்வளவு அவசியம் என்பது தெரிந்ததே. அது தீயை எரியச் செய்யவும், நீரை ஆவியாக மாற்றி மழையாகப் பெய்விக்கவும், பூமியின் மேல் உள்ள அசுத்தங்களை அகற்றித் தூய்மைபடுத்துவதாகவும் அமைகிறது. யோக மார்க்கத்தில் இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற முக்கியம் வாய்ந்த நாடி வாயுவாகவும் இந்த வாயு பகவான் விளங்குகிறார்.

15. (7) வடக்கு திக்கில் குதிரை வாகனத்தில் கையில் கத்தியை ஆயுதமாகக் கொண்டு "சித்திர ரேகை" என்ற பத்தினியுடன், எல்லா நிதிகளுக்கு தலைவனாக "குபேரன்" என்பவர் மணிபத்திரன் போன்ற யக்ஷர்கள் புடைசூழ வாசம் செய்கிறார்.

15. (8) வடகிழக்கு (ஈசான) மூலையில் தங்க கோபுரங்களையுடைய நகரத்தில் தன் கையில் திரிசூலம் போன்ற ஆயுதங்களை ஏந்தி, தலையில் சந்திரனை தரித்து ரிஷப வாகனத்தில் காத்யாயனீ என்ற பெயரையுடைய பார்வதி தேவியுடன் ருத்திர கணங்கள் சூழ "ருத்திரன்" என்பவர் ஈசன் என்ற பெயருடன் நித்திய வாசம் செய்கிறார்.

ஆகவே முத்துக் கோட்டைக்கும் இந்திர நீலமணி கோட்டைக்கும் இடையே அஷ்டதிக் (எட்டு திசை) பாலகர்கள் வாசம் செய்து கொண்டு இருக்கிறார்கள்.




இந்திரனுக்கு எதிரில் வருணன், அக்கினிக்கு நேரில் வாயு, யமனுக்கு எதிரில் குபேரன், நிருருதிக்கு எதிரில் ஈசன் (ருத்திரன்) என்ற முறையில் அமைந்திருப்பது நன்கு புலனாகும்.

## 16. மரகதக் கோட்டை

இளம் புல்லின் பச்சை நிறத்தைப் போல் உள்ளதும், பல சிகரங்களை உடையதுமான "மரகதக் கோட்டை" இருக்கிறது.

இந்தக் கோட்டைக்கும் முத்துக் கோட்டைக்கும் நடுவில் பச்சை நிற ரத்தினங்களில் ஏற்படும் பசுமையான இடத்தில் மதுக்குடங்களுடன் கூடிய தங்கமயமான பனைமரத் தோப்பு இருக்கிறது. அங்கே நேருக்கு நேராக சியாமளா தேவியின் மாளிகையும், சேனை நாயகி வாராஹீ தேவியின் மாளிகையும் இருக்கிறது. (சியாமளா தேவியின் மாளிகை விளக்கம் 8 வது தங்கக்கோட்டையில் விவரிக்கப்பட்டுள்ளது.)

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே
























## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை — 3.
போன்: 5350182, 5343412

## மஹா வாராஹி

மரகத கற்களால் இழைக்கப்பட்ட தூண் களை கொண்ட மண்டபத்தில் தங்கமயமான பீடத்தில் தாமரை புஷ்பம் ஒன்று இருக்கிறது. அதன் மத்தியில் பிந்து, திரிகோணம், வட்டம், அறுகோணம், இரண்டு வட்டம் இவைகளு டன் கூடிய 110 அக்ஷரங்கள் அடங்கிய "மந்த்ரராஜம்" என்ற இடத்தில் வராஹ முகத் துடன், தாமரை இதழ் போன்ற கண்களை யுடையவளும் சந்திரனை சிரசில் அணிந்து உருக்கி வார்த்த தங்கம் போன்ற மேனியில், வெளிர் சிகப்பு வஸ்திரம் அணிந்து நுண்ணிய சிறு இடையுடன் மிகவும் அழகு பொருந் தியவளாகவும், சிவந்த மலர் மாலை அணிந்து, கலப்பை, உலக்கை, சங்கம், சக்கரம், பாசம், அங்குசம், அபயம், வரதம் என்ற ஆயுதங் களை எட்டு கைகளில் தாங்கிக் கொண்டு பர தேவதையின் சேனாநாயகியான தண்டநாதை என்ற "மஹாவாராஹி" தேவி; மூர்க்கர்களுக்கு மிக தூரத்திலும் பக்தர்களுக்கு துன்பத்தை அழித்து ஆனந்தத்தைத் தருபவளாகவும் வாசம் செய்கிறாள்.

உன்மத்த பைரவி, ஸ்வப்னேசி, கபால, பீஷண, மடருபாஸ்கர, ரவிபக்ஷக, கால, சண்ட, மஹாமந்தானர் என்ற பைரவர்கள் புடைசூழ ஜம்பினி என்ற சேனைகளுடன் ஸர்வேஸ்வரியின் அசைவை கவனித்தவண் ணம் மஹாவாராஹி இருக்கிறார்.

இந்த இடத்தில் முக்கிய கவனத்திற்கு வருவது என்னவென்றால், பிந்து திரிகோணம், வட்டம், அறுகோணம், இரண்டு விருத்தம் (வட்டம்) இவைகளின் 110 பீஜா அக்ஷரங் களாக ஸ்ரீவாராஹி தேவி இருக்கிறாள். அதுபோல் பிந்துவுடன் கூடிய திரிகோணம், பஞ்ச கோணம், அஷ்ட (8) தள பத்மம், ஷோடச (16) தள பத்மம் உள்பத்து, வெளிபத்து கோணம் சதுரம் ஆகியவைகளின் 98 பீஜா அக்ஷர தேவதையாக மந்திரிணி என்றும் சங்கீத மாத்ருகை என்றும் போற்றப்படும் ராஜா ஸியாமளா தேவி விளங்குகிறாள் என் பது தெளிவுபடத் தெரிகிறது. ஆக 98 + 110 = 208 பீஜா அக்ஷரங்கள் ஆவரண பூஜையில் கூறப்படுவதின் தத்துவம் புலனாகிறது.

## 17. பவழக் கோட்டை

வெண் சிகப்பு நிறமுள்ளதும் மிகவும் கெட்டியான துவாரங்களை உடையதும் மிகவும் அழகாக உள்ளதுமான "பவழக் கோட்டை" இருக்கிறது.

இந்தக் கோட்டைக்கும் மரகத கோட் டைக்கும் இடையில் உள்ள பிரகாரத்தில் குங்கும சிகப்பும் வெளுப்பும் கலந்த நிறத்தை உடையவரும், செந்தாமரை மலர் ஆசனத்தில் அமர்ந்து வேதங்களை காப்பாற்றுபவரும், சிருஷ்டியை தொடர்ந்து செய்து கொண்டு இருப்பவருமான 'பிரஹ்மதேவன்' வாசம் செய்கிறார்.

## 18. நவரத்தினக் கோட்டை

பவழக்கோட்டைக்கு அடுத்ததாக பெரிய கோபுரங்களை உடையதும் நவரத்தினத்தால் இழைக்கப்பட்ட பிரகாரத்துடன் கூடியது மான 'நவரத்தின கோட்டை' இருக்கிறது.

இந்த கோட்டைக்கும் பவழக் கோட்டைக் கும் இடையில் மிகவும் அழகுடன் கூடிய பிரதேசத்தில் மிகப் பெரிய மாணிக்க மண் டபம் இருக்கிறது.

அந்த மாணிக்க மண்டபத்தில் தளிர் போன்ற மேனியுடன் பலவித ரத்னங்கள் இழைக்கப்பட்ட கிரீடத்தை தரித்து, காதில் மகர குண்டலம் அணிந்து, அந்த குண்டலத் தின் காந்தியால் சோபிக்கும் கன்னங்களை உடையவரும், சிவந்த கீழ் உதட்டை உடைய வரும், புன்சிரிப்புடன் கூடியவரும், தாமரை இதழ் போன்ற கண்களை உடையவரும், கஸ்தூரி திலகத்துடன் கூடிய சந்திரன் போன்ற முகத்தை உடையவரும் கஸ்தூரி குழம்பு பூசப்பட்ட அகன்ற மார்புடனும், சண்பக பூவின் வாசனையுடன் கூடிய கேசத்தை உடையவரும், வெண்நிற பட்டு ஆடையணிந்து ஸ்ரீவஸ்த, கௌஸ்துபம் அணிந்து பீதாம்பரதாரியாக சங்கம், சக்கரம் அபய வரதகைகளுடன் துளசி மாலை அணிந்து தன்னை ஆராதிப்பவனை ரக்ஷிக்கும் பாத கமலங்களை உடையவரும், ஆனந்த ஸ்வரூபியுமானவரும், துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் செய்யும் பக்தவத்சலன் என்றவருமான "மஹாவிஷ்ணு" கருட வாகனத்தில் வாசம் செய்கிறார்.



**ஆவக்காய் ஊறுகாய் போடுமுன் நறுக்கி வைத்த மாங்காய்களை ஒரு மணி நேரம் வெய் யிலில் போட்டு எடுத்து வைத்து, சூடு ஆறிய பின் ஆவக்காய் போட்டால் எத்தனை நாட் களானாலும் கெடாது. இது என் குஜராத்தி சிநேகிதி கூறிய யோசனை.**

**– ஜானகி ரங்கநாதன்.**

ப்ரியங்கா

# வந்துவிட்டது தமிழகத்தில்



பியூட்டி பார்லர்களில் ஃபேஷியலிங் செய்வது இன்று சர்வ சாதாரணமாகி விட்டது. அங்கு செயற்கையான இராசாயனப் பொருட்களும், காரங்கள் கலந்த திரவங்களும் அடங்கிய: கலவையைப் பயன்படுத்துகின்றனர். ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு அதைக் கழுவிவிட்டால் முகம் மென்மையாக அழகாகக் காட்சி அளிக்கிறது. ஆனால், ஒரு வாரத்திற்குள் முகச் சருமம் வறண்டு, இருண்டு, முன்னை விட விகாரமாகத் தோற்றமளிக்கிறது. இவ்வாறு அடிக்கடி பியூட்டி பார்லர்களில் ஃபேஷியலிங் செய்வதால் சருமத்தின் இயற்கை அழகை மீண்டும் திரும்பப் பெற இயலாத வகையில் இழக்க நேரிடும்.

இத்தகைய இரசாயனப் பொருட்களின் பாதிப்பு ஏற்படாமல் ப்ரியங்கா சருமத்தைப் பாதுகாக்கிறது. அனுபவமும் ஆற்றலும் மிக்க மருத்துவர்களின் மேற்பார்வையில், ஜெர்மன் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி, நறுமணமுள்ள இயற்கை, மூலிகைப் பொருட்களால், இயற்கையான நறுமணத்துடன் தயாரிக்கப்படுவதே ப்ரியங்கா. இதற்கென பயன்படுத்தும் முக்கிய நறுமணப் பொருள் சந்தனம். கடந்த நூற்றாண்டுகளில், அரசகுடும்பத்து அரண்மனை அழகிகள் அழகைப் பாதுகாத்து, மெருகூட்டப் பயன்படுத்திய கலவையில் அடங்கிய பதினான்கு மூலிகைகளால் தயாரிக்கப்பட்டதே ப்ரியங்கா.

பியூட்டி பார்லர்களுக்குச் செல்லாமலேயே இப்போது மிக எளிதாக உங்கள் இல்லங்களிலேயே ஃபேஷியலிங் செய்வதற்கு ப்ரியங்கா உதவுகிறது.

முகப்பருக்கள், முகப்பருக்களால் உண்டாகும் கறுப்புத் தழும்புகள், கண்களைச் சுற்றியும், கழுத்திலும் உண்டாகும் கருவளையங்கள், அம்மைநோய்த் தழும்புகள், முகச்சருமத்தின் வறட்சி, எண்ணெய் வழிதல், வேனில் பருக்கள், வயதாவதாலும், இரத்தக் குறைவாலும் முகத்தில் உண்டாகும் சுருக்கங்கள், இருண்ட நிறம், அலர்ஜி மற்றும் தோல் வியாதிகளால் முகச் சருமத்தில் ஏற்படும் கருமை, ஆகியவற்றிலிருந்து ப்ரியங்கா உங்கள் சருமத்தைப் பாதுகாக்கிறது.

உங்கள் குடும்பத்தைச் சார்ந்த முக அழகை மேலும் மெருகூட்டலாம். இயற்கை மூலிகைகளைப் பயன்படுத்தி இந்தியாவில் முதன்முதலாக உருவாக்கிய அழகுப் பாதுகாப்புத் தயாரிப்பு ப்ரியங்கா என்பதை நினைவிற் கொள்ளுங்கள்!

எல்லா முக்கிய பேன்சி ஸ்டோர், சூப்பர் மார்க்கெட், மெடிக்கல் ஸ்டோர்களிலும் ப்ரியங்கா கிடைக்கும்.

இன்றே ப்ரியங்காவை உபயோகித்து ஃபேஷியலிங் செய்யத் துவக்குங்கள்.

மூலிகைகளால் மட்டுமே ப்ரியங்கா தயாரிக்கப்படுகிறது! இரசாயனப் பொருட்களால் அல்ல! உங்கள் இல்லங்களே பியூட்டி பார்லர்கள் ஆகட்டும்!

இரசாயனப் பொருட்கள் இல்லை மூலிகைகள் மட்டுமே

**உங்கள் இல்லங்களே பியூட்டி பார்லர்கள் ஆகட்டும்**

**For Business Enquiries : MATHA PHARMA**
Ezhukone P.O., Quilon, Kerala, Pin - 691 505, India.
Ph : 0474 - 482031, Fax : 0474 - 482652.
E-mail : mathapharma@yahoo.com




**Distributors / Stockists wanted for unrepresented areas.**

## 19. நானாரத்தினக் கோட்டை

நெடிது வளர்ந்த கோபுரங்களையுடையதாக பலவகை ரத்தினங்களால் உருவாக்கப் பட்ட "நானாரத்தின பிரகாரம்" இருக்கிறது.

நானாரத்தின கோட்டைக்கும், நவரத்தின கோட்டைக்கும் இடையில் ரத்தின மாளிகைகளும் தோட்டங்களும் சிகரங்களும் உள்ளன. அந்த இடத்தில் பொன்னால் செய்யப்பட்ட ஆயிரங்கால் மண்டபம் பலவிதமாக அலங்கரிக்கப்பட்டு வேத மந்திர ஒலியுடன் இருக்கிறது. அதில் புலித்தோலை ஆசனமாகக் கொண்டு சந்திரகலையை சிரசில் தரித்து ஸர்வ அலங்காரத்துடன் நீலகண்டராகவும், ம்ருத்யுஞ்ஜயராகவும், ருத்திர தேவராகவும் ஆன "ருத்திரன்" பவானி தேவியுடன் வீராசனத்தில் அமர்ந்து "நந்தி" "பிருங்கி" ருத்திர கணங்கள் சூழ்ந்து இருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட ஸ்ரீசக்ரத்தின் பலனைக் கண்கூடாக கலியுகத்தில் காண ஆராதனையின் பயனை, பூஜாபலனை பெற நிர்மாணித்த பீடம்தான், ஸ்ரீயோகமாயா புவனேஸ்வரி பீடமென்கிற ஸ்ரீபரத்வாஜ ஆச்ரமம். அற்புதங்கள் பல நிகழ்த்தும் பீடம். பக்தர்களின் வேண்டுதலை சத்தியமாய் நிறைவேற்றும் பீடம். நிம்மதியை அருளும் பீடம், தீயவற்றை நீக்கும் பீடம், ஐஸ்வர்யத்தைப் பொழியும் பீடம். ஆன்மீகத்தைப் பரப்பும் பீடம். ஸர்வ சக்தி பீடம். இது புவனேஸ்வரி ஸ்வாமிகளின் திருவுளப் பீடம்.

சக்தி மந்திரங்களே இந்த பீடத்தில் செங்கல்லாக உள்ளன. ஒவ்வொரு செங்கல்லும் ஒவ்வொரு பீஜாக்ஷரத்தைத் தாங்கி உள்ளன. இதனுடைய சக்தியை நம்மால் உணர முடியாது. பெற்ற பலனால் மட்டுமே அறிய முடியும். பாக்கியவான்களே இந்த பீடத்திற்கு வருவார்கள். இந்த பீடத்திற்கு வருபவர்கள் பாக்கியவான்கள் ஆகிறார்கள். இங்கு சத்தியவடிவில் தேவி கொலுவீற்றிருக்கிறாள்.

இவளது தேஜஸ்பிரகாசம் அனைவரையும் ஈர்க்கிறது. இவளை தரிசித்த பேர்களெல்லாம் சாந்தி பெறுகின்றனர். ஒருமுறை தரிசித்த பின்பு மறுமுறை தரிசிக்க வேண்டுமென்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது. நாம் கேட்காமலேயே நம்முடைய எண்ணத்தைப் பூர்த்தி செய்கிறாள். நமது தேவைகளை அவள் நிறைவேற்றிய பின்பு நமக்கு அனைத்தும் தேவையில்லாமல் போகிறது.

## 20. மனோமயக் கோட்டை

நானாரத்தின கோட்டைக்கு 700 மைலுக்கு அப்பால் 'மனோமயக் கோட்டை' இருக்கிறது.

இந்தக் கோட்டைக்கும் 19 வது கோட்டைக்கும் நடுவில் சிவந்த ரத்தினம் போல் பிரகாசிக்கும் தரையுடன் கூடிய பூமி இருக்கிறது.

அங்கே 'சஞ்சலம்' என்ற அலைகள் மோதும் இரண்டு கரைகளை உடையதும், அன்ன பக்ஷிகள் தங்கமயமான தாமரை புஷ்பங்களை உடையதும், அதில் வண்டுகளின் ரீங்காரத்துடன் ராஜஹம்ஸத்தின் தாண்டவத்தினால் அழகுடன் கூடியதும், செங்கழுநீர், குமுத புஷ்பங்கள் மலர்ந்து அதன் நறுமணத்துடன் கூடியதுமான அமிர்த ஸ்வரூபமான 'அமிர்த வாபிகை' இருக்கிறது.

### தாராதேவி

இந்த அமிர்த வாபிகையின் நடுவில் உள்ள முத்துக்களால் செய்யப்பட்ட ஓடத்தில் குங்குமம் போன்ற நிறத்தை உடையவளும், சந்திர கலையை சிரசில் தரித்து பூர்ண சந்திரன் போன்ற முகப் பொலிவுடன், சிவந்த கீழ் உதட்டில் படர்ந்த மந்தஹாஸ புன்சிரிப்புடனும், மான் விழிகளைப் போன்ற விழிகளை உடையவளும், நீண்ட கூந்தல், காதில் குண்டலங்கள் பிரகாசிக்க யௌவனத்துடன் கூடியவளும், யௌவனத்தின் இயல்பால் கர்வமுடையவளாகவும் "தாரா தேவி" விளங்குகிறாள்.

ஒரு மனிதனின் மனம் எப்போதும் பலவித எண்ணங்களை உடையதாய் இருப்பதால் அது சஞ்சலம் என்று கூறப்படுகிறது. அந்த சஞ்சலமே இங்கு அலைகளாகவும், மனத்தின் எண்ணமும் அதுபற்றி மனதில் ஏற்படும் சந்தேகமும் இரண்டு கரைகளாகவும் மனத்தினால் ஏற்படும் சொல், செயல் ஆகியவைகளை பறவைகளாகவும், மனதில் ஏற்படும் விருப்பு, வெறுப்பு வண்டுகளின் ரீங்காரமாகவும் அவைகளை ஞானம் என்ற ராஜஹம்ஸத்தில் வைக்க அமிர்தமான சித்தி சித்திக்கும் என்பதை மனோமயம் என்ற கோட்டையைச் சொல்லி, அமிர்த வாபிகையையும் கூறுவதில் ரகஸிய தத்துவம் ஆகிறது....

(தொடரும்)

சதுர்த்தி அன்று சாதா க. பருப்பு போளி பூரணம் செய்தும் கொழுக் கட்டை செய்யலாம்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



''அழகுக் கலையில் மின்சார சம்பந்தமான உபகரணங்களை உபயோகப்படுத்தி பல சிகிச்சைகளை செய்கிறோம்'' என்கிறார் 'மஹா' ப்யூட்டி பார்லர் உரிமையாளர் திருமதி. மகாலக்ஷ்மி.



# மின்சார அழகு!

*1. எலக்ட்ரோலிஸஸ்*

மின்சாரத்தை உபயோகப்படுத்தி நமது முகத்தில் வேண்டாத இடத்தில் இருக்கும் முடிகளை நிரந்தரமாக அப்புறப்படுத்துவது எலக்ட்ரோலிஸஸ் ஆகும். இம்முறையில் முடியின் வேர்க்கால்களை சாக அடிப்பதால், மேலும் முடிவளர்வதைத் தடுக்க முடியும். ஒருமுறை மட்டும் செய்தால் போதாது. குறைந்தது 7 அல்லது 8 முறை செய்ய வேண்டும்.

ஒருவருக்கு உபயோகப்படுத்திய ஊசியை மற்றவருக்கு உபயோகப்படுத்தக் கூடாது. சர்க்கரை வியாதி மற்றும் ரத்தக் கொதிப்பு உள்ளவர்கள் இந்த முறையைப் பயன்படுத்தக் கூடாது.

த்ரெட்டிங், வேக்ஸிங், ட்வீஸிங் மூலம் உதட்டின் மூலம் முடியை நீக்கச் செய்யலாம். ஆனால் முடி உடனே வளரும். எலக்ரோலிஸஸ் மூலம் செய்வதால் முடி வளர்ச்சி தடைப்படும். எலக்ட்ரோலிஸஸ் செய்யப் பயன்படும் ஊசியை நன்கு ஸ்டெரலைஸ் செய்த பின்புதான் உபயோகிக்கப்பட வேண்டும். இந்த சிகிச்சை ஒரு நல்ல தேர்ச்சி பெற்ற அழகுக் கலை நிபுணரால்தான் செய்யப்பட வேண்டும். கல்யாண வயதில் உள்ள பெண்களுக்கு உதட்டின் மீது அதிகப்படியாக முடி வளர்ந்து பார்க்க விகாரமாகத் தோன்றும். அப்படிப்பட்டவர்கள் எலக்ட்ரோலிஸஸ் செய்து கொண்டால் நிரந்தரமாகத் தீர்வு காணலாம்.

**இம்பினேன்டேஷன்**

இம்முறையினால்



மெலிதாகவும் குறைவாகவும் உள்ள புருவ முடிகளை அடர்த்தியாகவும், அதிகமாகவும் காட்ட முடியும். புருவ வடிவத்தை மாற்றியும் அமைக்க முடியும். சீராக இல்லாத புருவத்தை ஒழுங்காக மாற்ற முடியும். இந்தக் கருவி சிறிய பேனா போன்று மின்சாரம் மூலம் செயல்படும். இதை ஒரு டாக்டர் மூலம் அனஸ்தீஷியா கொடுத்துத்தான் செய்ய வேண்டும். அதிகப்படியான மின்சாரம் செலுத்தக் கூடாது. கவனக்குறைவு ஏற்பட்டால் அந்த இடம் கருப்பாக மாறி விடும்.

விபத்தில் கட் ஆன புருவத்தைக் கூட மை மூலம் நிரந்தரமாக சரிப்படுத்தலாம். முன்பு சினிமா நடிகைகள் அழகுக்காக முகத்தில் மச்சம் வைத்துக் கொள்வார்கள். ஆனால் இன்று கல்லூரி போகும் பெண்கள் கூட விரும்பி வைத்துக் கொள்கின்றனர். அழகு மச்சம் மேலும் அழகைக் கூட்டிக் காண்பிக்கும்.

**காது குத்துதல் :**

இது ஒரு சின்ன துப்பாக்கி போன்று இருக்கும். இதில் காதில் போடுவதற்கு உரிய கம்மலையும், திருகாணியையும் பொருத்தி இம்மிஷினை அமுக்குவதால் அவை இரண்டும் காதில் ஓட்டை போட்டு பொருத்திக் கொள்ளும். இதைப் பொருத்துவதற்கு முன்பு வலியைக் குறைக்கும் மருந்தைத் தடவுவோம். மேல் மடலில் காது குத்துவது, புருவத்தின் ஓரத்தில் குத்துவது என்பது எல்லாம் ஃபேஷன் மாத்திரம் அல்ல. அக்குபங்சர் முறையில் பார்த்தால் இதனால் உடல்ரீதியாக நல்ல மாற்றம் ஏற்படுவதாக நம் முன்னோர்கள் சொல்லுவார்கள்.



எனக்கு ஆங்கில மருந்துகளினால் கடுமையான மலச்சிக்கல் ஏற்பட்டது. கூடவே ஜுரத்தினால் மார்ச்சளி இருமல் தொந்திரவு. என் கணவருக்கும் ஒவ்வாமையினால் வரும் இழுப்பு.

நான் வசிக்கும் ஆந்திராவில் கோங்கூரா எனும் புளிச்சக்கீரை செழுமையாக நிறைய விற்கும்.



அதை வாங்கிச் சமைத்துச் சாப்பிட்டேன். எனக்கும் அவருக்கும் இருந்த தொந்திரவுகள் அறவே நீங்கின.

குடலைச் சுத்தம் செய்வதிலும் உடலில் எங்கு தொற்று இருந்தாலும் குணப்படுத்துவதிலும் தலை சிறந்த மூலிகை இது என என் அனுபவத்தில் உணர்ந்தேன்.

சீதபேதிகூடக் குணமடையும். துகையலாகவோ, பருப்புடன் சேர்த்தோ, இறைச்சி கோழியுடனோ சமைக்கலாம். நல்ல புளிப்புச்சுவை. விரைவில் வெந்து விடும் தன்மை. எங்கள் வீட்டில் புளி, தக்காளி சேர்க்காமலே சுக்காங் கீரை, கோங் கூரா கீரை, கோவைக்காய், தோசக்காய் எனும் மஞ்சள் வெள்ளரி கொண்டு சமைக் கிறேன். அதனால் தக்காளி என்ன விலை ஏறினாலும் எனக்குக் கவலையில்லை. இயற்கையாக புளிப்புச் சுவை நிறைந்த இந்தக் காய்களும், கீரைகளும் உடலுக்குக் குளிர்ச்சியைத் தருகின்றன.

மூலநோய், பெருங்குடல் சம்பந்தமான நோயுள்ளவர்கள் புளி சேர்க்காது இவைகளை உண்டுவர நாளடைவில் உடம்பில் சக்தி கூடும்.

அரைக்கீரை சூடு. அதனுடன் இந்த இரண்டு கீரைகளில் ஒன்றைச் சேர்த்து மசிக்கலாம். பாலக் கீரையுடன் தக்காளி சேர்க்கக் கூடாது. கற்கள் உண்டாகும் என்கிறார்கள். அதனுடன் புளிப்புச் சுவைக்கு இவைகளை கூடச் சேர்த்துச் சமைக்கலாம்.

— மோஹனா

மரு நீக்குதல்

பொதுவாக கழுத்து மடிப்பில், கன்னங்களில், புருவத்தின் கீழ், கண் ஓரங்களில் மரு தோன்றும். இதை நிரந்தரமாக நீக்குவதற்கு ஒரு கருவி வந்துள்ளது. சில பேருக்கு முகம் பார்க்க அழகாக இருப்பார்கள். ஆனால் அந்த முகத்தில் ஏற்பட்ட மருக்கள் பார்க்கவே விகாரமாக தோன்றும். அவற்றை எல்லாம் எந்தவித தடங்கலும் இல்லாமல் நிரந்தரமாக நீக்கலாம். அந்த நீக்கிய இடத்தில் இருந்து பருக்கள் மறுபடியும் வராது.

வேக்குவம் சக்ஷன் :

வெள்ளை மருக்கள், கரும்புள்ளிகள் அழுக்கு எல்லாம் வலி இல்லாமல் எடுக்க உதவும் கருவி. இதை உபயோகிக்கும் போது சருமத்தில் அலர்ஜி எல்லாம் வராது.

எடை குறைத்தல் :

இந்தக் கருவியை உபயோகித்து உடலில் உள்ள தேவையில்லாத சதைகளையும், கொழுப்புக்களையும் குறைக்கலாம். இது ஒரு சிகிச்சையில் போகாது. குறைந்தது பத்து முறை சிகிச்சை தேவை. அத்துடன் குறைந்த உணவும் உடற்பயிற்சியும் தேவை. இதில் செய்வதால் கொழுப்புக்களை அப்படியே உறிஞ்சி எடுத்து விடும்.

ஓசோன் ஆவி பிடித்தல் :

இதிலிருந்து சூடான நீராவி வரும். இதைக் கொண்டு முகத்தில் காண்பித்தால் முகத்திலுள்ள சிறு துளைகள் திறந்து கருப்பு, வெள்ளைப் புள்ளிகள் எல்லாம் எளிதாக எடுக்க முடியும்.

இது தவிரவும், முகத்தில் சில்லென்ற ஆவி படும் கருவி உண்டு. இதன் உபயோகம் திறந்த துளைகளை மூடிவிடும். ஹைஃப்ரீக்வன்ஸி கொண்ட கருவி பருக்கள் சிகிச்சையில் உள்ளே எலக்ட்ரோ கதிர்களை ஊடுருவி, உள்ளே இருக்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. அதிக எண்ணெய்ப் பசையை நீக்குகிறது.

இன்றைய நாகரீக முன்னேற்றமான சூழ்நிலையில் எதையும் உடனடியாக செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டு இருக்கும் வேளையில் அழகுக் கலை மட்டும் இளைத்ததா? என்ன? அதற்கும் மின்சார உதவி வந்து விட்டது. ஆனால் இவற்றையெல்லாம் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள் மூலம் செய்து கொள்வது சிறந்தது. நல்ல பலனைத் தரக்கூடியதுமாகும்.

# நீண்ட நாள் வாழலாம்!

மனிதன் 120 ஆண்டுகள் வரை வாழ முடியும் என்று விஞ்ஞானிகள் உறுதி படக் கூறுகிறார்கள். ஆனால் பலர் அல்பாயுசில் மரணமடைந்து விடக் காரணமென்ன? ஜப்பான், யூனான் போன்ற நாடுகளில் 120 ஆண்டுகளுக்கு மேலாக உயிரோடிக் கிறவர்களின் எண்ணிக்கை அதிகமாயிருக்கிறது. அவர்களது நீண்ட ஆயுளுக்கு ஜீன்கள், உணவுப் பழக்கங்கள், உழைப்பு எனப் பல காரணங்கள் கூறப்படுகின்றன.

விஞ்ஞானிகளின் ஆய்வுகள் எட்டு உடல் நல ஒழுக்கங்கள் நீண்ட ஆயுளுக்கு உதவுவதாகக் கண்டுபிடித்திருக்கின்றன. பெரும்பாலான ஜனங்கள் தொண்டு கிழமாக, பிறருக்குப் பாரமாக, உறவினருக்கு உபத்திரவமாக ஆகும் வரை உயிரோடிருக்க விரும்புவதில்லை. ஆனால் சில பேர் முதுமையிலும் சுறுசுறுப்பாகவும் உபயோகமான உற்பத்தித் திறனுடனும் செயல்பட்டு வருகிறார்கள். இந்திய ஜனங்களுக்கு மரணத்தை விட முதுமை மோசமானதாகத் தோன்றுகிறது.

கையும் காலும் ஒழுங்காகச் செயல்படும்போதே பொக்கென்று போய் விட வேண்டுமென்றுதான் நமது ஜனங்கள் கடவுளைப் பிரார்த்திக்கிறார்கள். ஆனால் முதுமையையும் ஒழுங்கானதாகவும் உருப்படியானதாகவும் ஆக்கிக் கொள்வது நம் கையில் தானிருக்கிறது. மருத்துவ வசதிகளை விட ஒவ்வொருவரின் தனிப்பட்ட பழக்க வழக்கங்களே நீண்ட ஆயுளுக்கு அதிகமாக உதவுகின்றன.

1900 முதல் 1960 வரையான அறுபது ஆண்டுகளில் நம் நாட்டில் ஆண்களின் சராசரி வயதில் ஏற்பட்ட அதிகரிப்பு 3 ஆண்டுகள். ஆனால் அதே கால கட்டத்தில் பெண்களின் சராசரி வயது 7 ஆண்டுகள் வரை அதிகரித்திருக்கிறது. சரியான வாழ்க்கை முறையைப் பின்பற்றுவதன் மூலம் ஆண்களும் பெண்களும் பத்து முதல் 15 ஆண்டுகளுக்குக் கூடுதலாக வாழ முடியும் என ஆய்வுகள் காட்டுகின்றன.



புகை பிடித்தல் விரைவான மரணத்துக்கு வழி வகுக்கும் என்பது எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. அதை அடுத்து உடலில் ஊளைச் சதையை ஏற்றிக் கொள்வது ஆயுளைக் குறைக்கும் முக்கியக் காரணி. அதேபோல உடலில் சதையே இல்லாமல், உரிய அளவைவிட 20-30 சதவீதம் குறைந்த உடல் எடை கொண்டவர்களுக்கும் ஆயுள் கம்மி.

ஆண்களை விட பெண்கள் அதிகமான உடலுழைப்புச் செய்கிறார்கள் என்று சொன்னால் ஆச்சரியமாக இருக்கலாம். திட்டமிட்டு

உடற்பயிற்சி செய்கிறவர்களைத் தவிர மற்ற எல்லா ஆண்களும் பெண்களை விடக் குறைவாகவே உழைக்கிறார்கள். வீட்டில் வேலைக்காரி வைத்துக் கொள்ளாமல் வீட்டு வேலைகளைத் தாமே செய்கிற பெண்களின் உடல் உழைப்பின் அளவு மிகவும் அதிகம். அவர்கள் உடற்பயிற்சி செய்வதற்கு என்று தனியாக நேரத்தை ஒதுக்க வேண்டிய அவசியமே யில்லை. வீட்டு வேலை செய்யும்போது அதைச் சந்தோஷத்துடனும் அக்கறையுடனும் செய்கிற பெண்களுக்கு ஆயுள் அதிகமாகிறது.

இதயத்துடிப்பும், ரத்த ஓட்டமும், சுவாச விதமும் அதிகமாகிற வகையில் வீட்டு வேலையோ, தேகப் பயிற்சியோ செய்யும் போது உடலில் சேதத்தைச் செப்பனிடும் மராமத்துப் பணிகள் (over hauling) சிறப்பாக நடைபெறுகின்றன. நன்றாக உழைத்தவர்கள் இரவில் தூங்கிக் காலையில் விழித்தெழும் போது உடல் துடைத்து எண்ணெயிடப்பட்ட யந்திரம் போலத் தடங்கலின்றி இயங்க ஆயத்தமாயிருக்கிறது. அளவான சாப்பாடு, அளவான தூக்கம், மனதை மகிழ்விக்கும் பொழுது போக்குகள் ஆகியவை இருந்தால் நீண்ட ஆயுள் நிச்சயம்.

சாப்பாடு ஒரு முக்கியமான விஷயம். காலையில் வெறும் வயிற்றுடன் இருக்கக் கூடாது. நாளின் முதல் சாப்பாடு எல்லா விதமான சத்துகளையும் உள்ளடக்கிய முழுமையான உணவாக இருக்க வேண்டும். முக்கால் வயிறு திட உணவு, கால் வயிறு திரவ உணவு என்பது சரியான சூத்திரம். நொறுக்குத் தீனிகள் ஆயுளைக் குறைக்கும். பசித்துப் புசி என்பது ஆன்றோர் வாக்கு. பசி என்பது வயிறு தான் பணியாற்ற ஆயத்தமாக இருப்பதை உணர்த்துகிற அடையாளம்.

"பசியேயில்லை, இருந்தாலும் நேரத்துக்குச் சாப்பிட்டால் மற்றவர்களுடைய சிரமம் குறையுமே" என்று சொல்லி உங்களுடைய சிரமத்தைக் கூட்டிக் கொள்ள வேண்டாம்.

இரவ உணவு என்கிறபோது மது வகைகள் சேராது. மது ஆயுளைக் குறைக்கும்.



ஒரு விரலி மஞ்சளை சுட்டுப் பொசுக்கி அதன் புகையை முகர்ந்தால்/நுகர்ந்தால் ஜல தோஷத்தினால் வடியும் (மூக்கில்) நீர் நிற்கும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

### தோழர்களும் தேவை

உடல் எடை குறைப்பு, உடற்பயிற்சி, அளவான சாப்பாடு, சரியான தூக்கம், புகையாமை, கள்ளுண்ணாமை, நேர்மறை எண்ணங்கள் ஆகிய ஏழுடன் மற்றவர்களுடன் கலந்துறவாடல் என்ற செயல்பாட்டைச் சேர்த்து நீண்ட ஆயுளுக்கான அஷ்டாங்க மார்க்கம் என விஞ்ஞானிகள் குறிப்பிடுகிறார்கள். கௌதம புத்தரின் கோட்பாடுகளிலும் இதே போன்ற எட்டு முறைகள் உண்டு. எனவே அவை அஷ்டாங்க மார்க்கம் எனப்படும்.

ஒருவர் மற்றவர்களுடன் கலந்து பழகி ஒட்டுறவை வளர்த்துக் கொண்டாலும் நீண்ட நாள் வாழ முடியும். பெரும்பாலான பொதுச் சேவை ஆர்வலர்கள் நீண்ட ஆயுளுடனிருக்கிறார்கள். ஒருவருடைய நீண்ட ஆயுளுக்கு அவர் மட்டுமின்றி அவரைச் சுற்றியிருப்பவர்களும் கூடக் காரணமாய் அமைகிறார்கள். யேல் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆய்வர்கள் ஒருவர் தனது மனைவி அல்லது கணவன், பிள்ளைகள், உற்றார், உறவினர், அலுவலக சகாக்கள், பொதுமக்கள் ஆகியோருடன் பழகுகிற விதத்துக்கும் நீண்ட ஆயுளுக்கும் இடையில் ஒரு தொடர்பு இருப்பதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். நிறைய நல்ல நண்பர்களிருப்பவர்கள் நீண்ட நாள் வாழ்கிறார்கள்.

அலுவலிலிருந்து ஓய்வு பெறுகிறவர்களில் பலர் மரணமடைவதற்குக் காரணம் இவ்வளவு நாள் அலுவலகத்தில் பல பேருடன் பழகி விட்டுத் திடீரென்று தனிமைப் படுவதுகூட இருக்கலாமென்று ஓர் ஆய்வு காட்டுகிறது. அத்தகையவர்கள் தனது அலுவலகம் அல்லது தொழில் தொடர்புள்ளவர்களைத் தவிர வேறு யாருடனும் பழகியிருக்க மாட்டார்கள். வேலையிலிருந்து ஓய்வு பெறுவது அவர்களைப் பொறுத்தவரை மீனை நீரிலிருந்து எடுத்து வெளியே போட்டது மாதிரிதான். தனிமை மிகவும் கொடிய நோய். நாமே நமக்கு அதை வரவழைத்துக் கொள்வது முட்டாள் தனம்!

மனப்பாங்கும் நீண்ட ஆயுளுக்கு ஒரு காரணி. நீண்ட காலம் வாழ்ந்தவர்களிடையே மன அமைதியும் நிம்மதியும் பொதுவான

# மணமகள் தேவை

ஆயிரவைசியர், 36/178, BE.Hons., M.E., படித்துவிட்டு அமெரிக்காவில் குடியேறியுள்ளவர். தற்சமயம் அமெரிக்காவில் பலகோடி ரூபாய் தொழிலுள்ள அமெரிக்க கம்பெனியில் தலைவராக உள்ளார். எவ்வித கெட்ட பழக்கமும் (புகை பிடித்தல் கூட) இல்லாதவர். அன்பாக பழகுபவர். குறுகிய காலத்தில் தன்னுடைய தொழில் திறமையால் நிறைய சம்பாதித்து, ரூ.70 கோடி அமெரிக்காவில் வங்கிக் கணக்குகளிலும், ஸ்டாக்குகளிலும் முதலீடு செய்துள்ளார். வருடம் சுமார் ரூ.12 கோடி வருமானம் உள்ளவர். நியாயமான காரணத்தினால் விவாகரத்து பெற்றவர். பெற்றோர், தமிழக அரசின் பெரிய பதவியிலிருந்து ஓய்வு பெற்று, தற்சமயம் கம்ப்யூட்டர் கம்பெனி நடத்துபவர். ஒழுக்கமுள்ள, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, ஓரளவு படித்த நல்ல அழகும் குணமும் உள்ள மணமகள் தேவை. ஜாதி பாகுபாடு இல்லை. மணப்பெண்ணின் விவரங்களுடன் ஃபோனில் அல்லது தபால் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**P. லட்சுமணன்,**
**26, போலீஸ் கமிஷனர் ஆபீஸ் ரோடு,**
**எக்மோர், சென்னை - 8. போன்: 044-8251252**



காதில் தோடு போடும் இடத்தில் புண் இருந்தால் கடுக்காயை உரைத்துப் போடலாம்.

— எஸ். விஜயா சீனிவாசன்

அம்சங்களாகத் தென்படுகின்றன. அவர்கள் வாழ்க்கையையும் உலகையும் நேசிக்கிறார்கள். உலகை விட்டுப் பிரிய மனமில்லாமல் முடிந்த வரை உயிருடனிருக்க முயற்சிகளை மேற்கொள்ளுகிறார்கள். அதற்காகத் தமது போக்குகளையும் நடத்தைகளையும் மாற்றிக் கொள்ளக் கூடத் தயாராயிருக்கிறார்கள்.

சிலர் புதிய பொழுது போக்குகளில் முனைகிறார்கள். உடல் நலத்தைப் பேணுவதில் கூடுதலான அக்கறை காட்டத் தொடங்குகிறார்கள். 'கொள்ளுப் பேரனின் கலியாணத்தைப் பார்த்தபிறகு தான் நான் கண்ணை மூடுவேன்' என்பன போன்ற பிரதிக்ஞைகளைச் செய்து கொள்ளுகிறார்கள். அக அமைதியும் இலக்குகளும் ஒரு நோயெதிர்ப்பு அமைப்பாக உருவெடுக்கின்றன. 'நாளை நமதே, நாளும் நமதே' என்று நம்பி வாழ்கிறவர்கள் நீடூழி வாழ்வார்கள்.

### உழைப்பில் இன்பம்

நீங்கள் செய்கிற வேலை மனத்துக்குப் பிடித்தமானதாக இல்லாமலிருந்தால், வேறு வேலை தேடிக் கொள்வது உத்தமம். மனதுக்குப் பிடிக்காத வேலையில் கடனே என்று உழன்று கொண்டிருப்பவர்கள் நீண்ட காலம் வாழ்வதில்லை. அலுவலகமானாலும், தொழிலானாலும், வீட்டு வேலையானாலும் இது பொருந்தும்.

உடலையும் மனதையும் சுறுசுறுப்பாக வைத்திருக்க உதவாத எந்த வேலையும் ஆயுளைக் குறைக்கும். மனதுக்குப் பிடித்தமான வேலையைத் திறம்படச் செய்து உச்ச நிலையை அடைபவர்களை எல்லாரும் தேடி வந்து நட்பு பாராட்டவும், உறவு கொண்டாடவும் முனைவார்கள். அதனால் நண்பர் குழாமும் உறவினர் தொடர்பும் பெருகும். சமூகத்திலும் அந்தஸ்தும் அங்கீகாரமும் கிட்டும். அது நீண்ட ஆயுளுக்கு வழி வகுக்கும்.

### இளமை நீடிப்பு மருந்துகள்

முதுமை தோன்றுவதற்குத் தனி ரசாயன உறுப்புகள் (free radicals) என்ற மூலக்கூறுகளே காரணம். இவற்றில் சில உடலிலேயே உற்பத்தியாகின்றன. வேறு சில புகை பிடித்தல், வெய்யில், கதிர் வீச்சு, காற்றுச் சூழல் போன்ற காரணங்களால் உண்டாகின்றன. இவற்றை ஆக்சிஜனேற்ற எதிர்ப்புப் பொருள்கள் (anti oxidants) எனப்படும் ரசாயனங்களால் தணிக்க முடியும். சூப்பர் ஆக்சைடு டைஸ் முட்டேஸ் (SOD) போன்ற ஆக்சிஜனேற்ற எதிர்ப்பு ரசாயனங்களை உடலே உற்பத்தி செய்து கொள்கிறது. உணவின் மூலம் சி, இ, ஏ போன்ற வைட்டமின்கள், பீட்டா கரோட்டின் போன்ற ஆக்சிஜனேற்ற எதிர்ப்புப் பொருள்களைப் பெற முடிகிறது.

வயதாக வயதாக ஆக்சிஜனேற்ற எதிர்ப்புப் பொருள்கள் உடலில் அதிகமாகத் தேங்கி இதய நோய், புற்று நோய், கண் புரை, உடல் நலிவு போன்றவற்றைத் தணிக்க உதவும். புதிய பழங்கள், காய்கறிகள் ஆகியவற்றை நிறைய உண்ணுவதன் மூலம் உடலில் ஆக்சிஜனேற்ற எதிர்ப்பை அதிகப்படுத்த முடியும்.

வயதாக வயதாக உடலில் DNA, RNA போன்ற ஜீன் ரசாயனங்கள் சேதப்படுவது அதிகமாகிறது. அவற்றை இட்டு நிரப்பக்கூடிய மருந்துகளை உட்கொண்டால் ஓரளவு பலன் கிடைக்கும். அதேபோல டிஹைட்ரோ எபியான் டிரோஸ்டிரான் (DHEA) என்ற ரசாயனமும் முதுமைப் போக்கைத் திணறடிப்பதாகத் தோன்றுகிறது. மனித வளர்ச்சி ஹார்மோன்கள் (HGH) உடலில் சதைகளை வலுவூட்டி முதுமை விளைவுகளைத் தணிக்கிறது. ஆயினும் இதுவரை முதுமையடைவதைத் தடுக்கவோ, தாமதிக்கவோ கூடிய மருந்து எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை என்பது தான் உண்மை.

சமநிலையான நிறைய பழங்களும் காய்கறிகளும் அடங்கிய உணவு, சீரான உடற்பயிற்சி, அடிக்கடி மருத்துவப் பரிசோதனை செய்து கொள்ளுதல், புகை பிடிக்காமலிருத்தல், காயம் அல்லது அடிபடாமலிருக்கத் தகுந்த பாதுகாப்பு செய்து கொள்ளுதல், உற்றார் உறவினருடன் கூடி வாழ்தல், வெய்யிலிலும், மழையிலும் அதிகமாக நடமாடாமலிருத்தல், சந்தோஷமான மனநிலை ஆகியவை முதுமையைத் தாமதப்படுத்தி நீண்ட ஆயுளுக்கு வழி வகுக்கும் என்பது உறுதியாகத் தெரிகிறது.

— கே.என். ராமசந்திரன்

## நம் இருவரைப் பற்றி ஒரு அற்புதமான விஷயம் உள்ளது.

# உண்மையில் நாங்கள் ஒருவரே.

அந்த மழலைச் செல்வம் தான் உங்கள் உலகம். அவனுக்குத் தாருங்கள் ஒரு அன்பளிப்பை. அதை வாஞ்சையுடன் போற்றி மகிழ்வான் என்றென்றும்.

# சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்ட்.

உங்களின் ஒரு அங்கமே உங்கள் மழலைச் செல்வம். அவனது அங்கத்தில் நீங்களும் ஒன்றாகத் திகழ்கிறீர்கள். இந்த பந்தத்தைக் கொண்டாட அவனுக்கு யூடிஐ–ன் சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்டை அன்பளிப்பாக தாருங்கள். 15 வயதிற்குட்பட்ட எந்த ஒரு குழந்தைக்கும், ஆண்டிற்கு 12% உறுதிப்படுத்தப்பட்ட வருவாய். வருவாய் தானாகவே மறுமுதலீடு செய்யப்படும். முதலீடு செய்யப்பட்ட ரூ.10,000 வளர்ந்து 21 ஆண்டுகளில் குறைந்தபட்சம் ரூ.1,08,000 ஆகிறது. குறைந்தபட்ச முதலீடு ரூ.2,000. உச்ச வரம்பு கிடையாது. மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள யூடிஐ கிளையை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும். உங்கள் குழந்தையின் எதிர்காலம் உங்கள் கையில். இப்பொழுதே அதைப் பத்திரப்படுத்துங்கள்.





**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

*உங்கள் வளமான நாளைக்கு*

ம்யூச்சுவல் ஃபண்டுகளில் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்களை பாதிக்கும் காரணங்களால் திட்டங்களின் என் ஏ வி ஏறவும், இறங்கவும் செய்யலாம். கடந்த கால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. சி ஜி ஜி எஃப் என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரத்தை, எதிர்கால வாய்ப்புகளை அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று ஒரு உத்திரவாதமும் வழங்கப்பட மாட்டாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

**மண்டல அலுவலகம்** : 29 இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 5210335, 5210347. **கிளை அலுவலகங்கள்** : கோயம்புத்தூர் போன்: 214973. சென்னை போன் : 5210335, 5210347. மதுரை. போன்: 738186. திருச்சி போன்: 760060.

SAATCHI & SAATCHI - 135/99 C TAM A

# நான் அனுதாபம் வேண்டிச்

சின்ன வயசிவிருந்தே நான் ஒரு போராளி 'Fighter' - என்று தான் சொல்ல வேண்டும்.

படிப்பு ஒன்றும் சொல்லிக் கொள்ளும்படியாக இல்லை... ஓவியத் துறையில் மனசு சென்றதால் - பிடிவாதமாய் ஓவியம் கற்று - சில பரீட்சைகளை எழுதினேன்.

நவம்பரில் பரீட்சை... டிசம்பர் முதல் வாரத்தில் என்னைப் பெண் பார்க்க மாப்பிள்ளை வீட்டினர் வந்தார்கள். அதுதான் முதலும் - கடைசியுமானப் பெண் பார்க்கும் வைபவம். பாடச் சொன்னார்கள்.

வெட்கம் தெரியாது... பிகு, பிகுக்காரம் இதற்கெல்லாம் அர்த்தம் தெரியாது. 'யார் பாடுன்னு சொன்னாலும் 'டக்'குனு பாடிடணும்...' - இது பாட்டி அன்றாடம் எனக்கு போதிக்கும் மந்திரங்களில் ஒன்று.

பாடினேன்...

"கத்துக்கறாளா?"

"ஆமா... அஞ்சு வயதுல இருந்தே..."

"பேஷ்... சமைக்கத் தெரியுமா?"

"அவ அப்பாவைப் பெத்த பாட்டிக்கு ரிஷி பஞ்சமிக்கு ஏழு வித பட்சணம் இவ ஒண்டியா செஞ்சிருக்கா... அதுவும் பதினாறு வயசுல..."

"இப்ப என்ன வயசாறது?"

"இந்த ஆனி வந்தா பத்தொம்பது முடிஞ்சு இருபது..."

"எங்க ரமணனுக்கு இந்தக் கார்த்திகையோட முப்பத்து மூணு முடியறது..."

"அதனால என்ன, வயசு வித்தியாசம் வேணும். அப்பத்தான் ஒருத்தரை ஒருத்தர் அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போக லகுவா இருக்கும்... மேலும் உங்க தம்பிக்கு முப்பத்து மூணுன்னு யாரும் சொல்ல மாட்டா... சின்னப் பையன் மாதிரி இருக்கார். இவனுக்கு கொஞ்சம் சதைப் பிடிப்பான உடம்பு.. மடிசாரைக் கட்டினா - முப்பது வயசு சொல்லலாம்..."



என் பாட்டியின் வார்த்தைகள்...

இப்படிச் சொல்கிறாளே என்று ரோஷப்படக் கூடத் தெரியாமல் சிரித்தேன் நான்.

இந்தச் சிரிப்பு ஒன்றுதான் இன்று வரையில் என்னுடைய ஸ்திரமான சொத்து...

எத்தனையோ பிரச்சினைகளை சிரித்தபடி சமாளிக்க என்னால் முடிந்ததென்றால் - கடவுள் எனக்கு அளித்திருந்த ஒரு குண விசேஷத்தினால்தான்.

அது... இடியே தலை மீது இறங்கினாலும், அதற்காக வெகு நேரம் துக்கம் கொண்டாட முடியாது என்னால். கொஞ்ச நேரம் திகைப்பேன்... வருத்தப்படுவேன்... அழுவேன்... கொஞ்ச நேரம்தான் உடனேயே சகலத்தையும்

உதறி விட்டு அடுத்த முயற்சிக்குக் கிளம்பி விடுவேன்.

பாட்டி வீட்டில் காரியங்களைக் கற்றேன்; மணக்க மணக்க சமைக்கக் கற்றேன்... பாட்டும், ஓவியமும் படித்தேன்... ஆனால் உலக அனுபவம் பூஜ்யம்தான்.

இருபது வயசு சிறுமியான நான் – கணவரோடு குடித்தனம் நடத்த ஆரம்பித்த சில நாட்களிலேயே – பாட்டி வீட்டில் அனுபவிக்காததையெல்லாம் அனுபவித்தேன்.

அதையெல்லாம் இப்போது கிளறுவது அநாவசியம் என்றாலும் – இப்போது தனிமரமாய், குழந்தைகளை வளர்க்க சக்தியின்றி தவிக்கும் சகோதரிகள் – "உங்களுக்கெல்லாம் ஃபேமிலி பேக் ரவுண்டு' இருந்தது மேடம்... என் கஷ்டமெல்லாம் உங்களாலே புரிஞ்சுக்கக் கூட முடியாது" – என்று சலிப்புடன் புலம்பும்போது – "என் கதை தெரிந்தால் நீ இப்படி பேச மாட்டாய்" என்று சொல்லத் துடிப்பேன் நான்.

அவளது துக்கத்தில் நடுவே – என் வார்த்தை காதில் விழாது...ஆதலால் இங்கே பொதுவாக – கஷ்டப்படும் அத்தனை சகோதரிகளையும் அழைத்து, என்னைச் சுற்றி உட்கார வைத்துக் கொண்டு சொல்கிறேன்.

என் கதை – அனுதாபம் வேண்டி சொல்கிற கதை இல்லை... படிக்கிறவர்களுக்கு, 'அட, இத்தனை அவஸ்தைப் பட்ட இவளே இன்னிக்கு முன்னுக்கு வந்திருக்காளே... நம்மாலே முடியாதா...' என்கிற எண்ணம் தோன்றினால் போதும். பிழைத்துக் கொள்வார்கள், நிச்சயம்...

இருபது வயதில் கல்யாணம் என்று சொன்னேன் அல்லவா... திருமணமாகி ஏழெட்டு மாதங்கள் வரையில் அவருக்கு என்ன வேலை என்று தெரியாது. நிறைய படித்திருக்கிறார் என்பது மட்டும் தெரியும்.

தனிக்குடித்தனம். மாடியில் வீடு. கீழே குடித்தனக்காரர்கள். குடித்தனக்காரர்கள் யாரும் மாடிக்கு வர மாட்டார்கள். காலை எட்டு மணிக்கு இவர் சாப்பாடு கட்டி எடுத்துக் கொண்டு போனால் – இரவு பதினொரு மணிக்குத்தான் வருவார்.

தனியாக இருக்க பயமாக இருக்கும். மேல் மாடிக்கு துணி காயப் போட, வடாம் உலர்த்த – போக முடியாமல் அனுமதி மறுக்கப்பட்ட குடித்தனக்கார மாமிகள் – மாடியில் மோகினி நடமாட்டம் உண்டு என்றும், சலங்கை சத்தம் இரவில் கேட்கும் என்றும் என்னை பயமுறுத்தி வைத்திருந்தனர்.

இது பற்றி என் கணவரிடம் சொன்னதினால் கிடைத்த பலன் – கீழ் வீட்டுக்காரர்களுடன் பேசக் கூடாது என்கிற உத்தரவுடன், ஆபீசுக்குப் போகும்போது வீட்டைப் பூட்டி விட்டுச் செல்வதுதான். வேலைக்காரக் குட்டி, பக்கத்து வீட்டுக்கும் எங்கள் வீட்டுக்கும் இடையே இருந்த சின்ன பொந்து வழியே வந்து போவாள்.

நேரமாக ஆக பயம் பிடரியைப் பிடித்து உலுக்கும். சத்தமாய் ஸ்லோகங்களைச் சொல்லியபடி நடு ஹாலில் வந்து உட்கார்ந்து கொள்வேன்....

நாலாவது மாதம்... வீட்டில் வடிக்க அரிசியில்லை... வாங்கிப் போட்ட மளிகை சாமான்கள் (தாத்தா, பாட்டி வாங்கிப் போட்டது) எல்லாம் எத்தனை நாளைக்கு வரும்? இவரிடம் சொன்னால், 'ஆகட்டும்... நாளைக்கு வாங்கறேன்....' – இதுதான் பதில்... சில நாட்களில் இருப்பதை மட்டும் வைத்து சமாளிக்க வேண்டி வரும்.

இருக்கிற உள்ளங்கை பயத்தம் பருப்பில் கொஞ்சம் வெல்லம் போட்டு பயத்தங் கஞ்சி... ரவா உப்புமா...

கோதுமை மாவு தோசை... (சப்பாத்தி செய்தால் சப்ஜி செயய காய் வாங்க வேண்டி

# சொல்லவில்லை!"

**அனுராதா ரமணன்**



வருமே...)

கடைசியில் சமைய லறையையே ஒருநாள் ஒட்டடை அடித்து, சுத்தம் செய்த பிறகு...

"நான் வெளிய சாப்பிட்டுக்கறேன்... எனக்காக சமைக்க வேண்டாம்..."

– இப்படிச் சொல்லி விட்டுப் போய் விடுவார்....

"அப்ப நான்..."

கேட்க மாட்டேன்... 'எனக்குப் பசிக்கிறது' – என்று கேட்டுப் பழக்கமில்லை... போதாக் குறைக்கு வயிற்றில் மெய்யோ... பொய்யோ...

"நான் கதவைப் பூட்டலை... வேணுமானா உங்க பாட்டி வீட்டுக்குப் போய் சாப்பிடு... ஒரு வாரம், பத்து நாள் இருந்துட்டு வர்றதுன்னாலும் சரிதான்...."

நான் போகவில்லை. பாட்டி கேட்டால் என்ன சொல்வது... பிரமித்து உட்கார்ந்தேன். வேலைக்காரக் குட்டி தன் காசில் எனக்கு 'பன்'னும், 'டீ'யும் வாங்கி வருவாள்.

"ஏங்கா, பக்கத்துலதானே இருக்கு, உங்க நாத்தனார் வூடு... போயேன்... எதனாச்சும் துன்னத் தருவாங்க இல்லே?" எனக்கு யோசனை சொல்லிக் கொடுத்தாள்.

"அங்கே போய் 'பசி' என்று எப்படிச் சொல்வது?"

"நீ சொல்லவே வேணாம். அவங்களே எதுனாச்சும் தராமயாப் பூடு வாங்க..."

மண்ணாங்கட்டி துணையுடன்தான் என் நாத்தி வீட்டுக்குப் போய் வர ஆரம்பித்தேன்.

என் நாத்தனார்... இன்றளவும் என் மனசில் அன்னபூரணியாக நிற்பவள்.

வயதில் என் பாட்டியை ஒத்தவர்... உள்ளே போனதுமே மலர்ந்த முகத்துடன் அழைத்து, உடனேயே 'என்ன சாப்பிட்டே' என்றுதான் கேட்பார். நான் மிரள மிரள விழிப்பேன்...

"ஓ...மசக்கை படுத்தறதா.... உனக்கு நீயே சமைச்சு சாப்பிட்டா பிடிக்காதுதான்... உட்காரு, சாம்பார் சாதமாப் பிசைஞ்சுப் போடறேன்..."

நான் கண்களில் முட்டும் கண்ணீரை அடக்கும் வழி தெரியாது சிரமப்படுவேன். ஆனால், எத்தனை நாளைக்குத்தான் இப்படி தினமும் ஓசி சாப்பாடு சாப்பிட முடியும்? கூச்சம் பிடுங்கித் தின்றது... நடு நடுவில் 'டீ'யும் 'பன்'னும் உபவாசம். அப்பொழுதெல்லாம் ஸ்பான்ஸர் மண்ணாங்கட்டிதான்.

"அழுவாதேக்கா... அண்ணனுக்கு என்னா கஷ்டமோ... பார்த்துட்டேயிரு... முதல் தேதி வூடு முழுக்க மளிகை சாமானா இருக்கும்... நான் இப்பவே பாட்டில், டப்பா எல்லாத்தையும் தேய்ச்சு, துடைச்சு, வெய்யில்லே வச்சு எடுத்து வைக்கறேன்."

அவள் சொன்ன முதல் தேதியும் வந்து போனது... கீழ் வீடுகளின் வாடகை – இவருக்கு வெளியில் சாப்பிடவும், பஸ் செலவுக்கும்..

இனிமேல் தாங்காது என்று ஆனபோது – திருவல்லிக்கேணியில் இருந்த நான் – மைலாப்பூரில் இருந்த தாத்தா பாட்டிக்கு ஒரு கார்டு எழுதிப் போட்டேன்.

'கொஞ்சம் மோர் சாதத்துடன் கிளம்பி வாருங்கள்...!'

இதுதான் மொத்தக் கடித விவரமே...

சாயந்திரம் நான்கு மணி சுமாருக்கு ஒரு டாக்சியில் தாத்தாவும் பாட்டியும் பதை



பதைத்தபடி.... பாட்டி கையில் ஐந்தடுக்கு கேரியர்...

இவர்கள் வருவதற்கு முன் அழுதழுது தீர்த்து விட்டதினாலோ, இல்லை – அப்பமாய் மோர் சாதத்தைப் பார்த்த மகிழ்ச்சியினாலோ சிரித்தேன்.

தாத்தா விஷயமறிந்து துடிதுடித்துப் போனார். அப்பொழுதே கடைக்குப் போய் மளிகைச் சாமான்களை வாங்கி வருவதாகக் கிளம்பினார்.

பாட்டி பிடிவாதமாய் என்னை, தன்னுடன் அழைத்துப் போவதாக ஒற்றைக் காலில் நின்றாள்.

நான் – வேறு வழியின்றி வீட்டைப் பூட்டி, சாவியை என் நாத்தனார் வீட்டில் கொடுத்து விட்டுச் சென்றேன்.

அப்போதே – பாட்டியிடம் சொன்னேன்:

"வீட்டுல வடிக்க அரிசி இல்லையின்னு எங்க நாத்தனாருக்கு தெரிய வேண்டாம். அத்திம்பேருக்குத் தெரிஞ்சா உன் மாப்பின் ளையத்தான் திட்டுவார். அவருக்கு என்ன கஷ்டமோ, என்னமோ... கொஞ்சம் பொறுத் திருந்து பார்க்கலாம்..."

பாட்டி கண்ணீருடன் தலையசைத்தாள். என் நாத்தனாரிடம் நான் சொல்லித் தாரா மலேயே ஒன்றை மட்டும் கூறினாள்:

"உங்க தம்பியை மைலாப்பூருக்கே வரச் சொல்லுங்கோ... இங்கே ஒண்டியாய் சாப் பாட்டுக்குத் திண்டாட வேண்டாம். மசக்கை சரியானதும் அனுவை அனுப்பறேன்..."

இதற்குப் பின் மைலாப்பூரிலேயே - பாட்டி வீட்டில் நாங்களிருவரும்... 'தாத்தா, ஏன் அரிசி கூட வாங்க முடியாமல் என்ன செய்கிறாய்' - என்று ஒரு வார்த்தை இவரைக் கேட்ட தில்லை. தினமும் பாட்டி வகை தொகையாய் சமைத்துப் போட காலையில் கிளம்பிப் போவார். இரவுதான் வீடு திரும்புவார்... அதுவரையில் மாடிப் படியிலேயே தவமிருந்து, இரும்பு கம்பிகளில் நடுவே முகம் பதித்து... தெரு முனையில் பூட்ஸ் சத்தம் கேட்டால் கூட மிக உன்னிப்பாய் செவி மடுத்து அவர் 'இரும்பு கேட்'டைத் திறக்கும்போதே, பாய்ந்து சென்று கதவைத் திறந்து...




"மெதுவா... ஓடாதே..."

தாத்தா... உள்ளி ருந்து குரல் கொடுப் பார்.

அந்த நடு ராத் திரியில் சாப்பிடும் போது கூட ஏதோ மனக்கணக்கு...

"கொஞ்சம் குழம்பு?"

"உம்? வேணாம்... பத்துக்குள்ளே அஞ்சு நம்பர் சொல்லு..."

"எதுக்கு?"

"சொல்லேன்..."

"ரெண்டு... நாலு... ஏழு..."

நான், தூக்கக் கலக்கத்துடன் மனதில் தோன்றியதைச் சொல்லுவேன்...

**த**லைப் பொங்கல்...

சீர் செனத்தியோடு பேத்தியைப் புகுந்த வீட்டில் கொண்டு விட பாட்டி ஆசைப் பட்டாள்.

ஏற்கெனவே, 'கார்த்திகை விளக்கு - உன் வீட்டில் உன் கையால் ஏற்ற வேண்டும்' என்று பாட்டி எத்தனையோ சொல்லியும் - என் கணவர் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை...




''இருக்கட்டும்... மழையில விடு ஒழுகறது...''

''பொங்கலுக்கு முன்னாடி வெள்ளையடிக்கணும்... அப்புறம்தான் எல்லாம்...''

தட்டித் தட்டி நகர்ந்தவர் - பொங்கலுக்கு வேறு வழியின்றி காலையில் சாவியை என் பக்கம் வீசி விட்டு, 'வந்து தொலை' என்று அன்பாய் சொல்லி விட்டுச் சென்றார். அவ்வளவுதான்.

ஏகப்பட்ட காய்கறிகளும், புடவை வேஷ்டியும், கரும்பும், மஞ்சள் கொத்துமாய் கார் கொள்ளாமல் ஏற்றிக் கொண்டு திருவல்லிக்கேணி வீட்டையடைந்து, மாடியேறினால் -

கீழ் போர்ஷனில் இருந்தவர்கள் எங்களை வியப்புடன் பார்த்தார்கள்.

நான் பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே சென்றேன். தாத்தாவும், பாட்டியும் சிரோடுப் பின்னால்....

வீடு சுத்தமாய் காலி செய்யப்பட்டிருந்தது! ஒரு சின்ன ஸ்பூன் கூட இல்லாமல்...

காலிப் பெட்டிதான்... திறந்தபடி கிடந்த இரும்பு பீரோ... பூஜையறையில் சாமிப்படங்கள்... தவிர நான்... நான் மட்டுமே!

"காலி செய்யப் போறதா என்கிட்ட சொல்லவே இல்லையே..." - நான் தவிக்க...

"தினமும் ஒவ்வொரு சாமானையும் அவர் ஆள் வச்சு தூக்கிண்டு போறப்ப - சரிதான்; பாட்டி வீட்டோட ஜாகை போறாப்பல இருக்குன்னு பேசிண்டோம். அப்ப சாமானெல்லாம் அங்கே வரலையா..."

கீழ் போர்ஷன்களின் விசாரிப்பு.

இரவு வெகு நேரம் அவருக்காக காத்திருந்ததுதான் மிச்சம்.... வரவேயில்லை...

விடிந்தால் போகி...

நான், பாட்டி, தாத்தாவுடன் மறுபடியும் மைலாப்பூருக்கே திரும்பினேன்.... பொங்கல், மாட்டுப் பொங்கல்... ஒவ்வொரு நாளும் போனதே தவிர - அவர் வரவேயில்லை.

இதற்கு மேல் விஷயத்தை மூடி வைக்க முடியாது என்று தாத்தா - மேட்டூரிலிருந்த என் பெற்றோருக்குத் தகவல் கொடுத்தார்...

தை பிறந்து முதல் முகூர்த்தத்தில் எனக்கு வளைகாப்பு, சீமந்தத்துக்கு நாள் குறித்திருந்தார் என் அப்பா... இதற்காக உறவினர்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்பிக் கொண்டிருந்தவர் அலறிப் புடைத்துக்கொண்டு, அம்மாவுடன் சென்னை வந்தார்.

இத்தனை பெரிய சென்னை மாநகரத்தில் எங்கே போய் தேடுவது...

நிஜமாகவே எங்கேயாவது போய் விட்டாரா?

இல்லை ஏதாவது பஸ், லாரியில் அடிபட்டு வேறு ஏதாவது விபரீதம் ஏற்பட்டிருக்குமா...

ஆஸ்பத்திரி எதிலாவது நினைவு நீச்சில்லாமல் கிடக்கிறாரா...

சாப்பாடு இறங்கவில்லை. வயிற்றுச் சுமையை விடவும் மனச்சுமை ஆளை அழுத்தியது...

இவரைக் கண்டுபிடிக்க, திருவல்லிக்கேணி வீட்டின் கீழ் போர்ஷனில் குடியிருந்த இளைஞர் ஒருவரின் உதவியை அப்பா நாடினார்...

"உங்க கிட்ட சார் அடிக்கடி என்ன கேட்பார் மேடம்?"

"என்ன கேட்பார்... பத்துக்குள்ள அஞ்சு நம்பர் கேட்பார்... அங்கே, அந்த வீட்டு கவத்துல எல்லாம்கூட அஞ்சு, அஞ்சு நம்பரா எழுதி வச்சிருப்பார்..."

தேடல் தீவிரமானது.

இதற்கு நடுவில் - இவர் வேலை பார்த்த அம்பத்தூர் எஸ்டேட்டில் லாரி மோதி ஒருவர் இறந்து விட்டார் என்றும், உடலை ராயப்பேட்டை மார்ச்சுவரியில் வைத்திருப்பதாகவும் தகவல் அப்பாவுக்கு வர- அவர் என்னை தனியே கூப்பிட்டு அழுதார்...

"நான் மாப்பிள்ளைய ரெண்டே தடவை தான் பார்த்திருக்கேன்மா... ஒண்ணு கல்யாணத்துல. இன்னொன்று தலை தீபாவளி டயத்துல... இப்பப் பார்த்தா – அடையாளம் கூடத் தெரியுமோ தெரியாதோ..."

இங்கே வீடே பிரமை பிடித்துக் கிடக்கும் போது – வளைகாப்பு சீமந்தத்துக்காக நெருங்கிய உறவினர்கள் ஒவ்வொருவராய் வந்து இறங்க ஆரம்பித்து விட்டார்கள்.

யாருக்கும், 'மாப்பிள்ளை காணோம்' என்கிற விஷயம் தெரியாது... பாட்டியும், அம்மாவும் தனியே அழுது, பொதுவில் சிரித்து– ஒவ்வொருவருக்கும் டிபன் காபி கொடுத்து...

இவர் வரவே இல்லை என்றால் – இத்தனை பேரிடமும் உண்மையை எப்படி உடைப்பது...

"எங்கே மாப்பிள்ளையையே காணும்?"

அப்பாவைப் பெற்ற பாட்டி கேட்டபோது, என் அம்மாவைப் பெற்றவள் பூசி மெழுகினாள்.

அவர், அக்கா வீட்டுல இருக்கார்... சீமந்தத்துக்கு முதல்நாள் வருவார்...

பிப்ரவரி 5–ஆம் தேதி சீமந்தம். 3–ஆம் தேதி இவரை அப்பாவும், கீழ்வீட்டு இளைஞருமாய் கிண்டி குதிரைப் பந்தய மைதானத்திலிருந்து கைப்பிடியாய் அழைத்து வந்தனர்.

வந்ததும் இவர் போட்ட கண்டிஷன்:

'என்னை எதுவும் கேட்கக் கூடாது. கேட்டா, அந்த க்ஷணமே கிளம்பிடுவேன்....'

யாரும் வாயைத் திறக்கவில்லை...

பதிமூன்று நாள்... சட்டை பேண்ட்டைக் கூட மாற்றாமல், தாடியும் மீசையுமாய் திரிந்தவரை, வெந்நீரில் குளிப்பாட்டி, முகமழித்து, மயில் கண் வேட்டி சுற்றி, மாலையைப் போட்டு, சீமந்தத்துக்கு முதல் நாள் செய்ய வேண்டிய விரதத்துக்காக என் பக்கத்தில் கொண்டு வந்து நிறுத்தியபோது என் கடைக் கண்ணில் கசிந்த நீரில், தீட்டிய மை கரைந்தது.




இப்படியொரு சம்பவம் நடந்தது – அந்த வைபவத்துக்கு வந்திருந்த நெருங்கிய உறவினர்கள் சிலரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது...

அது மட்டுமல்ல... கல்யாணத்தின்போதே இவருக்கு வேலை இல்லை என்பதும், ஒவ்வொரு சாமானாகக் கொண்டு போய் வைத்து – இவர் குதிரை வாலில் கட்டித் தோற்றதும் கூட யாருக்கும் தெரியாது...

அப்பா, மீட்க முடிந்த பொருட்களை எல்லாம் மீட்டார்; தன் மகளின் சந்தோஷத்தைத் தவிர.

இதுதான் ஆரம்பம்... இதற்கே இத்தனைப் பக்கம் செலவழிந்து விட்டதென்றால் மீதிக் கதைக்கு எத்தனையெத்தனை பக்கங்கள்.

என் கணவர் அந்த நாளைய பி.எஸ்ஸி, பி.டெக்... கோல்டு மெடல் வாங்கியவர். சமஸ்கிருதத்தில் தேர்ச்சி பெற்றவர். மெல்லிய குரலில் தனக்கு மட்டுமே கேட்கும் தொனியில் பாடினால் இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டே இருக்கலாம். ஒரு பாடத்தில் சந்தேகம் என்று யார் போனாலும் மிகத் தெளிவாகச் சொல்லித் தருவார்.

தனது இன்னொரு பக்கத்தைத் தெரிந்து கொண்டு விட்டார் என்கிற காரணத்தினாலும், ஒரு சில நேரங்களில் வயிற்றெரிச்சல் தாளாமல் அப்பா ஓரிரண்டு வார்த்தைகளை அதட்டிச் சொல்லி விட்டதினாலும் – அப்பாவுக்கு – 'காச்மூச்' என்று ஆங்கிலத்தில் திட்டி கடிதம் எழுதுவார்.

ஆனால் அப்பாவோ, அவரது ஆங்கிலப் புலமையை புகழ்ந்து, எல்லோரிடமும் பீற்றிக் கொள்வார்.

"என் மாப்பிள்ளை திட்டி எழுதற இங்கிலீஷ்லே கூட ஒரு அழகு இருக்கும்மா..."

இதுதான் கண்டது...




மூத்தவன் சுதா பிறந்து – ஒரு வருடம் போல மேட்டூரில் வாசம். அப்போது அவர் சேலத்தில் வேலை பார்த்தார். குடித்தனம் வைக்கிற அளவுக்கு சம்பளம் இல்லை. சனி, ஞாயிறில் மேட்டூர் வருவார்... திங்கள் திரும்பி விடுவார். சேலத்தில் வாட்ஜ் ஒன்றில் வாசம்..

அப்பா, யார் யாரையோ பிடித்து, பேசி, மேட்டூரிலேயே கெம்ப்பிளாஸ்டில் வேலை வாங்கித் தந்தார். பக்கத்திலேயே ஒரு காலனியில் சிமிழ் மாதிரி வீடு... வாடகைக்குத்தான்... ஆனால் அதுவே வெள்ளை மாளிகை போல எனக்கு...

ஐந்தாறு மாதம் குடித்தனம் செய்திருப்பேன்... இரண்டாவது பிரசவம்... சென்னையில்... குழந்தை பிறந்த இருபத்தியெட்டாம் நாளே மேட்டூருக்கு வந்து விட்டேன்.

குழந்தைக்கு மூன்று மாசம் பேருக்காவது ஆனதும் கொண்டு போய் கணவரிடம் விட்டு விடுவதாகச் சொன்னாள் அம்மா... ஆனால் மேட்டூரில் கால் வைத்த அன்றே இவரிடமிருந்து கடிதம்...

'எனக்கு உடம்பு சரியில்லை. உடனே வா...'

குழந்தைகளை அம்மாவிடம் விட்டு விட்டு ஓடினேன். உடம்பு முழுக்க ஊசிக் குத்த இடமில்லாதபடி கொப்புளங்களுடன் படுத்திருந்தார் இவர்.

அப்பாவின் நண்பர் ஒருவர் – 'இது அம்மை' என்று சொல்லி, தினமும் காலையும் மாலையும் வந்து சீதளாஷ்டகம் படித்தார். நான் பால் குடிக்கும் குழந்தையை அம்மாவிடம் விட்டு விட்டு டிபன் கேரியரில் சாப்பாடு எடுத்துக்கொண்டு பஸ் ஏறி இங்கே வந்து – சாப்பாடு போட்டு விட்டு திரும்புவேன். அதற்குள் குழந்தை அழுது விறைக்கும்.

கிட்டத்தட்ட நாற்பது நாட்கள் இந்த நரகம்... அப்பாவின் நண்பர், 'இது அம்மையில்லை; வேறு ஏதோ' என்றார். சேலத்துக்குப் போய் பெரிய சரும டாக்டரிடம் காண்பிக்கச் சொல்லி, குடும்ப டாக்டர் விரட்டினார்.

நான், என் தம்பி, இவர் மூவருமாகத்தான் போனோம். 'ரத்த பரிசோதனை ரிசல்ட்டை இரண்டு நாள் கழித்துத்தான் தருவோம்' என மருத்துவமனையில் கூற, இவரோ நாளையே வேண்டுமென பிடிவாதம் பிடிக்க...

எப்படியோ சமாதானப்படுத்தி, நாளை மறுநாள் வந்து வாங்கிக் கொள்ளலாம் எனச் சொல்லி அழைத்து வந்தோம்...

இரண்டாவது நாள்–

நான் டிபன் கேரியருடன் போனபோது வீடு பூட்டியிருந்தது. பக்கத்து வீட்டம்மாள் சாவியைக் கொடுத்தார்.

"நீங்க வந்தாக் கொடுக்கச் சொன்னார்..."

எங்கே போயிட்டார்.

'சிகரெட் இல்லாம ஒரு நிமிஷம் இருக்க முடியாது. ஒருவேளை பக்கத்துல இருக்கற பொட்டிக் கடைக்குப் போய் இருக்கலாம்...'

நான், பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே போனேன். குப்பையும் கூளமுமாய் கிடந்த வீட்டைப் பெருக்கி சுத்தப் படுத்தினேன். சாமி விளக்கை ஏற்றி விட்டு உட்கார்ந்தேன்.

மாலை நாலு மணி வரையில்!

இவர் வரவேயில்லை.

மறுபடியுமா... அடி வயிற்றில் பயம் வந்து விட்டது... இதற்குள் என்னைக் காணாது, அப்பாவும், தம்பியும் வந்தனர்.

"என்னம்மா... குழந்தை கத்தி கத்தி கருண்டு போயிட்டா... நீ இங்கே உட்கார்ந்து என்ன செய்யறே...?"

"அவர் எங்கே போனார்னு தெரியலையேப்பா..."

சொல்லும்போதே அழுகை வெடித்தது எனக்கு... என் தம்பி, தான் அங்கே இருந்து– இவர் வந்தால் சாப்பாடு போடுவதாகவும், என்னை அப்பாவுடன் கிளம்பிப் போகும்

படியும் சொல்லி வற்புறுத்த –

மனசே இல்லாமல்தான் கிளம்பினேன்...

அடுத்த நாள், அந்த வீட்டு அலமாரியில் சேலம் சரும டாக்டரிடம் எடுத்துக்கொண்ட ரத்த பரிசோதனை ரிசல்ட்... ஒரு உறையில் போட்டு, ஒட்டப்படாமல்...

அப்பா ஒன்றும் புரியாமல், அதை எடுத்துக்கொண்டு எங்கள் குடும்ப டாக்டரிடம் ஓடினார்... அவர் பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கினார்.

'ஒரு கோர்ஸ் பென்சுலின் போட்டு குணப்படுத்தி இருக்கலாம். அதை விட்டுட்டு எங்கே போனான்?'

புரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். அறிவாளி, புத்திசாலி என்பதெல்லாம் - மிகச் சாதாரண அல்ப சுகத்துக்கு வடிகால் தேடுகையில் காணாமலேயே போய் விடுகிறது! சேலம் லாட்ஜ் கொடுத்த பரிசு...

அப்போது போனவர்தான். ஐந்தாறு வருடங்கள்... எங்கே போனார்... எங்கே இருக்கிறார்... இருக்கிறாரா – இல்லையா என்பது எதுவுமே தெரியாது.




''நல்லவேளை. பிழைச்சே! உனக்கு ஒண்ணுமில்லே. நல்லா இருக்கே.. இந்த வயகல உடம்பைக் கெடுத்துக் காதே... ஒழுங்கா இரு... போ...''

வீட்டுக்கு வந்து, பாட்டியின் மடியில் படுத்து 'ஓ'வென அழுதேன்...

"அவர் செஞ்ச தப்புக்கு – நான் கெட்ட பேரைச் சுமக்கணுமா பாட்டி..."

அந்த அழுகை கொஞ்ச நேரம்தான். அழுது கொண்டே இருக்க எனக்கு அவகாசமில்லை. உருப்படியா ஏதாவது செய்ய வேண்டும். என் குழந்தைகளை என் பணத்தில் காப்பாற்ற வேண்டும். யாரோ, என்னவோ சொல்லிக் கொண்டு போகட்டும்... அந்த லாப்-டெக்னீஷியன் எனக்கு என்ன ஒட்டா, உறவா.. இவனை நான் மறுபடியும் என் ஆயுசில் பார்க்கப் போவதில்லை.

"கண்ணைத் துடை... எழுந்திரு... ஊஞ்சலில்



நான் திருமணத்துக்கு முன்பு அரைகுறையாய் விட்ட படிப்பைத் தொடர்ந்தேன். குழந்தைகளை அம்மாவிடம் விட்டு விட்டு சென்னையில் வேலை தேடி அலைந்தேன். ஒரு பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்தும் சம்பளம் கிடைக்கவில்லை. நடுவில் எங்கள் குடும்ப டாக்டர் கூறினார்:

"அவருக்கு அந்த நோய் இருந்ததாலே, நீயும் ஒரு தரம் மெடிகல் செக் அப் செஞ்சுக் கோம்மா... நல்லது..."

சென்னையில் – மைலாப்பூர், மாடவீதியில் இருந்த ஒரு ரத்தப் பரிசோதனைக் கூடத்தில் பரிசோதனைக்கு ரத்தம் கொடுத்தேன். டாக்டர் எழுதித் தந்த காகிதத்தைப் பார்த்த பரிசோதகர் என்னை ஒரு மாதிரியாக பார்த்தார்... இரண்டாவது நாள் ரிசல்ட் வாங்கப் போனேன்.

உட்கார்ந்து வீசி ஆடு... பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது தாத்தா ராகத்தோடு பாடக் கற்றுக் கொடுத்த 'நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும் நிறைந்த சுடர்மணிப் பூண்...' பாரதியார் பாட்டைப் பாடு..."

எனக்கு நானே கட்டளையிட்டுக் கொண்டேன். பிற்காலத்தில் இப்படி சோர்ந்து போன மனசுக்கு, தனக்குத் தானே உற்சாகப் படுத்தி கட்டளையிடுவதற்கு மனநல மருத்துவத்தில் 'ஆட்டோ சஜஷன்' என்று பெயர் என்பதைத் தெரிந்து கொண்டேன்...

பல சமயங்களில் எனக்கு நானே டைரியில் கடிதம் எழுதிக் கொள்வேன்...

'அனு... வருத்தப்படாதே... உன்னுடைய பொற்காலம் வெகு தூரத்தில் இல்லை... உன் வெற்றிக்கு பிரார்த்தனை செய்யும் உன் அன்பு சிநேகிதி அனு' –




இந்த ரீதியில் பல கடிதங்கள் இருக்கும்... கதையை எங்கே விட்டேன்?

இவரில்லாத ஐந்தாறு வருடங்கள்... நான் படித்து, பரீட்சை எழுதி, பாஸ் செய்து – குழந்தைகளைப் படிக்க வைத்து நிறைய பெண்களுக்கு பெயிண்டிங், தையல், எம்பிராய்டரி, பொம்மை தயாரித்தல் இப்படி விதவிதமாய் கற்றுக் கொடுத்து – என் ஓவியங்களை அவ்வப்பொழுது சென்னை வரும் போது 'விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட்'டில் வைத்து, விற்பனை செய்து...

மேட்டூரில் என்னிடம் எல்லாரும் எத்தனையோ அன்பாகப் பழகினாலும், ஒரு சிலர், 'இவ புருஷன் எங்கே, இருக்கானா... இல்லையா... வெத்தலைப் பாக்கு மஞ்சள் குங்குமத்துக்கு கூப்பிடலாமா, வேண்டாமா! இப்படி தங்களுக்குள் குடைந்து கொள்ளாமல் இல்லை.

இவர்களை நான் குற்றம் சொல்ல மாட்டேன். பாவம்...மனிதர்கள்தானே...

ஒருநாள் – துணியில் வரையும் முறை ஒன்றை உதவித் தொகையுடன் கற்க, கலாக்ஷேத்ரா ஏற்பாடு செய்து – இதற்காக என்னை பெங்களூருக்குப் போகும்படி கடிதம் அனுப்பியிருக்க–

நான் மூட்டைமுடிச்சகளை கட்டினேன். இரவு ரயில் – பகலில் இவரிடமிருந்து தந்தி.

'நாளை நான் வருகிறேன்...!'

'அபூர்வராகங்கள்' சினிமாவில் – கடைசி காட்சியில் உயிரை விடுவதற்காகவே பைரவியின் கணவர் ரஜினிகாந்த் வருவாரே... அது மாதிரி...

மறுநாள் வந்து சேர்ந்தார்.

பழைய அச்சுறுத்தல்கள்தான்...

'என்னை எதுவும் கேட்கக் கூடாது...'

கேட்கவில்லை யாரும். கட்டிய மூட்டையைப் பிரித்தேன். அம்மா, கடகட காபி கலந்து கொடுத்து, கொண்டு போய் அவரிடம் கொடுக்கச் சொன்னாள்.

பெரியவன், 'அப்பா' – என்று தூரத்தில் நின்று விழிகளை அகல விரித்தான். மெள்ளப் போய் தொட்டுப் பார்த்தான்.

சின்னவள், கதவிடுக்கில் நின்று எட்டிப் பார்த்தாள்.

"யாரிந்த அங்கிள்" – என்று கேட்டாள்.

கடைசி வரை – கடைசி வரை என்றால் – எங்களிடம் இவர் வந்து சேர்ந்து எட்டு மாதம் முடியும் வரையில் சின்னவள் அங்கிள் என்றே கூப்பிட்டாள்... அப்பான்னு கூப்பிடு என்று அடிக்குரலில் மிரட்டினால் 'ஓ..ஸாரி' என்று நாக்கைக் கடித்துக் கொள்வாள்.

திரும்பி வந்து எட்டு மாத வாழ்க்கையில் நாலைந்து மாதம் சென்னை ராயப்பேட்டை மருத்துவமனையில்...

முன் எப்போதோ உடல் நலனில் அசட்டையாக இருந்ததன் விளைவு... ரத்தக் கொதிப்பு... சிறுநீரகப் பாதிப்பு என்று எல்லாமாகச் சேர்ந்து இவரைப் படுக்க வைத்து விட்டது.

இவருடன் காலையும் மாலையும் இணை பிரியாமல் நாலு மாதங்கள் மருத்துவமனையில் வாழ்ந்தேன்...

கடைசியில் – மறுபடியும் ஒரு பிப்ரவரி மாதம் – 14ஆம் தேதி – நானும், குழந்தைகளும் தனியானோம்.

இனி ரயில்வே ஸ்டேஷனிலும், பர்மா பஜாரிலும் இவரைத் தேட வேண்டாம்...

நேவி ப்ளூ பேண்ட், லைட் ப்ளூ ஷர்ட் அணிந்து யார் போனாலும், அது இவராக இருக்குமோ என்று அவசரமாக அவரது முகம் பார்க்க ஓட வேண்டாம்...

இவளுக்கு குங்குமம் கொடுக்கலாமா – வேண்டாமா என்று யாரும் குழம்ப வேண்டாம்.

என் இருபத்தியொன்பதாவது வயதில் –




'அனுராதா ரமணன்' என்கிற பெத்த பேரெல்லாம் இல்லாது – வெறும் 'அனு'வாக இருந்த சமயத்தில் – இவரது அந்திமக் காரியங்களில் ஒரு பகுதியாக என்னை அலங்கரித்து, சுற்றி உட்கார்ந்து ஒப்பாரி வைக்க – பெண்கள் வந்த போது – நான் தீர்மானமாகச் சொன்னேன்.

"நான் இப்படியே இருக்கேன்.. என்னை விட்டுடுங்கோ..."

"இப்ப எனக்கு இதெல்லாம் வேண்டாம். ஆனா, நான் எப்பவும் ஒரே மாதிரிதான் இருக்கப் போறேன். எனக்காக... என் குழந்தைகளுக்காக..."

என் அப்பாவைப் பெற்றவள். ஆசாரம் மிகுந்தவள்... அவளே, என்னைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

"உனக்கு எதுவும் வேண்டாம்டி குழந்தை... நீ இப்படியே இரு..."

இந்த சம்பவத்துக்குப் பின் இரண்டாம் மாதமே சென்னையில் தமிழ், ஆங்கிலம், இந்தி மூன்று மொழியிலும் வெளியான மாதப் பத்திரிகைக்கு லே அவுட் ஆர்ட்டிஸ்டாக வந்து சேர்ந்தேன்...

இதுதான் என் பத்திரிகை பிரவேசத்துக்கு ஒரு பிள்ளையார் சுழி...

'லே அவுட்' என்றால் என்னவென்றே தெரியாமல் தான் பத்திரிகையில் வந்து சேர்ந்தேன்.

எடிட்டர் என்னைக் கேட்பார்:

"அனு, இந்த மேட்டரை எத்தனை பாயிண்ட்லே எத்தனை 'இஞ்ச்'லே வைக்கலாம்?"

"எட்டு பாயிண்ட், ரோமன்லே வைக்கலாம் சார்..."

"ரோமனா... சரியா வருமா?"

"வரும் சார்..."

சகட்டு மேனிக்கு சொல்லி விடுவேன். அப்புறம் 'பேஸ்டிங் ஆர்ட்டிஸ்ட்' மூர்த்தி என்பவரிடம் ஓடி 'எட்டு பாயிண்ட் ரோமன்' இந்தப் பக்கத்துக்குச் சரியாக வருமா என்று கேட்பேன். அவர், என்னை பரிதாபமாய் பார்ப்பார்.

"முடியாதுங்க. சாத்தியமே இல்லே. எந்த ஐடியாவுல அப்படி சொன்னீங்க?"

"தப்பிச்சுக்கணும்கற ஐடியாவுலதான்..."

அப்போதெல்லாம் கம்ப்யூட்டர் இல்லை. அச்சுக்களை கையால் கோர்க்க வேண்டும். நான், இரண்டாம் மாடியிலிருந்து முதல் மாடியிலுள்ள பிரஸுக்கு ஓடி வருவேன். அங்குள்ள அச்சுக்களை தோராயமாகக் கோர்த்துப் பார்ப்பேன். மறுபடியும் ஆசிரியர் முன்னால் போய் நிற்பேன்.

"என்னம்மா டம்மி ரெடியா?"

"எனக்கென்னவோ அந்த மேட்டருக்கு அத்தனை முக்கியத்துவம் தரணுமான்னு தோணிச்சு. ஆறு பாயிண்ட் போதாதா?"

"அதைத்தான் நானும் நினைச்சேன். நீ என்னவோ 'எட்டு பாயிண்ட்'னு சொன்னியா... எப்படித்தான் செய்யறேன்னு பார்க்கலாம்'னு விட்டுட்டேன்..."

நான் இங்குதான் லே அவுட் செய்ய கற்றேன்... பிரஸ் பெண்களுடன் அரட்டையடித்துக் கொண்டே, 'கம்போஸ்' செய்யக் கற்றுக் கொண்டேன். பேஸ்டிங் ஆர்டிஸ்ட் மூர்த்தியிடம், அவரது புதுக் குடித்தன அனுபவத்தைக் கேட்டுக்கொண்டே, மேட்டரை, ரப்பர் ஸொல்யூஷனால் ஒட்டி, நறுவிசாய் பக்கங்களைத் தயாரிக்க (pagemaking) கற்றுக் கொண்டேன். பிரஸ் போட்டோகிராஃபரான எஸ்.வி.சேகருடன் (நம்ம சினிமா நடிகர் எஸ்.வி. சேகர்தான்) பேட்டி எடுக்கப் போய், ஒரு பக்கம் பேட்டி எடுத்துக்கொண்டே – இன்னொரு பக்கம் சேகருக்கு உதவியாய் லைட் பிடிக்கக் கற்றுக் கொண்டேன்.

எழுத்துக்கு வரும் முன் – சின்னதும் பெரிசுமாய் நிறைய வேலைகள்... கவிதைகள் எழுது




வதில் ஆரம்பித்து, புடவைக்கு எம்பிராய்டரி போடுவது வரையில்...

அவ்வளவு ஏன் – பத்திரிகை வேலையை விட்டு, வேறு உத்தியோகமும் கிடைக்காத போது ஆறு மாதங்கள் ஒரு கிறிஸ்துவக் குடும்பத்தில் வயதான பாட்டி – படுக்கை யிலேயே கிடப்பவர் – இவரை காலை எட்டு மணியிலிருந்து – இரவு ஏழு மணி வரையில் பார்த்துக் கொண்டேன்.

கணவரும், மனைவியும் ஆபீஸ் போய் விடுவார்கள். நான் போய் ஒரு நாள் விட்டு ஒரு நாள் – பாட்டியை குளிப்பாட்டி, பவுடர் அடித்து, சோறூட்டி... அவ்வப்போது புரட்டிப் போட்டு, நடுநடுவே அந்தம்மாள் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் பதிலளித்து – பதிலே சொல்ல முடியாத கேள்விகளுக்கு மௌனமாய் புன்னகைத்து...

வீட்டுக்கு வந்ததும் என் அனுபவங்களை டைரியிலே கொட்டி... பின் அதுவே காகிதத்தில் சின்னச் சின்னக் கதையாய் பிறந்து...

இன்றளவும் என் எழுத்து எனக்குச் சோறு போடுகிறது. என் வாழ்க்கை அனுபவங்கள்– மற்ற சகோதரிகளுக்கு உதவுகிறது. குழந்தைகளை வளர்த்து, மணம் செய்து கொடுத்து, நடுவே நோய்வாய்ப் பட்டு – 'இதுதான் கடைசி மூச்சு... நீ இந்த உலகத்தைப் பார்த்துக் கொள்' – என்கிற அளவுக்குப் போய்... 'கடைசியில் போனால் போகிறது... இன்னும் கொஞ்ச நாள் இருந்து விட்டே வா' – என்பதுபோல கடவுள் எனக்கு அளித்த வரம்... என்னை சிந்திக்க வைத்தது.

எழுத்து எனக்கு... ஆனால் என் வாழ்க்கை யாருக்கு?

"அய்யோ கஷ்டப்படுகிறேன். தற்கொலையைத் தவிர வேற வழியே இல்லே..." – இப்படி அலைபாய்கிற என் சகோதரிகளுக்கு, என் குழந்தைகளுக்கு – நான் ஏதாவது செய்ய வேண்டாமா...

"நீ மட்டுமில்லே... நானும் கஷ்டப் பட்டுத்தான் முன்னுக்கு வந்திருக்கேன். என் கதையக் கொஞ்சம் கேளு..."

இப்படி இழுத்து வைத்து, மங்கையர்மலர் மூலம் என் கதையைச் சொல்லியிருக்கிறேன்.

இது கொஞ்சம்தான். கதைக்குள் போனால் – ம.மலர் தனியாக ஒரு இணைப்பு போட வேண்டி வரும்.

இதுவே போதும்...

இப்போது பழைய கதையை எதற்காக எடுக்க வேண்டும் என்று என்னைச் சேர்ந்தவர்கள் கூடச் சொன்னார்கள்.

சொல்ல வேண்டும். நான் ஒன்றும் பிறக்கும் போதே கர்ணன் கவச குண்டலங்களுடன் பிறந்த மாதிரி காகிதம், பேனாவுடன் பிறக்கவில்லை என்பது தெரிவதற்காகவாவது சொல்ல வேண்டும் என்று தோன்றியது... அவ்வளவுதான்.

இப்பொழுதும் எழுத்தைத் தவிர – படம் வரைகிறேன். பாடுகிறேன். ரொம்பவும் சந்தோஷமாக இருக்கும் சமயத்தில் இந்தப் பெரிய உடம்பைத் தூக்கிக் கொண்டு சின்னதாய் ஒரு அபிநயம் பிடிக்கிறேன்.

எப்பொழுதாவது... எப்பொழுதாவதுதான். சென்டிரல் ஸ்டேஷனில், மவுண்ட்ரோடில் – நேவி புளு பாண்ட், லைட் புளு ஷர்ட் என்றால் மட்டும் – அவராக இருக்குமோ என்று கொஞ்சமே கொஞ்சம் பரபரத்துப் போவேன்.

அப்புறம் எனக்கு நானே சொல்லிக் கொள்வேன்:

'ஓ... அவர்தான் போயிட்டாரே...'

சரி... அடுத்த கதை எப்ப, யாருக்கு கொடுக்க வேண்டும்... இன்று யாரை என்னுடைய ஆலோசனை நேரத்துக்காக வரச் சொல்லியிருக்கிறேன்... பார்ப்போமா... வருகிறேன்... மீண்டும்... மீண்டும்... உங்களிடமே...

என்றும் அன்புடன் அனுராதா ரமணன்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16,காமராஜ் சாலை,பழையபெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம்,சென்னை-600063.
Tel&FAX : 2376129,Cell Ph : 9841050464
E-mail: sspeetam@md3.vsnl.net.in
& sspeetam@hotmail.com
WEB SITE: www.intamm.com / sspeetam

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 75 மாணவர்களும் 25 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 100 பேருக்கு ) | ரூ. | 750/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,500/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 500/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 75,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/ MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.




"சென்னை போன்ற பெரிய நகரங்களில் பெண்களால் எவ்வளவோ சாதிக்க முடியும். கலாசாரரீதியாக புரட்சி செய்தாலும் மற்றவர்கள் சும்மா இருப்பார்கள். ஆனால் எங்களைப் போன்ற சிறிய டவுன், கிராமங்களில் இருக்கின்ற பெண்கள் பெரிதாக ஒன்றும் செய்துவிட முடியாது" என்று சலித்துக் கொள்வதை நிறைய கேட்டிருக்கிறோம்.

வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டும் என்று நினைத்து விட்டால் குக்கிராமத்தில் இருந்தால் கூட சாதிக்க முடியும் என்கிறார்கள் இவர்கள்....



ராணிப்பேட்டையிலுள்ள, 'திருமலை அறக்கட்டளை', சமீபத்தில் "Net working for women's Empowerment" அதாவது "மகளிர் ஆக்க சக்திக்கான இணைந்த செயல்பாடு" என்ற தலைப்பில் மாநாடு நடத்தினார்கள். சுற்றுப்புறத்திலுள்ள கிராமப்பெண்கள் நிறைய பேர் மாநாட்டிற்குத் திரண்டிருந்தார்கள்.

# வெற்றி உங்கள் கையிலேதான் சகோதரி!





பூமா

மாநாட்டிற்கு முக்கிய விருந்தினர்களாக பிரபல தொழிலதிபர் திருமதி உஷா கிருஷ்ணா மகளிர் மேம்பாட்டுக் கழகத்தின் இயக்குனர் திரு. கே. ராஜாராமன் ஐ.ஏ.எஸ்., பாங்க் ஆஃப் இந்தியாவின் ஜோனல் மானேஜர் திரு எஸ்.ஏ. பட், மற்றும் திரு. டிவி. ரங்கா ரெட்டி, நபார்ட் வங்கியின் உதவி ஜி.எம். திருமதி மீரா வேணுகோபால் ஆகியோர் வந்திருந்தார்கள்.

'திருமலை அறக்கட்டளை' வேலூர் மாவட்டத்திலே வாலாஜா, சோளிங்கர், ஆற்காடு ஒன்றியங்களிலே கிராம முன்னேற்றத்திற்காக பாடுபட்டு, பல முன்னேற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. இதில்






முக்கியமாகக் கூற வேண்டியது மகளிர் முன்னேற்றம் பற்றியதுதான். இதைப் பற்றி 'திருமலை அறக்கட்டளை'யின் திட்ட இயக்குநர் திருமதி பூமா பார்த்தசாரதி கூறுகிறார்-

மகளிர் மேம்பாட்டுத் திட்டம்' என்பது சுமார் ஐந்து வருடங்களாக நடைபெற்று வருகிறது. அரசு சார்ந்த அமைப்பான தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுக் கழகத்துடன் பணி செய்ய ஆரம்பித்துள்ளோம். பதினைந்து முதல் இருபது பெண்கள் வரை கொண்டது ஒரு சங்கம். 1994-ம் ஆண்டு நூற்றி அறுபது பெண்களைக் கொண்ட பதிமூன்று சங்கங்களுடன் ஆரம்பித்த இந்தத் திட்டம் 4920 பெண்களுடன் 262 சங்கங்களாக இப்போது விரிவடைந்துள்ளது. இந்தப் பெண்கள் வாரக் கூட்டங்களில் இரண்டு, மூன்று என்று சேமிக்கும் பணம் இன்று ரூ. 27,11,8771 – ஆக உயர்ந்துள்ளது. மேலும் ரூ. 100லிருந்து ரூ. 20,000 வரை பெற்ற கடனுதவி இன்று ரூ 1,40,32,600 என்கிற நிலையை எட்டியிருக்கிறது!"




• மாநாட்டுப் பேச்சாளர்கள்

**கே : கடனுதவி என்பது எந்த வகையில் எந்த அடிப்படையில் கொடுக்கப்படுகிறது?**

பதில் : "இதற்குக் கிராமத்தில் உள்ள வளங்களை அதிக அளவில் உபயோகப்படுத்துகிறோம். சாதாரணமாக கால்நடைகளுக்காகத் தரப்படும் கடனுதவியைத் தவிர பெட்டிக் கடை, மளிகைக் கடை, செங்கல் சூளை, உரக்கடை, சைக்கிள் ரிப்பேர் கடை என பல கடனுதவி அளிக்கப்படுகிறது. இது எந்த அடிப்படையில் என்பதை விளக்குகிறேன்.

வாரம் ஒருநாள் கூடும் குழுக்கள் ஐந்து முதல் ஐம்பது வரை தங்கள் கையில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு, கூட்டாக சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்கிறார்கள். மூன்று மாதங்கள் தொடர்ந்து கட்டி வந்தால், அவர்கள் சேமிப்புத் தொகையைப் போல ஐந்து மடங்குத் தொகை, அறக்கட்டளை மூலம் அவர்களின் கூட்டு வங்கிக் கணக்கிற்கு மாற்றப்பட்டு, கடனுதவி தேவைப்படும் பெண்மணிக்கு அளிக்கப்படுகிறது."

**கே : பல இடங்களில் கொடுத்த கடனை வாங்க காலுக்கு எண்ணெய் போட்டுக் கொண்டு அலையும் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் இருக்கும் பொழுது, கிராமப் பெண்களுக்கு எதை நம்பி பணத்தைக் கொடுக்கிறீர்கள்?**

**வங்கி அதிகாரி** : "Micro - Finance என்கிற திட்டத்தை சமீப காலமாக எங்கள் வங்கி அமுல்படுத்தி வருகிறது. அதாவது மிகச் சிறிய முதலீட்டிற்குக் கூட கடனுதவி என்பது பொருள். கிராம மக்கள் தங்கள் தேவைக்கு வெளியிடங்களில் அதிக வட்டிக்குக் கடன் வாங்குவதால் திருப்பிக் கொடுக்க முடியாத அளவில் வட்டியே ஏறி விடுகிறது. இத் திட்டத்தின் மூலம் ஏழை கிராம மக்கள் கூட எங்கள் மூலம் கடனுதவி பெற்று முன்னேறி வருகிறார்கள்.

கரும் பலகைக்கு வர்ணம் அடிப்பது

• மாநாட்டில் கலந்து கொண்ட பெண்கள்






முதல் மகளிர் கூட்டுறவு பால் பண்ணை அமைப்பதிலிருந்து, சமுதாயக் கூடம் கட்டுவதிலிருந்து நூலக வசதி, போர்வெல் ரிப்பேர், கழிவுநீர் தங்கும் இடத்தில் உறிஞ்சு குழி அமைப்பதிலிருந்து பல வேலைகளுக்குப் பெண்கள் தாங்களே கடனுதவி பெறுவதோடு அல்லாமல், முன்னின்றும் நடத்தி வருகிறார்கள்.

பெண்களின் சேமிப்புக் கணக்கை விட ஐந்து மடங்கு தொகை கடனாகத் தரப்படுவதால், எல்லாப் பெண்களும் சேமிப்புத் தொகையை அதிகரிக்க அதிக அளவில் ஆர்வம் காட்டுகிறார்கள். குடும்பக் கடன் முதல் உற்பத்திக் கடன் வரை கடனுதவி பெறும் பெண்கள், வாராந்திரத் தவணை முறையில் அதிகமாக ஒரு வருட காலத்திற்குள் திருப்பி அடைத்து விடுகின்றனர். பெண்கள் தங்கள் கடனை ஒழுங்காக திருப்புவதால், எந்தவித பிரச்னையும் இதிலில்லை.

குறிப்பிட்ட பெண் கடனை திருப்பித் தர தாமதமானால் கூட அப் பெண்மணி சார்ந்த குழு, தங்களுக்கு மொத்தமாக கெட்ட பெயர் வந்து விடுமோ, மேற்கொண்டு சலுகைகள் பெற முடியாதோ என்கிற பயத்தில் எல்லோரும் நச்சரித்து பணத்தைக் கட்ட வைத்து விடுகிறார்கள்."

இதைக் கூறிய சமயம் திருமதி மீரா வேணுகோபால் கூறியது நூற்றுக்கு நூறு சரியாகத்தான் பட்டது.

"சிலர் படித்திருந்தாலும் வங்கிகளுக்குச் சென்று கையாளும் முறையைப் பற்றி சிந்தித்து பின்வாங்குகிறார்கள். எதற்காக பயப்பட வேண்டும்? தெரியாததை தெளிவிக்க வங்கியிலேயே உதவி செய்வார்கள். தன்னம்பிக்கை இருந்தால் எத்தனையோ விஷயங்களைச் சாதிக்கலாம்" என்றார்.

தன்னம்பிக்கை இருந்தால் சாராய விற்பனையைக் கூட தடைசெய்ய முடியும் என்று கூறுகிறார்கள், திருமதி தமிழ்ராணியும், திருமதி உதயாவும்.

"நாங்கள் சித்திரம் புதூர் என்கிற கிராமத்தில் இருந்து வருகிறோம். அருகில் சிலோன் காலனி என்றொரு இடம். அங்கு சாராய விற்பனை உண்டு. ஒருநாள் ஒருவர் நன்கு குடித்து விட்டு, எங்கள் ஊர் பெண்மணியின் முகத்தில் பிளேடினால் கிழித்து விட்டார்.

எங்கள் கிராமப்பெண்கள் முதலில் ஆண்களை துணைக்கு அழைக்க, வர மறுத்தனர். எதற்குத் தெரியுமா? அந்தக் காலனியின் சாராய விற்பனையை ஒழிக்கத்தான். முதலில் முனிசிபல் கவுன்சிலரை சென்று பார்த்தோம். அவரும் தயங்கினார்.

நாங்கள் அதாவது பெண்கள் ஒன்று சேர்ந்து, அந்தக் காலனிக்குச் சென்று, சாராயக் கேன்களை கையில் எடுத்துக் கொண்டு, நேராக போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றோம். அங்கு சப்-இன்ஸ்பெக்டர் இல்லை என்று ஏதோ சாக்குபோக்குச் சொன்னார்கள். நாங்கள் விடவில்லை. நேராக ஒரு வண்டி பிடித்து எம்.எல்.ஏ. வீட்டிற்கே சென்று, தைரியமாக நடந்ததைக் கூறினோம். அவர் உடனே உதவிக்கு வந்தார். அவரின் உதவியோடு சிலோன் காலனியில் சாராய விற்பனையைத் தடைசெய்தோம்.

இப்பொழுது அங்கு சாராய வியாபாரம் சுத்தமாகக் கிடையாது. மனதில் உறுதி இருந்தால் பெண்கள் எதை வேண்டுமானாலும் சாதிக்கலாம்."

இது மட்டுமல்ல சித்திரம்புதூர் என்கிற கிராமத்தைச் சேர்ந்த பெண்கள் இன்னும் சாதித்திருக்கிறார்கள்.

"எங்கள் கிராமத்தில் மதிய உணவுக் கூடம் ஒழுக ஆரம்பித்து விட்டது. எவ்வளவோ சொல்லியும் யாரும் அதைச் சீர்செய்து தரவில்லை. நாங்கள் அறக்கட்டளையின் மூலம் செங்கல், சிமெண்ட், ஆர்.சி. ஷீட், கம்பிகள், பெயிண்ட் ஆகியவற்றைப் பெற்றுக் கொண்டோம்.

யாரையுமே எதிர்பார்க்காமல் நாங்களே கல் சுமந்து, மண் சுமந்து, கட்டட வேலையை முடித்தோம். கட்டட வேலைக்குத் தேவையான மண், கல் முதலியவற்றை நாங்களே அருகாமையில் கிடைத்த இடங்களிலிருந்து கொண்டு வந்தோம். எங்கள் உழைப்பினால் ரூ. 20,000 மதிப்புள்ள மதிய உணவுக் கூடத்தை நாற்பத்தி இரண்டு பெண்கள் முன்னின்று, இருபத்து இரண்டு நாட்களில் கட்டி முடித்தோம்!

பெண்கள் நினைத்தால் முடியாதது என்ன இருக்கிறது? சொல்லுங்கள்."

**பிரபல தொழிலதிபர்**
**திருமதி. உஷா கிருஷ்ணா**

"நான் காலேஜில் சயன்ஸ் பாடம் எடுத்துப் படித்தேன். இன்ஜினீயரிங் கம்பெனி ஒன்று வைக்க ரொம்ப ஆசைப்பட்டேன். கேட்டவர்கள் சிரித்தார்கள்.

"நீயோ பெண். என்ன செய்யப் போகிறாய்?" என்று விமர்சித்தார்கள்.

முதலில் கொஞ்சம் யோசனை செய்தேன். தயாரித்து விடலாம். ஆனால் மார்க்கெட்டிங் ரொம்ப முக்கியமானதல்லவா? இருந்தாலும் தைரியமாக சைக்கிள் 'ஸ்போக்ஸ்' உற்பத்தியைத் தொடங்கினேன். 'லோன்' விஷயங்களை அறிந்து கொண்டேன். சாதாரண இரண்டு சக்கர சைக்கிளுக்கு ஆரம்பித்த என் 'ஸ்போக்ஸ்' உற்பத்தி, இன்று இந்தியா முழுவதும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு உண்டான உற்பத்தி என்பதாக பெருகி இருக்கிறது.

"ஆரம்பத்தில் நம்மால் அதுவும் பெண்ணால் என்ன முடியும் என்று பின்வாங்கியிருந்தேனானால் என்ன சாதித்திருக்க முடியும் சொல்லுங்கள்" என்கிறார்.

மாலா என்பவர், "கிராமத்தில்






வயல்வெளிதான் அதிகம். ஒரு பம்ப் செட் தேவையாக இருந்தது. நான் கடனுதவி பெற்று பம்ப் செட் மூலம் நீர் பாய்ச்சுகிறேன். வேலை குறைவு. விளைச்சல் அதிகம். லாபமும் அதிகம் கிடைக்கிறது'' என்கிறார்.

மளிகைக் கடை வைத்திருந்த கஸ்தூரி கூறுகிறார் :

"நான் முதலில் மளிகைக் கடைதான் வைத்திருந்தேன். இன்னும் முன்னேற வேண்டும் என்கிற எண்ணத்தில் கடனுதவி பெற்று செங்கல் சூளை இப்போது வைத்திருக்கிறேன். பெண்கள் பெயரில் கடனுதவி பெற்று ஆண்கள் நடத்துகிறார்கள் என்று நினைத்து விடாதீர்கள். பெண்களேதான் நடத்துகிறோம். வாயும், கையும், சுத்தமாக இருக்கிறது. எதற்கு, யாருக்குப் பயப்பட வேண்டும்?''

ஆணுக்கென்று ஒரு வேலை, பெண்ணுக்கு என்று ஒரு வேலை என்கிற பாகுபாடு இல்லாமல் எங்கோ ஒரு கிராமத்தில் இருந்து கொண்டு, இருப்பதை (வளத்தை) வைத்துக் கொண்டு எப்படி முன்னேறுவது என்கிற திட்டவட்டமான தெளிவான சிந்தனையுடன் பல சாதனைகளை நடத்திக் காட்டுகிறார்கள் இவர்கள்.

தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுக் கழகத்தின் எக்ஸிகியூடிவ் டைரக்டர் கே. ராஜாராமன் கூறுகிறார் :

"நம் நாட்டின் ஜனத்தொகையில் 50% பெண்கள் இருக்கிறார்கள். சுதந்திரத்திற்குப் பிறகு பெண்கள் எவ்வளவு தூரம் முன்னேற்றத்தில் பங்கு எடுத்திருக்கிறார்கள் என்றால் கொஞ்சம் வருத்தப்படத்தான் வேண்டும்.

மூன்று நோக்கங்களுடன் பெண்கள் செயல்பட வேண்டும்.

1. பொருளாதார முன்னேற்றம், 2. சமுதாய மேம்பாடு, 3. பெண் திறமை வளர்ச்சி. பெண் முதலில் யாரையும் சார்ந்திராமல் சொந்தக் காலில் நிற்க முயற்சி செய்ய வேண்டும். பெண் திறமையை வளர்க்க, பெண்களை ஒற்றுமைப்படுத்த, சுய ஆற்றலை வெளிப்படுத்த, பெண்களின் இணைந்த செயல்பாடு நிச்சயம் தேவை.

பெண்களின் வளர்ச்சிக்காக அரசு உதவி செய்ய எப்பொழுதும் காத்திருக்கிறது. ஆகையினால் எந்தவித தயக்கமும் இன்றி, 'கிராமத்தில் இருப்பவர்கள் என்ன செய்ய இயலும்' என்கிற அவநம்பிக்கையை உதறி பஞ்சாயத்தில் கலந்து பேசி, தேவைகளை பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். வெற்றி பெண்களாகிய உங்கள் கையில்தான் இருக்கிறது'' என்றார்.

அங்கு குழுமியிருந்த ஆயிரக்கணக்கான முகங்களிலும் 'சாதித்தோம் சாதிக்கப் போகிறோம்' என்கிற திடமான, தீர்க்கமான ஒரு தெளிவு இருக்கத்தான் செய்கிறது. அவர்கள் படிப்படியாக தங்கள் வெற்றிக் கொடியை நாட்டித்தான் வருகிறார்கள்.

**— மாலதி சந்திரசேகரன்**

---



**பெரும்பாலும் நாம் கொத்துமல்லி வாங்கும் போது இலைகளை மட்டும் எடுத்துக் கொண்டு, சத்து நிறைந்த காம்புகளை குப்பைத் தொட்டியில் வீசி விடுகிறோம். காம்புகளை மட்டும் எடுத்து ஒரு டப்பாவில் போட்டு மூடி ப்ரிஜ்ஜில் வைத்து விடுங்கள். 2 (அ) மூன்று நாட்களானதும் சேகரித்த காம்புகளை நன்கு நீரில் அலம்பி, மிக்ஸியில் போட்டு அரை தம்ளர் ஜலம் விட்டு நன்கு அரைத்து, வடிகட்டி ஜூஸ் எடுக்கவும். இந்த கொத்துமல்லி ஜூஸை நாம் வைக்கும் சாம்பார் (அ) ரசம் சூப்பில் கலந்து விடுங்கள். பிரமாதமாக இருக்கும். கொத்துமல்லி வாங்காமலேயே ஒருநாள் ஓட்டி விடலாம்.**

**– விஜயராணி**

# ஸ்ரீ டிராவல்ஸ்

12/A, ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 600 099.
Phone : 5378620/5584866 Tele Fax : 5584866 E-Mail : sritrave@md3.vsnl.net.in

வயதான தம்பதியருக்கும் அரிய வாய்ப்பு! (தனி நபர்களும் வரலாம்!!)
ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் அருமையான வடஇந்திய சுற்றுலாக்கள்

---

**காலத்தால் அழியாத அஜந்தா – எல்லோரா ஓவியங்கள்! பக்திப்பரவசமூட்டும் ஷீரடி சாய்பாபா ஆலயம் மற்றும் பம்பாய், கோவாவின் இயற்கைக் காட்சிகள்!!**

புறப்படும் தேதி – 15-09-99

சென்னை – அஜந்தா – எல்லோரா – ஷீரடி – பம்பாய் – கோவா – பெங்களூர் – சென்னை
பயணத் தொகை : ரூ. 3500/- பயண நாட்கள் : 8 நாட்கள்

---

புறப்படும் தேதி – 08-10-99

**மேலைநாடோ! என வியக்கவைக்கும் சிக்கிம் மற்றும் நேபாள சுற்றுலா!!**
சென்னை – கல்கத்தா – கேங்க்டாக் – டார்ஜிலிங் – காத்மாண்டு – வாரணாசி – அலகாபாத் – சென்னை
பயணத் தொகை : ரூ. 6600/- + ரூ. 3000/- பயண நாட்கள் : 13 நாட்கள்
(மூன்று நட்சத்திர ஹோட்டல்களில் தங்கும் வசதிகள், விராட்நகர் காத்மாண்டு வாரணாசி விமானப்பயணம் உட்பட)

---

## தீபாவளி கங்கா ஸ்நானம்

புறப்படும் தேதி – 31-10-99

சென்னை – பூரி – கொனார்க் – கல்கத்தா – கயா – வாரணாசி – அலகாபாத் – ஆக்ரா – டில்லி – சென்னை
பயணத் தொகை : ரூ. 4900/- பயண நாட்கள் – 12 நாட்கள்

---

- அனைத்து இடங்களிலும் மிகவும் தரமான ஹோட்டல்களில் பிரத்தியேக தங்கும் அறைகள்
- அருமையான தென்னிந்திய சைவ உணவு
- இரயில் கட்டணம் மற்றும் இடங்களை சுற்றிப் பார்க்க தரமான பஸ்வசதி
- சுற்றுலா முழுவதும் வீடியோ கவரேஜ் கொண்ட கேசட் கிடைக்கும்
- நட்சத்திர ஹோட்டலில் விருந்தும் உண்டு

---



ஸ்ரீ டிராவல்ஸ் அறிமுகப்படுத்தும்

## சென்னை – திருமலை தினசரி பேருந்து வசதி

(A/C வசதி செய்யப்பட்டது)

# பாலாஜி தரிசனம்



நபர் ஒன்றுக்கு ரூ. 650/- சிறுவர்களுக்கு ரூ. 450/- (10 வயதுக்கு உட்பட்டவர்களுக்கு)

**PICK UP & DROP FACILITIES (City Limits only)**

டிக்கெட்டுகளை ஏக்நாத் பில்டிங், 194A அண்ணாசாலை, முதல்மாடி
எமது கிளை அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம். Pager : 9632-701579



இத்துடன் மற்ற வசதிகள்:

காலை சிற்றுண்டி, மதிய உணவு, மாலை சிற்றுண்டி மற்றும் இரவு உணவு
சிறப்பு சேவைகள் மூலம் துரித தரிசனம் மற்றும் நபர் ஒன்றுக்கு லட்டு தரப்படும்.
மினரல் வாட்டர், செய்தித்தாள் மற்றும் வார இதழ்கள், வீடியோ, ஆடியோ – ஸ்டீரியோ வசதிகள்
மொட்டையடிக்க – காது குத்த சிறப்பு ஏற்பாடுகள், திருமலையில் சிறப்பு உதவியாளர்
ஓய்வு எடுக்கவும், குளிக்கவும் சிறந்த வசதி.



## முடிப் பிரச்சனைகளுக்கு ஒரு முழுமையான தீர்வு

''பெண்களுக்கு மட்டுமில்லாமல் ஆண்களுக்கும் முடி உதிர்தல் என்பது இன்று ஒரு ஓயாத பிரச்னையாக உள்ளது. இதற்கு என்ன காரணம்? இதற்கு யுனானி மூலிகை முறையில் பலன் தரும் சிகிச்சைகள் உண்டா'' என்று யுனானி வைத்திய நிபுணர் டாக்டர் அமீன் அவர்களை **S.K. மூலிகை மருத்துவ மையத்தில் (136, ஜானி ஜான்கான் சாலை, ஜாம்பஜார் காவல் நிலையம் எதிரில்)** சந்தித்து கேட்டோம்.

''தலையில் ஏற்படும் அதிகமான வரட்சி, அதிகமான எண்ணெய்பசை, பொடுகு, பேன் போன்ற தொல்லைகள் இவைதான் முடி உதிர்வுக்கு மிக முக்கிய காரணங்கள். இயல்பாகவே சிலருக்கு தலைப் பகுதி வரட்சியாக இருக்கும். தலை Bushyயாக இருக்க வேண்டுமென்று விடுவதாலும் தலை முடிக்கு 'டை' போடுவதாலும் கூட தலைப் பகுதியில் வரட்சி அதிக மாகும். உடலில் உஷ்ணம் அதிகமாவதாலும் இது போன்ற வரட்சி கூடும். சைனசிடிஸ் நோயும் வரட்சிக்கு ஒரு காரணம். அதிகமாக எண்ணெய் தடவுவதால் முடி அதிகமாக வளரும் என்பது தவறான ஒரு கருத்து. இந்த அதிகமான எண்ணெய்பசை மற்றும் டென்ஷன் இவைகளால் தலையில் ஓயாத பொடுகுத் தொல்லை. சிலருக்கு தலையில் உள்ள அழுக்கினால் பேன்கள் வளரும். ஆனால் பொதுவாக பேன்கள் தொற்றிக் கொள்வதுதான் அதிகம்.

யுனானி மூலிகை முறையில் தலையில் உள்ள பிரச்னைகளை மட்டும் மேலெழுந்தவாரியாகப் பார்த்து எண்ணெய்களை சிபாரிசு செய்வதில்லை. நாடி பார்த்து அந்த பிரச்னைக்கு மூல காரணத்தை ஆராய்ந்து அதற்குண்டான சிகிச்சைகள் தருகிறோம். எளிய மூலிகை மருந்துகள் இவைகளை வேகமாக – ஆனால் முழுமையாகத் தீர்க்கின்றன'' என்கிறார் **டாக்டர் அமீன்.**

''தவிர பருக்கள் தொல்லை, கண்களைச் சுற்றிய கருவளையம், மிகவும் அதிகமான உடல் எடை, போன்றவைகளுடன் லிவர் பாதிப்புகள் தீராத மூட்டு வலிகள், சைனசிடிஸ் போன்றவைகளுக்கும் எங்கள் S.K. மூலிகை மருத்துவமனையில் மருந்துகள் உண்டு'' என்கிறார். ''அழகும் ஆரோக்கியமும் பாதுகாக்கும் மூலிகை மருந்துகள் மற்றும் சிகிச்சைகள் பற்றி அறிய 8583231, 8589281 ஆகிய எண்களைத் தொடர்பு கொள்ளலாம்.

**டாக்டர் அமீன்**
**S.K. மூலிகை மருத்துவ மையம்**
**136, ஜானிஜான்கான் சாலை,**
**ஜாம்பஜார் காவல் நிலையம்**
**எதிரில், இராயப்பேட்டை,**
**சென்னை - 600 014.**

## The Visible Difference (Regd.) School of Cosmetalogy & Beauty Clinic

**No. 3, Balajee Avenue 1st Street, (Opp. to Vidhyodhaya School), T. Nagar, Chennai - 600 017**



''தற்போது மக்களிடையே மிகவும் வரவேற்பு பெறுபவை ''அரோமா ஆயில்கள்''தான். இவைகளில் நூற்றுக்கணக்கான வகைகள் உண்டு. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு (மருத்துவ) குணங்கள் உண்டு. புத்துணர்ச்சியும், நல்ல தூக்கமும் தரவல்லது 'லேவண்டர் ஆயில்'. புத்துணர்ச்சியும், காதல் உணர்வையும் தரும் குணம் 'ரோஸ் ஆயிலுக்கு' உண்டு. உறக்கத்தைத் தூண்டும் தன்மை கொண்டது 'ஜாஸ்மின் ஆயில்'. – இப்படி சொல்லிக் கொண்டே போகலாம். அரோமா ஃபேஷியல் செய்யும் அறையில் அரோமா மெழுகுவர்த்திகளை ஏற்றி வைத்து செய்தால் கிடைக்கும் நிறைவும், சுகமும் அலாதிதான்'' – என்கிறார் அழகுக்கலை நிபுணர் **வசுந்தரா.**

இரத்த ஓட்டத்தை சீர்செய்து சருமத்தின் தொய்வை நேராக்கும் ஆக்ஸிஜன் ஃபேஷியல், சருமத்தில் சேரும் அசுத்தங்களைக் களைந்து மென்மைக்கும், 'சார்கோல் ஃபேஷியல் மற்றும் காந்த ஃபேஷியல், அக்குபிரஷர் ஃபேஷியல், முத்து - பவள ஃபேஷியல் எனப் பலவும் 'விசிபிலில்' உண்டு. சமீபத்தில் இவர் அமெரிக்கா சென்றபோது பெற்ற பயிற்சிகள் அனைத்தும் 'விசிபில் ஸ்கூல் ஆஃப் காஸ்மடாலஜி'யில் பயிலும் மாணவிகளுக்கு கற்றுத் தரப்படுகிறது. அழகுக்கலைப் பயிற்சி தபால் மூலம் உண்டு.

விவரங்களுக்குத் தொடர்பு கொள்க.

**தி விசிபில் டிஃப்பரென்ஸ்**
**(ரெஜிஸ்டர்டு) ஸ்கூல் ஆஃப் காஸ்மடாலஜி**
**& ப்யூட்டி கிளினிக்,**
**3, பாலாஜி அவின்யு முதல் தெரு,**
**வித்யோதயா பள்ளியின் எதிரில், தி. நகர்,**
**சென்னை - 600 017. போன் : 8254079**



## ஜோதி தரிசனம்

ஆன்மீகக் கட்டுரைகளின் தொகுப்பு. நற் சிந்தனைக்கும், இறை வழிபாட்டிற்கும் ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளது ஒவ்வொரு கட்டுரையும். ஆசிரியர் தென்னம்பட்டு ஏகாம்பரம்.

பக் - 144

விலை ரூ. 27.00

## வெற்றி தரும் தேவி உபாசனை

வாராஹி தேவி, துர்கா தேவி, ஷோடச லக்ஷ்மி இப்படி ஒவ்வொரு தேவியின் சக்தியும், மகிமையும், சக்தி உபாசனையால் ஏற்படும் பலன்களையும், நன்மைகளையும் விவரிக்கிறது இந்நூல். ஆசிரியர் ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள்.

பக் - 124 விலை ரூ. 22.00

*(இரண்டும்- கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை - 17)*

## சிறகுகள்

கவிதைத் தொகுப்பு. மனதின் எண்ணக் குவியல்களை தன் அழகான கவிதை வரிகளில் வெளிப்படுத்தியுள்ளார் ஆசிரியர் பொன்ஸ்.

பக் - 120 விலை ரூ. 23.00

## எழுதப்படாத தீர்ப்பு

நெஞ்சை உருக்கும் நிகழ்ச்சிகளைக் கொண்டு ஒவ்வொரு சிறுகதையும் கற்பனை வளத்துடன் எளிய நடையில் படைக்கப்பட்டுள்ளது இந்நூலில். ஆசிரியர் ஜெயந்தி ரமேஷ்.

பக் - 160 விலை ரூ. 30.00

*(இரண்டும் மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தியாகராய நகர், சென்னை - 600 017)*

# புக் ஷெல்ஃப்

## உடலும் உள்ளமும் நலம் பெற யோகா

உடலுக்கும் மனதிற்கும் நன்மை தரும் பலவித ஆசனங்களின் செயல்முறைகள் விளக்கப் படத்துடன் தரப்பட்டுள்ளது. எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டிய பயனுள்ள செய்திகள். ஆசிரியர் ஆர். கிருஷ்ணன்.

பக் - 52 விலை ரூ. 20.00

*(ஆர். கிருஷ்ணன், நெ. 6, 5வது மெயின் ரோடு, நியூ காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44)*

## குடும்ப சமையல்

மூன்றாம் பாகமாக வெளிவந்துள்ள இதில் பலவித புதிய சமையல் வகைகளை எளிய முறையில் தொகுத்து வழங்கியுள்ளார் ஆசிரியர் பானுமதி நரசிம்மன்.

பக் - 120 விலை ரூ. 25.00

## சூரிய வழிபாடு

சூரிய வழிபாட்டின் முறைகளும், ஸ்லோகங்களும் தமிழில் விளக்க உரையுடன். ஆசிரியர் ஸ்வாமி அபயானந்தஜிதாஸ். கையடக்கப் பதிப்பு.

பக் - 119 விலை ரூ. 10.00

*(இரண்டும் இலக்குமி நிலையம், 53, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 600 014)*

## ஸ்ரீமத் பகவத் கீதை

கீதை சொல்லும் கருத்துக்களை எளிய விளக்கமுடன் புரிந்து கொள்ளும் வகையில் தொகுத்து வழங்கியுள்ளார் ஆசிரியர் அ. சந்திர மோகன்.

பக் - 138 விலை ரூ. 35.00

*(குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001)*

## அருள் தரும் துர்க்கை துதிகள்

ஸ்தோத்திர தொகுப்பு. வெள்ளி, செவ்வாய் வார வழிப்பாட்டுப் பாடல்கள் மற்றும் அபிராமி அந்தாதி அடங்கியது. தொகுத் தளிப்பவர் கற்பகவல்லி சண்முகம்.

பக் - 86 விலை ரூ. 25.00

*(கற்பகம் பதிப்பகம், HC 706, அண்ணாநகர், திருச்சி - 620 026)*

## 'Treat Yourself' Methods for Laymen

மலர்களின் மருத்துவ குணங்கள்

மற்றும் வியாதிகள் மட்டுமல்லாமல் வாழ்க்கையில் ஏற் படும் நடைமுறைப் பிரச்னைகளுக்கு மலர் களின் மூலம் தீர்வு காண்பது எப்படி என்று விளக்கப்பட்டுள்ளது இந்நூலில். ஆசிரியர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

பக் – 142 விலை ரூ. 50.00

***(டாக்டர் கிருஷ்ணமூர்த்தி, 28, கிருபா சங்கரி தெரு, சென்னை - 600 033)***

## சுவாமி விவேகானந்தர் பொன் மொழிகள்

விவேகானந்தரின் அற்புதமான அறிவுரை களை மிக எளிய நடையில் அனைவரும் படித் துப் பயன் பெறும் விதத்தில் தொகுத்தளித்துள் ளார் எஸ். இரகுநாதன்.

பக் – 112 விலை ரூ. 23.00

***(நாகலக்ஷ்மி பப்ளிகேஷன்ஸ், 8/1, கங்கை யம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014)***

## மனக் கோயில்

இரண்டு குறு நாவல்கள். இயற்கை வளம் நிரம்பிய ஒரு கிராமத்தில் நடக்கும் நிகழ்வு களை சரித்திரப் பின்னணியில் சொல்லும் ஒரு நாவலும், குடும்பத்துச் சூழ்நிலையில் பின்னப் பட்ட மற்றொரு நாவலும் பாலகுமாரனின் பண்பட்ட எழுத்துத் திறமையை மீண்டும் நிரூபிக்கிறது.

பக் – 220 விலை ரூ. 45.00

## மெரினா

சுஜாதாவின் புகழ்பெற்ற பாத்திரப் படைப்பு 'கணேஷ், வசந்'தின் விறுவிறுப்பான துப்பறியும் கதை, படித்து முடித்த பிறகே கீழே வைக்கச் சொல்லும் நாவல்.

பக் – 112 விலை ரூ. 35.00

***(இரண்டும் விசா பப்ளிகேஷன்ஸ், 55, வெங்கட்நாராயணா சாலை, தி. நகர், சென்னை - 600 017)***

## எண்களும் அதிர்ஷ்ட யோக பலன்களும்

ஒவ்வொருவரின் அதிர்ஷ்ட எண்களையும் அவற்றின் யோக பலன்களையும் தெளிவாக எழுதியுள்ளார் ஆசிரியர் முருகானந்தா.

பக் – 128 விலை ரூ. 22.00

***(கார்த்திகா பப்ளிகேஷன்ஸ், 18, தெற்கு பெருமாள் கோயில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 600 026)***

## ஆரோக்கியம் தரும் உணவு/உடற் பயிற்சி முறைகள்

உடலுக்கு ஆரோக்கியம், சுறுசுறுப்பு, புத் துணர்ச்சியை அளிக்கும் உணவு, மற்றும் உடற் பயிற்சி முறைகள் எளிய நடையில் தொகுக்கப் பட்டுள்ளன இந்நூலில். அனைவரும் படித்துப் பயன் பெறலாம். ஆசிரியர் சி.எஸ். தேவ்நாத்.

பக் – 168 விலை ரூ. 32.00

***(நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தியாகராய நகர், சென்னை - 600 017)***

## கல்கி முதல் அகிலன் வரை

எழுத்துலகில் நீங்கா புகழ்பெற்ற எழுத் தாளர்களின் நாவல்களின் ஆய்வு, சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளது இந்நூலில். ஆசிரியர் பூவை எஸ். ஆறுமுகம்.

பக் – 163 விலை ரூ. 30.00

***(திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித் தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 154, டி.டி.கே. சாலை, சென்னை - 600 018)***

## கைலாஸ – மானஸரோவர் யாத்திரை

சென்ற வருடம் கைலாஸ – மானஸரோவர் யாத்திரைக்கு ஸ்வாமி கமலாத்மானந்தா (ஸ்ரீ இராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர்) தலைமையில் ஒரு குழு சென்றது. அவர்கள் சென்றபோது கூடவே வீடியோ எடுத்துச் சென்று அற்புதமாக படம் பிடித்து வந்த காட்சிகளை 'வீடியோ காஸட்'டாக வெளியிட்டுள்ளார்கள்.

சென்னையில் புறப்பட்டதில் இருந்து காசி, நேபாளம், சீனா, திபெத் வழியாக அவர்களின் பயணம் எவ்வளவு கடுமையாக இருந்தது என உணர முடிகிறது. சில இடங்களில் - 50 டிகிரி குளிர் இருந்ததாகக் கூறும் போது பார்க்கும் நமக்குத் திகிலாக இருக்கிறது.

அத்தனை சிரமமும் கைலாஸமலையின் முதல் தரிசனம் கிடைக்கும்போது மறந்து விடுகிறது. மானஸரோவர் ஏரியும், கைலாஸ மலையின் பல்வேறு தோற்றங்களும் பார்க்கும்போது மெய்சிலிர்க்கிறது.

ஸ்வாமி கமலாத்மானந்தா கைலை மலையின் சிறப்பினை வேத, புராண, தேவாரங்களில் இருந்தெல்லாம் கூறுகிறார். இந்த யாத்திரை எத்தனை பவித்ரமானது என விளக்குகிறார். அவருடைய பின்னணிக் குரலும், லிங்காஷ்டகம் போன்ற பல பக்திப் பாடல்களும் பின்னணியில் ஒலிக்க இந்த வீடியோ கேஸட்டை பார்ப்பதே ஓர் அனுபவம்.

அடக்க விலைக்கும் குறைவாகவே ரூ. 300/- என நிர்ணயித்து, முதன் முதலாக மானஸரோவர் – கைலாஸ யாத்திரை பொதுமக்கள் அனைவருக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கில் தயாரித்திருப்பதாக ஸ்வாமிஜி கூறுகிறார்.




**காபி, டிபன், சைவ உணவு, தங்குமிடம் உள்பட சுற்றுலாக்கள்**

* **KASI-HARIDWAR** டெல்லி – ஆக்ரா – ஹரித்வார் – ரிஷிகேஷ் – திரிவேணி – காசி – கல்கத்தா – பூரி. 17.9.99 முதல் 12 நாட்கள் 3 tier ரயில் சுற்றுலா ரூ. 3690. இத்துடன் (JAIPUR - AMRITSAR) ஜெய்ப்பூர் – அமிர்தசரஸ் – மதுரா – கயா – புவனேஸ்வர் பார்த்து வர, (மொத்தம் 15 நாட்கள்) ரூ. 4590.
* **NAVAJOTHIRLINGAM -** பஞ்ச துவாரகா – நவஜோதிர் லிங்கம் – பம்பாய் – பண்டரிபுரம் – நாசிக் – ஷிரடி 17.9.99 முதல் 20 நாட்கள் 3 tier ரயில் & டிலக்ஸ் பஸ் சுற்றுலா ரூ. 6500.
* **SIMLA - VAISHNODEVI** டெல்லி – குருக்ஷேத்ரா – அமிர்தசரஸ் – (நவசக்திகள்) வைஷ்ணவி தேவி – ஜுவாலாமுகி – பக்ராநங்கல் – சண்டிகார் – சிம்லா 9.10.99 முதல் 18 நாட்கள் 3 tier ரயில் & டிலக்ஸ் பஸ் சுற்றுலா ரூ. 5990.
* **DEEPAVALI GANGA SNANAM** பூரி – கயா – புத்தகயா – காசி – திரிவேணி 4.11.99 முதல் 8 நாட்கள் 3 tier ரயில் சுற்றுலா ரூ. 2590.
* **ANDAMAN ISLAND** கார்பின்கோ பீச் – ரோஸ் தீவு – ஜாலிபாய் தீவு – பவளத்தீவு – அந்தமான் 15.10.99 முதல் 10 நாட்கள் II Cabin Class A/C கப்பல் சுற்றுலா ரூ. 9990.

# குமரன் டிராவல்ஸ்

20, வடக்கு சித்திரை வீதி, மதுரை - 625 001. போன் : 621519 * 623863

*கிளை : P.V.T. ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், 22, ரெங்கநாதன் தெரு, (முருகன் டெக்ஸ்டைல்ஸ் எதிரில்) தி. நகர், சென்னை - 600 017. போன் : 4323105 & 4331298*



# RAMACHANDRA SAREES

(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

No.37-B Arya Gowder Road, Postal Colony 3rd corner
Bus Stop, West Mambalam, Chennai -33. Ph : 489 6532

Bus Route : 12G, 11G, 11H, 49A, 5T, 49, 9A

## 1.9.99 முதல் 6.9.99 வரை
## தள்ளுபடி விற்பனை

என் மேல்நாட்டு மருமகள்கிட்டே
அன்பளிப்பா என்ன வேணும்னு
கேட்டேன்? அவ
**ராமசந்திரா சாரீஸ்தான்**
வேணும்னு சொல்லிட்டா



**NUMBER ONE QUALITY**

எங்களிடம்: வெங்கடகிரி, **Bathik**, பெங்கால் காட்டன், சின்னாளம் பட்டு, செட்டிநாடு புடவைகள், தேவேந்திரா சாரீஸ் கிடைக்கும்.

வழங்குவோர் : ராமசந்திரா சாரீஸ், 20-8 பழைய குயவர்பாளையம் ரோடு, மதுரை - 9. போன் : 737012

## சித்த மருத்துவ
## முறையில்
## பக்க விளைவுகளற்ற

# Franch
## Neutro Sliem




**உடல்**
**பருமனைக்**
குறைக்கிறது.

**ஊளைச்**
**சதையைக்**
கரைக்கிறது.

சித்த மருத்துவர்
**டாக்டர் ஜமுனாவின்**
சிறந்த தயாரிப்பு

*Marketed by :*

**SPS FRANCH CASTOR PRODUCT LIMITED**
255 / Z, Kilpauk Garden Road,
Chennai-600 010.
Phone : 6452878. Fax : 6444370

---

## உங்கள்
## கிரைண்டருக்கு
## சரியான கூட்டணி

# GRINDER CARE

**LOW VOLTAGE MOTOR**

**Now With**
**I.V.PLUS**



- கிரைண்டருக்கென்றே பிரத்தியேக வடிவமைப்பு
- டபிள் பால் பேரிங்குகள்
- நீடித்த உழைப்பு
- நிசப்தமான ஓட்டம்
- குறைந்த வோல்டேஜிலும் நிறைந்த அரவை
- தரத்துக்கு நற்சான்று ISI முத்திரை
- பவுடர் கோட்டிங் பெயிண்டிங்
- 3 ஆண்டு உத்தரவாதம்
- **I.V.Plus** இருப்பதால் மோட்டாருக்கு கூடுதல் பாதுகாப்பு

உங்கள் கிரைண்டர் மோட்டாரில் என்ன எதிர்பார்க்கிறீர்களோ, அதற்கும் மேலாகவே...



# அவசரத்தில் செய்த தவறு

• டாக்டர். ராஜ்குமார்



வாசலில் 'காலிங்பெல்' ஒலிப்பதைக் கேட்டு தூக்கி வாரிப் போட்டபடி எழுந்தாள் சுவர்ணா. 'பால்' போடும் பையனிடம் எத்தனை முறை சொன்னாலும், கேட்பதில்லை. மணியை அடித்து விட்டுத் தான் நகர்வான். பரபரப்புடன் தூங்கிக் கொண்ட நிலையில் கையை மேலே போட்டிருந்த குழந்தையை நகர்த்தி விட்டு எழுந்தாள். என்ன பரபரப்பு! குழந்தையிடம் கூடவா மென்மையாக நடந்து கொள்ளக் கூடாது?

சுவர்ணாதான் என்ன செய்வாள்? நான்கரை மணிக்கு எழுந்து வேகமாக காரியங்களை செய்தால்தான், ஒன்பது மணிக்கு அனைவரும் ஒழுங்காக, ஆபீஸ் செல்ல முடியும். பள்ளிக்குச் செல்லும் பிள்ளை, ஆபீஸ் போக வேண்டிய கணவன், மச்சினன், கல்லூரிக்குச் செல்ல வேண்டிய நாத்தனார், இவர்களைத் தவிர மிகவும் மடி ஆசாரம் பார்க்கும் மாமியார், பூஜையிலேயே பொழுதையும் கழித்து விடும் மாமனார், கைக் குழந்தை! அப்பப்பா! ஒரு ஜீவனை நம்பி எத்தனை மனிதர்கள்? இத்தனை வண்டிகளும் சீராக ஓட வேண்டுமானால் அச்சாணியாக விளங்கும் சுவர்ணா சீராக இயங்கித்தானே ஆக வேண்டும்?

எல்லாம் தெரிந்திருந்தாலும், சுவர்ணாவின் கணவன் சிவராமனுக்கு, அவளது பரபரப்பு பிடிக்கவில்லை. "நிதானமாக இரு சுவர்ணா! எதற்கு இத்தனை வேகம்? என்னால் இவ்வளவுதான் முடியும் என்று எடுத்துச் சொல். என் பெற்றோர்களுக்கு அவசரமாகச் செய்ய வேண்டிய அவசியமில்லை. என் தம்பியோ, தங்கையோ, வயதில் சிறியவர்கள் இல்லை. எல்லோரையும் திருப்திப்படுத்த முயன்று எல்லா வேலையும் இழுத்துப் போட்டுக் கொள்கிறாய். பிறகு ஒரே வேகம்! மிகவும் அதிகம் வேலை செய்யாதே!" என்று வருத்தப்பட்டான் சிவராமன்.

"யார்கிட்டே முடியாதுன்னு சொல்வது? எல்லோருக்கும் நான் செய்து பழகி விட்டது. இத்தனை நாளா சிரமம் தெரியவில்லை. மீரா பிறந்த பிறகு உடம்பில் படபடப்பு அதகிமாகி விட்டது."

"இல்லை சுவர்ணா. உனக்கு அவசரத்தில் என்ன செய்கிறாய் என்றே சில சமயம் தெரிவதில்லை. பெண்கள் நிதானமாக நடந்து கொண்டால் இன்னும் அதிகமாக சாதிக்கலாம்!"

"நீங்களும் உங்கள் நிதானமும்! பிடிங்க குழந்தையை. உங்களுடன் பேசிக் கொண்டிருந்தால் காரியமெல்லாம் யார் செய்யறது? ஞாபகமிருக்கில்லையா? இன்னிக்கு மத்தியானம் ஆபீஸில் லீவு சொல்லிடுங்க. உங்க தங்கையை பெண் பார்க்க வருகிறார்கள். எத்தனை வேலை இருக்கு?" என்று ஓடினாள் சுவர்ணா.

பாத்ரூமில் குளிக்கும் போது ஸ்வர்ணாவிற்கு உடலில் ஆங்காங்கே தடித்திருப்பது போலிருந்தது. உடல் எங்கும் ஒரே அரிப்பு. அதையெல்லாம் பார்க்க நேரமில்லை. அடுத்த காரியத்தைக் கவனித்தாள். பத்து மணியானதும், மாமனாரின் பூஜைக்கு எல்லா சாமான்களையும் எடுத்து வைத்துக் கொண்டிருந்த போது, உடல் அரிப்பு பொறுக்க முடியாமல் போயிற்று.

மத்தியானம் வருபவர்களுக்குப் பலகாரம் செய்ய மாமியார் ஏதேதோ சொல்ல, சுவர்ணாவிற்கு எதுவும் காதில் விழவில்லை. அரிப்பு, உடல்

முழுதும் பரவி தலையெல்லாம் பிய்த்துக் கொண்டிருந்தது. ஸ்வர்ணாவின் வேதனையை அறியாமல், மாமனாரும் மாமியாரும் மாற்றி மாற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தனர்.

"எந்தப் புடைவை கட்டிக்கட்டும் மன்னி?" என்று கேட்டுக் கொண்டு வந்த நாத்தனார் அனு. "என்னாச்சு மன்னி ஏன் அழறீங்க?" என்று கேட்டாள்.

"என்னன்னு தெரியலை அனு? தூங்கும் போது பூச்சி ஏதோ கடித்து விட்டது. ஒரே அரிப்பு. பொறுக்க முடியவில்லை. நிறைய வேலை இருக்கும் இன்றைக்குப் போய் இப்படி ஆகிவிட்டது" என்றாள் சுவர்ணா.

"என்னடிம்மா விஷயம்?" என்று கேட்டு வந்த மாமியாரிடம் சுவர்ணா கூறியதும், "காலையிலேயே சொல்லக் கூடாதோ? முருங்கை மரத்திலிருந்து வந்த கம்பளிப் பூச்சி கடித்து நான் அவஸ்தைப்பட்ட போது, நாட்டு மருந்து கடையில் வாங்கிக் குடித்த கஷாயம் சிகப்பு நிற பாட்டிலில் அப்பா அலமாரியில் இருக்கு. இரண்டு ஸ்பூன் சாப்பிட்டால் விஷம் பட்டுன்னு முறிஞ்சுடும்" என்றார்.

"சரி எடுத்து சாப்பிடறேம்மா" என்று நகர்வதற்குள்,

"பூஜையை நான் முடிச்சு நிறைய நாழியாச்சு. சாப்பாடு போடும்மா சுவர்ணா" என்றார் மாமனார். அதற்குள் பசியைப் பொறுக்காமல் அழுதான் குழந்தை மீரா.

"ஏன் சுவர்ணா, சாயந்திரம் கேசரி கிளற கலர் வாங்கி வந்தாயோ?" என்று மாமியார் கவலைப்பட்டார்.

இத்தனை இடைஞ்சல்களுக்கிடையே



பழைய/காய்ந்த பப்படத்தை வீணடிக்காமல், நீளவாக்கில் வெட்டி பொரித்து உப்பு, காரம் தூவி 'ஃப்ரெஞ்ச் ஃப்ரை' என்று புதிய பெயரிட்டால் தட்டு ஒரு நொடியில் காலியாகி விடும்!

— ஜெயா

முதலில் மருந்தை எடுத்துச் சாப்பிட வேண்டும் என்று வேகமாக மாமனாரின் அறைக்கு சென்ற சுவர்ணா அலமாரியைத் திறந்து நேராக இருந்த சிகப்பு நிற பாட்டிலைத் திறந்து, அவசரத்தில ஸ்பூன் கூட இல்லாமல் இரண்டு வாய் முழுங்கினாள். விழுங்கும் போதே தொண்டையை மருந்து அரிக்கத் தொடங்கியது.

பெண் பார்க்கும் படலம் முடிந்து பேச்சு வார்த்தைகள் முடிந்து அனைவரும் சென்றனர். அன்றைய வேலைகளை முடித்து படுக்க வந்த சுவர்ணா, சிவராமனிடம், "அரிப்பு அடங்கவேயில்லை. உடல் முழுதும் அரித்து புண்ணாகி விட்டது. நாளைக்கு முதலில் டாக்டரிடம் போகணும்" என்றாள்.

"அதைச் செய் முதலில். உனக்கு உன்னை கவனித்துக் கொள்ளத்தான் நேரமேயில்லை" என்றான் சிவராமன்.

அடுத்த நாள் காலை எழுந்தபோதே தொண்டை கட்டிக் கொண்டிருந்ததைப் போன்ற உணர்வு சுவர்ணாவுக்கு. அனைவருக்கும் காப்பி கொடுத்த பிறகு, காப்பி அருந்தியதும், அடுத்த நிமிடம் அத்தனையையும் வாந்தி எடுத்தாள். வெளியே வந்தது காப்பி மட்டுமல்ல, இரத்தமும் கூட. அதிர்ந்து போயினர் சுவர்ணாவும், சிவராமனும்.

"என்னாச்சு சுவர்ணா? உனக்கு என்ன செய்கிறது?"

"தெரியலையே! நேற்று அவர்ஜிக்கு மருந்து குடித்ததில் இருந்து தொண்டையை அரித்துக் கொண்டே இருந்தது. நேற்று நிறைய வேலை செய்த அசதி, இராத்திரி எதுவும் சாப்பிடத் தோன்றவில்லை. காலையில் காப்பி குடித்ததும் இரத்த வாந்தி வருகிறது" என்றாள் அழுது கொண்டே.

"என்ன மருந்து சாப்பிட்டாய்? காட்டு முதலில்!"

வேகமாக வந்து மாமனாரின் அலமாரியைத் திறந்து பாட்டிலைக் காட்ட, அதைத் திறந்து முகர்ந்து பார்த்த சிவராமன் அதிர்ந்தான்.

"என்ன காரியம் செய்திருக்கிறாய் சுவர்ணா? உன் அவசரத்தில் படபடப்பில் அப்பா கால் வலிக்கு மேலே தடவிக் கொள்ளும் மிகவும் ஸ்ட்ராங்கான வெளிப்பூச்சு மருந்தைக் குடித்திருக்கிறாயே? வா! உடனே டாக்டரிடம் போகலாம்!" என்று படபடப்புடன் சொன்னான்.

சுவர்ணாவைப் பரிசோதித்த டாக்டர் ஹரிஹரன் உடனடியாக சிகிச்சை அளித்தார். ஒரு வாரம் தீவிர சிகிச்சைப் பிரிவிலும், ஒரு வாரம் டாக்டரின் கவனிப்பிலும் இருந்து விட்டு வீடு திரும்பினாள் சுவர்ணா. ஒரு மாதம் ஓடிற்று. திரும்பத் தொண்டையை

அடைத்தது. உணவை விழுங்க முடியவில்லை. திரவ உணவுதான் உட்கொள்ள முடிந்தது. மருந்து கூடச் சாப்பிட முடியவில்லை. இந்நிலையில் சிகிச்சைக்கு திரும்ப டாக்டர். ஹரிஹரனிடம் சென்ற போது,

"நீங்கள் தவறான மருந்தை சாப்பிட்டதால் உங்கள் உணவுக்குழாய் அரிக்கப்பட்டு விட்டது. அதனால் இதற்கென சிகிச்சை செய்யும் டாக்டர். ஜே. எஸ். ராஜ்குமாருக்குக் கடிதம் எழுதித் தருகிறேன். அவரிடம் தொடர்ந்து சிகிச்சை பெறுவதுதான் சரி" என்றார்.

சுவர்ணாவைத் தீர கவனித்த பிறகு டாக்டர். ராஜ்குமார்,

"உங்களுக்கு எண்டோஸ்கோபி செய்து பார்த்ததில் உணவுக் குழாய் அரிக்கப்பட்டதால், உள்ளே சேர்ந்து கொண்டு இடைவெளி இல்லாமல் போய் விட்டது என்பது தெரிகிறது. இதற்கு ஸ்டான்லி மருத்துவமனையில் ஒரு தனிசிகிச்சை ஸ்ட்ரிக்சர் டைலேஷன் என்ற பெயரில் அளிக்கப்படுகிறது. இந்தச் சிகிச்சையில் உணவுக்குழாயின் உள்ளே மெல்லிய கம்பி போன்ற குழாயை விட்டு சேர்ந்து போயிருக்கும் உணவுக் குழாயை விரிவு படுத்துவார்கள். இதனை மாதம் ஒருமுறை செய்து கொள்ளுங்கள். நாளடைவில் சரியாகி விடும்'' என்றார்.

டாக்டர் கூறியபடி ஸ்டான்லி மருத்துவ மனையில் சிகிச்சைக்கு முதல் நாள் சென்று மருத்துவமனையில் சேர்ந்து கொண்டாள் சுவர்ணா. அடுத்த நாள் சிகிச்சை பத்து நிமிடங்களுக்கு அளிக்கப்பட்டது. மறுநாள் வீட்டுக்கு அனுப்பப்பட்டாள். சிகிச்சை செய்து கொண்ட பிறகு முதல் மூன்று நாட்கள் திரவ உணவை மட்டும் சாப்பிட்டாள். அதன் பிறகு ஒரு வாரம் சுமாராக வழக்கம் போல் சாப்பிட முடிந்தது. ஒரு வாரம் ஆனதும் உணவுக்குழாய் திரும்ப மெதுவாக மூடிக் கொண்டு விட்டது.

தொடர்ந்து இந்தச் சிகிச்சையை மனம் தளராமல் இரண்டு வருடம் எடுத்துக் கொண்டதில் பணம்தான் செலவாயிற்றே தவிர, உணவுக் குழாய் சீர் அடையவே இல்லை. நாளடைவில் மனம் தளர்ந்து போய் அந்தச் சிகிச்சையையும் நிறுத்தி விட்டாள்.

திரவ வடிவில் மட்டுமே உணவை உட்கொண்டு வீட்டு வேலையும் செய்து குழந்தைகளையும், மாமனார் மாமியாரையும் கவனித்ததில் சுவர்ணா எடை குறைந்து சரி பாதியாகி ஆள் அடையாளம் தெரியாத நிலைக்கு ஆகி விட்டாள். உடலில் தெம்பும், மனதில் தைரியமும் உற்சாகமும் போய் விட்டது. 'ஒரு நாளில் அவசரத்தில் செய்த காரியத்திற்கு, இப்படி ஆயுள் தண்டனையா?' என்று மனம் உடைந்து போனாள் சுவர்ணா.

இவ்வாறே கிட்டத்தட்ட ஐந்து ஆண்டுகள் ஓடி விட்டன. சுவர்ணாவின் நிலை கண்டு, சிவராமனும் மனம் நொந்து, வாழ்வில் ரசனையின்றிப் போனான். யார் வீட்டிற்கும், விசேஷங்களுக்கோ, பண்டிகைக்கோ செல்ல முடியவில்லை. இதற்கும் இடையே மிக நெருங்கிய உறவினர் வீட்டுத் திருமணத்திற்கு செல்ல நேர்ந்த போது, கையில் திரவ உணவை ப்ளாஸ்க்கில் எடுத்துக் கொண்டு சிவராமனுடன் சென்றாள் சுவர்ணா. தற்செயலாக அதே திருமணத்திற்கு வந்திருந்தார் டாக்டர். நாராயணன்.

திருமண நிகழ்ச்சியில் அனைவரும் சாப்பிடச் சென்ற சமயம் சுவர்ணா மட்டும் தனியாக ஒரு ப்ளாஸ்க்கில் இருந்து திரவ உணவை எடுத்துச் சாப்பிடுவதைப் பார்த்து டாக்டர். நாராயணனுக்கு வினோதமாக இருந்தது. சுவர்ணாவின் தோற்றம் அவரது பார்வைக்கு சரியாகப்படவில்லை.

"ஏம்மா! நீ சாப்பிடப் போகலியா?" என்று கேட்டார் டாக்டர் நாராயணன்.

''இல்லை மாமா! என்னால் சாப்பிட

ஒரு அலுவலக நோட்டீஸ் போர்டில் ஊழியர் ஒருவருக்காக மற்ற ஊழியரும் மேனேஜ்மெண்டும் 'ஹேப்பி பர்த்டே' எனற அந்த நபரின் பெயரைக் குறிப்பிட்டு மற்றும் இரண்டு மூன்று பெயர்கள் எழுதப்பட்டு 'ஹேப்பி வெட்டிங் டே' என்று எழுதப்பட்டு இருந்தது.




மற்ற இடங்களிலும் இதைப் பின்பற்றினால் ஊழியர்கள் உற்சாகமாக வேலை செய்வார்களே!

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



பூரிக்கு மாவு பிசையும் போது ஒரு டேபிள் ஸ்பூன் மிளகு, சீரகத் தூளும் சேர்த்துக் கொள்ளுங்கள். மாறுதலான ருசியும், மணமும் கிடைப்பதுடன் கூட, அஜீரணமும் தலைகாட்டாது!

– ஜெயா

முடியாது.''

"என்னம்மா சொல்கிறாய்? ஏன் சாப்பிட முடியாது? நானும் ஒரு டாக்டர்தான்மா! உனக்கு என்ன பிரச்னை? ஏன் சாப்பிட முடியாது?''

டாக்டர் நாராயணன் ஆதரவாகக் கேட்டதும் தான் செய்த தவறையும், அதனால் படும் அவஸ்தையையும் கண்ணில் நீருடன் எடுத்துக் கூறினாள் சுவர்ணா.

"நீ ஒரு தடவை வந்து என்னுடைய மாப்பிள்ளை டாக்டர். ஜே.எஸ். ராஜ் குமாரிடம் உன் உடம்பைக் காட்டும்மா'' என்றார் டாக்டர்.

"நான் ஏற்கெனவே அவரைப் போய்ப் பார்த்தேன் மாமா. ஆனால் அவர் கூறிய ஸ்ட்ரிக்சர் டைலேஷன் சிகிச்சையை செய்து கொண்டும் ஒன்றும் பயனில்லை மாமா'' என்றாள்.

"நீ சொல்வது நான்கு வருடங்களுக்கு முன் காட்டியதை. இப்போது அவருடைய 'ரிஜிட்' ஹாஸ்பிடலில் வயிறு சம்பந்தப்பட்ட, அதாவது உணவுக்குழாய் முதல் ஆசன வாயு வரை ஏற்படக்கூடிய அனைத்து பிரச்னைகளுக்கும் சிகிச்சை செய்யும் முறைகளைக் கொண்டு வந்திருக்கிறார். இந்த ஐந்து வருடங்களில் மருத்துவ உலகிலும் எத்தனையோ முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளனவே? நீ ஒருமுறை அவரைப் போய்ப் பார்'' என்றார்.

"எதற்கும் இன்னும் ஒருமுறை ஏதாவது சிகிச்சை செய்து கொள்ள முடியுமான்னு முயற்சி செய்து பார்க்கலாம் சுவர்ணா'' என்று அவளை வற்புறுத்தி அழைத்து வந்தான் சிவராமன். சுவர்ணாவை அடையாளம் கண்டுகொண்ட டாக்டர் ராஜ்குமார்,

''நீங்க ஏற்கெனவே வந்திருக்கீங்க போலிருக்கே. நான் சொன்ன சிகிச்சை செய்து பார்த்தீங்களா?''

"செய்து கொண்டேன் டாக்டர். ஆனால் அதில் நிரந்தரமான தீர்வு கிடைக்கவில்லை.''

''சரி. கவலைப்படாதீங்க! உணவுக் குழாயில் இருக்கும் தடையை இப்போது சரிசெய்ய லேசர் கருவிகள் பயன்படுத்தப் படுகின்றன. அதனால் உங்களை லேசர் சிகிச்சை மூலம் குணப்படுத்த முடியுமான்னு பார்க்கலாம். முதலில் எண்டோஸ்கோபி செய்து 'ஸ்டிரிக்சர்' எனப்படும் தடைகள், உணவுக் குழாயில் எந்தெந்த இடத்தில் இருக்கிறது என்று பார்ப்போம்'' என்றார்.

எண்டோஸ்கோபி செய்ததில் உணவுக் குழாய் உள்ளே எரிந்து போயிருந்ததால், ரணம் ஆறி தழும்பு போல் ஏற்பட்டு உறுதியாகியிருந்தது தெரிந்தது. அதனால் உணவுக் குழாய் வளைந்து கொடுக்க மறுத்து விட்டது. பொதுவாக ஒருவரின் முன் பற்களில் இருந்து சுமார் முப்பது செண்ட்டி மீட்டர் தள்ளி உணவுக் குழாயில் தடை இருந்தால் லேசர் கருவி கொண்டு சிகிச்சை அளித்து குணப் படுத்தலாம். ஆனால் சுவர்ணாவிற்கு முன் பற்களில் இருந்து பதினேழு சென்டி மீட்டர் தொலைவில் ஒரு தடையும், இருபத்தி எட்டு சென்டி மீட்டர் தொலைவில் மற்றும் ஒரு தடையும் இருந்தது. இதனால் லேசர் கருவி சிகிச்சை இயலாத ஒன்று என்று பரிசோதித்த டாக்டர் ஜீவன் குமாரும், டாக்டர் சுனில் மாத்யூஸும் கூறி விட்டதால், அறுவை சிகிச்சை ஒன்றுதான் முடிவு என்று தீர்மானிக்கப்பட்டது.

அறுவை சிகிச்சை என்று தீர்மானித்த பிறகும் சுவர்ணாவின் நிலை, டாக்டருக்கு சற்று கவலையாக இருந்தது. அறுவை சிகிச்சை செய்து குரல்வளை அருகே, முழு உணவுக் குழாயையும் வெளியே எடுத்து தடையை நீக்கி திரும்பப் பொருத்தலாம் என்றால் தடை குழாயின் ஆரம்பத்திலேயே இருந்ததால், அந்த முறையில் அறுவை சிகிச்சை செய்து பலனில்லை. மேலும் திரும்ப உணவுக் குழாய் பாதிக்கப்படும். இத்தனை பெரிய அறுவை சிகிச்சையை செய்து கொண்ட பிறகு, திரும்ப பழைய நிலையே தான் என்றால் யாரால் தாங்கிக் கொள்ள முடியும்? டாக்டர் ராஜ்குமாருக்கு ஒரே குழப்பமாக இருந்தது.

டாக்டர் ராஜ்குமார், சிவராமனை அழைத்தார். "உங்கள் மனைவிக்கு உணவுக் குழாயை லேசர் சிகிச்சை மூலமாகவோ, வழக்கமான அறுவை சிகிச்சை மூலமாகவோ சரிசெய்ய முடியாது. மேலே கழுத்திற்கு அருகேயும், கீழே வயிற்றிற்கு அருகேயும்



**நாட்டுமக்கள் நலனையே**
**நோக்கமாகக் கொண்டவர்...**

**தமிழகத்தை வாழ்விக்க**
**காவிரியை தந்தவர்...**

**தாய்நாட்டின் புகழ் காக்க**
**போர்க்களத்தில் வென்றவர்...**

**மறுமலர்ச்சி பாரதத்தை**
**உருவாக்க வந்தவர்...**

இந்த நல்லவர் **வாஜ்பாய்**

தலைமையில் நிலையான நல்லாட்சி தொடர்ந்திட,
ஆதரிப்பீர் தேசிய ஜனநாயக கூட்டணியை.


பி. ஜே. பி.


தி. மு. க.


பா. ம. க.


ம. தி. மு. க.

**தாயகம் காத்திட தேசிய ஜனநாயக கூட்டணிக்கு வாக்களியுங்கள்.**

வெளியீடு : "கமலாலயம்", பாரதீய ஜனதா கட்சி, தி. நகர், சென்னை-17.

**உங்கள் வீடுகளில் சற்று பழைய, உபயோகப்படாத சாவிகள் இருக்கும். இவைகளை ஃபெவிக்ரில் கொண்டு பெயிண்ட் செய்து ஒரு கார்ட்போர்டு அட்டையில் ஒட்டி அல்லது தைத்து அதைச் சுற்றி நீங்களே உங்கள் கைப்பட வரைந்து வாழ்த்து அட்டை தயாரிக்கலாம். (பெயிண்ட்டின் நிறம் கோல்டன் கலராக இருந்தால் சிறப்பாக இருக்கும்.)**

**– பி.கே. சுபாஷிணி.**



அறுவை சிகிச்சையும் இரு பகுதிகளாக பிரித்துச் செய்ய வேண்டும். இது மிக அபூர்வ மான ஒரு ஆபரேஷன். இதனைச் செய்தால் பலன் கிடைக்கலாம். உங்கள் மனைவி இதற்கு ஒப்புக் கொண்டால், உங்களுக்கும் சம்மதம் என்றால் இந்த ஆபரேஷனை செய்கிறேன்" என்றார் டாக்டர்.

"வீட்டில் இருந்த வேலை சுமையால், அவசரத்தில் செய்த ஒரு காரியத்தினால், ஐந்து வருடங்களாக சாப்பாடே சாப்பிடவில்லை. இதைப் பார்த்துப் பார்த்து என் மனதும் புண்ணாகி விட்டது. நீங்கள் செய்யும் கடைசி முயற்சியான இந்த ஆபரேஷனிற்குப் பிறகா வது சுவர்ணா ஒரு வாய் சாப்பாடாவது சாப்பிட மாட்டாளா என்பது என் பிரார்த் தனை. இந்த ஆபரேஷனிற்கு அவள் கட்டா யம் சம்மதிப்பாள். எனக்கு உங்கள் முயற்சி யில் நம்பிக்கை இருக்கிறது டாக்டர்! கடவுள் எங்களை கைவிட்டு விட மாட்டார்!" என்று கூறிக் கலங்கினான் சிவராமன்.

"நீங்கள் என் மீது கொண்டிருக்கும் நம் பிக்கை எனக்கு மிகுந்த உற்சாகத்தையும், மனோதைரியத்தையும் அளிக்கிறது. கட்டாயம் என்னால் முடிந்ததைச் செய் கிறேன். உங்கள் மனைவியின் தற்போதைய உடல்நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. இந்த நிலையில் அறுவை சிகிச்சை செய்ய முடியாது. ஒரு மாதத்திற்கு நான் கூறும் மருந்து களையும் நான் கொடுக்கும் திரவ உணவு களையும் சாப்பிடச் சொல்லுங்கள். அடுத்த மாதத்தில் ஆபரேஷன் செய்வோம்" என்றார் டாக்டர்.

"நான்கு வருடங்களாக நீங்கள் சரியாக சாப்பிடவில்லை. ஒருவருக்கு சுமார் இரண் டாயிரம் கலோரி அளவு சக்தி தரும் உணவு உட்கொள்ள வேண்டும். என்றால் நீங்கள் ஐநூறு கலோரி அளவு உணவையே சாப்பிட் டிருக்கிறீர்கள். அதனால் ஆபரேஷனை தாங்க, உடலில் ஊட்டமும் சக்தியும், தெம்பும் ஏறுவதற்கு தேவையானவற்றைச் சாப்பிட்டு உடம்பை தேற்றிக் கொண்டு வாருங்கள்!" என்று கூறினார் டாக்டர்.

ஒரு மாதத்தில் ஓரளவு தேறி வந்த ஸ்வர்ணாவிற்கு மேலும் சில பாட்டில்கள் இரத்தம் ஏற்றப்பட்டது. உடல்நிலை அறுவை சிகிச்சையை தாங்கும் என்ற தீர்மானத்திற்கு வந்த பிறகு, அறுவை சிகிச்சைக்கான நாள் குறிக்கப்பட்டது.

"இந்த அறுவை சிகிச்சை சற்று வித்தியாச மான ஒன்று. இதனை செய்யும் போது தற் காப்பிற்கு இருதய நிபுணர், என்னுடன் இணைந்து செயல்பட மிகவும் அனுபவம் வாய்ந்த அறுவை சிகிச்சை நிபுணர் மேலும் பலர் இருக்க வேண்டும். அதனால் ஆபரே ஷனை இரவு பத்து மணிக்கு வைத்துக் கொள்ளலாம். அப்போதுதான் எல்லோரும் வந்து சேர முடியும்" என்றார் டாக்டர். ராஜ்குமார்.

அதன்படி இரவு பத்து மணிக்கு அறுவை சிகிச்சை தொடங்கப்பட்டது. மயக்க மருந்து நிபுணர்கள் டாக்டர் ஜோதிமணி, டாக்டர். சாமுவல்லா, அறுவை சிகிச்சை நிபுணர் பேராசிரியர். சுப்பிரமணியம், டாக்டர். ராஜ் குமார், டாக்டர். செல்வக்குமார், இருதய நிபுணர் டாக்டர் அஷோக்குமார் ஆகியோர் இணைந்து செயல்பட்டனர். இரவு பத்து மணிக்கு தொடங்கிய சிகிச்சை, அதிகாலை மூன்று மணிக்கு நிறைவடைந்தது. அதன் பிறகு ஒரு வாரம் தீவிர சிகிச்சைப் பகுதியில் இருந்தாள் சுவர்ணா.

உடம்பில் மேலும் தெம்பு வர, இரத்தம் ஏற்றப்பட்டது. அதன் பிறகு ஒரு வாரம் மேலும் மருத்துவமனையில் இருந்தாள் சுவர்ணா. அந்த ஒரு வாரத்தில் நான்கு நாள் திரவ உணவு அருந்தினாள். ஐந்தாம் நாள் காலை இட்லி சாப்பிடலாம் என்று டாக்டர் கூறியதால், "மெதுவாக இட்லி சாப்பிடு






கார்கில் போரில் வீரத்தைக் காட்டியவர்...
காவிரி நீரால் தமிழகத்தை வாழ்த்தியவர்...
விலைவாசி ஏற்றத்தை வீறுகொண்டு வீழ்த்தியவர்...
பொருளாதார வளர்ச்சியிலும் வெற்றிக்கொடி நாட்டியவர்...
இந்த நல்லவர் வாஜ்பாய் தலைமையில்
நிலையான நல்லாட்சி தொடர்ந்திட, பி.ஜே.பி. வேட்பாளர்கள்
பொன் ராதாகிருஷ்ணன் (நாகர்கோவில்)
S. ஆறுமுகம் (தென்காசி)
H. ராஜா B.Com., B.L., F.C.A. (சிவகங்கை)
அரங்கராஜன் குமாரமங்கலம் (திருச்சி)
C.P. ராதாகிருஷ்ணன் (கோயம்புத்தூர்)
மாஸ்டர் மாதன் (நீலகிரி)
அவர்களை ஆதரித்து
தாமரை
சின்னத்தில்
வாக்களிப்பீர்.
தாயகம் காத்திட தாமரைக்கு வாக்களியுங்கள்.
வெளியீடு : "கமலாலயம்", பாரதீய ஜனதா கட்சி, தி. நகர், சென்னை-17.

சுவர்ணா. கடவுளை நன்றாக வேண்டிக் கொண்டு சாப்பிடு சுவர்ணா!" என்று ஆதரவாக இட்லியைத் தட்டில் வைத்து தந்தான் சிவராமன்.

பயத்துடன் எடுத்து சாப்பிடத் தொடங்கிய சுவர்ணாவின் முகத்தில் திடீரென மகிழ்ச்சி பரவியது.

"என்னால் பழையபடி முழுங்க முடிகிறதுங்க. எனக்கு இனிமேல் சாதாரணமாக சாப்பிட முடியும் என்கிற நம்பிக்கை வந்து விட்டது" என்று முகத்தைக் கையால் மூடிக் கொண்டு குழந்தை போல் விசும்பினாள்.

"என்னம்மா? இன்றைக்கு முதலில் உணவை சாப்பிடத் தொடங்கினீர்களே? விழுங்க முடிந்ததா?" என்று விசாரித்தார் டாக்டர். ராஜ்குமார்.

"இட்லி சாப்பிட்டேன் டாக்டர். நெஞ்சை அடைக்கிறது!" என்றாள் சுவர்ணா.

"என்னம்மா சொல்றீங்க?"

"ஆமாம் டாக்டர். எல்லோருக்கும் துக்கம்தான் தொண்டையை அடைக்கும். ஆனால் எனக்கு பரபரப்பினால் செய்த தவற்றினால் சாப்பிடவே முடியாத நிலை மாறி சாதாரணமாக உணவை சாப்பிட முடியும் என்ற மகிழ்ச்சி நெஞ்சை அடைக்கிறது டாக்டர்" என்று நன்றியை ஆனந்தக் கண்ணீருடன் கூறினாள் சுவர்ணா!

டாக்டர். ராஜ்குமார் கூறுகிறார்...

"உணவுக் குழாயில் ஏற்படும் தடை ஸ்ட்ரிக்சர் எனப்படும். இது உணவுக் குழாயின் நடுப் பகுதியில் இருந்தால் லேசர் கதிர் கொண்டு சிகிச்சை அளிக்கலாம். ஆனால் திருமதி. சுவர்ணாவிற்கு உணவுக் குழாயின் ஆரம்பமே பாதிக்கப்பட்டு விட்டது. அதனால் அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அறுவை சிகிச்சையை மேல் பாகம், கீழ் பாகம் என இரண்டு பாகமாக பிரிக்க வேண்டியிருந்தது. மேல் பக்கம் கழுத்தின் அருகேயும் வயிறு பகுதியும் பிரிக்கப்பட்டது. நெஞ்சுப் பகுதியை அறுவை சிகிச்சை செய்வதால் பலர் மூச்சு விட சிரமப்படுகின்றனர். அதனால் மேலே கழுத்திலிருந்து வயிறு வரை இருதயத்தின் பின்பகுதி வழியாக சிகிச்சை செய்யப்பட்டது.

வயிறுப் பகுதியில் இருந்த கொழுப்பு, இரத்தக் குழாய்கள் நீக்கப்பட்டு வயிறு ஒரு குழாயைப் போல் மாற்றப்பட்டது. கீழிருந்தும், மேலிருந்தும் உணவுக் குழாயின் உள்ளே விரல் விட்டு சுத்தம் செய்து கொண்டே வரப்பட்டது. இந்தச் சிகிச்சையை பேராசிரியர் சுப்பிரமணியம் மிகவும் திறமையுடன் செய்தார். தடை இருந்த பகுதி வெட்டி நீக்கப்பட்டு, பழுதடையாத பகுதியுடன் வயிறுப் பகுதியும் குழாய் போல் ஆக்கப்பட்டு இணைக்கப்பட்டது. அதன் பிறகு உணவுக் குழாயை அதனிடத்தில் சரியாகப் பொருத்தி மூடினோம். மிகவும் நிதானமாகவும், நுண்ணியமாகவும் செய்ய வேண்டியிருந்ததால் அறுவை சிகிச்சை நீண்ட நேரம் செய்யப்பட்டது. அதன் பிறகு ஒரு வாரத்திற்கு பிஸியோதெரபிஸ்ட் நிருபமா, கழுத்து இறுகிப் போகாமல் பயிற்சி அளித்தார்.

எங்கள் மருத்துவ உலகில் சவாலாக செய்யப்பட்ட பல அறுவை சிகிச்சைகளில் ஒன்றான இந்தச் சிகிச்சை என் தனி முயற்சி இல்லை. இந்த அறுவை சிகிச்சையின் வெற்றிக்குப் பின்னால் பல நிபுணர்களின் திறமை இணைந்துள்ளது."

**ஜே.எஸ். ராஜ்குமார்,**

பேட்டி, கதை வடிவம் :

**எஸ். ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

சிறிது கோஸ், கேரட், வெங்காயம், தக்காளி, வெள்ளரிக்காய் அனைத்தையும் பொடியாக நறுக்கி (அல்லது) சீவிக் கொள்ளவும். பிறகு நன்கு கெட்டியான தயிர் விட்டு அத்துடன் கலக்கவும். பிறகு பச்சை மிளகாய் (தேவைக்கேற்ப) சேர்க்கவும். இது நன்கு ஊறிய பிறகு கொத்துமல்லியைப் பொடியாக நறுக்கி அதன் மேல் தூவிப் பரிமாறவும்.

- ராஜலக்ஷ்மி பால்குருநாதன்.






“என்ன நினைச்சிண்டு இருக்கா அவ மனசுல? அவ என்ன பெரிய ஐஸ்வர்யா ராயா? பப்ளிமாஸ் மாதிரி இருந்துண்டு, என்னைப் பார்த்து இப்படிக் கேட்டுட்டாளே...” நான் எனது எட்டாவது ரவுண்டு புலம்பலைத் தொடங்கியது தான் தாமதம், என் கணவர் தன் கைகளால் தனது காதுகளை அழுந்தப் பொத்திக் கொண்டபடியே,

“இப்ப நிறுத்தப் போறியா இல்லையா? நானும் பார்த்துண்டே இருக்கேன், இந்த இரண்டு மணி நேரத்துல இருநூறு முறையாவது அந்த லேடிய திட்டியிருப்பே. லட்சார்ச்சனைப் பண்ணிட்டுத்தான் விடுவியா?” என்று அவர் வள்ளென்று விழுந்தவுடன் வேறு வழியில்லாமல் என் கைகளில் இருந்த தண்ணீருடன் என் கண்ணீரையும் சேர்த்து விழுங்கினேன்.

அன்று காலையில் எங்கள் லேடீஸ் கிளப்பில் நடந்த ‘ஸ்பெஷல் மீட்’டுக்கு நான் உடுத்தியிருந்த ஷிஃபான் சேலையே எனது அன்றைய புலம்பலுக்கான காரணம். கிளப் செகரட்டரி மிஸஸ் திரிவேதி,

“என்ன மாலதி, தர்ட் டைமா? உன்னோட இரண்டாவது குழந்தைக்கு இப்பத்தானே சமீபத்தில் ஃபர்ஸ்ட் பர்த்டே கொண்டாடினே? கொஞ்சம் கேர்ஃபுல் ஆக இருக்கக் கூடாதா?”

என்று சரமாரியாக கேள்விகள் கேட்டு விட்டு இடத்தை விட்டு நகர்ந்த ஓரிரு நிமிடங்களுக்குப் பின்னால்தான், அவள், சற்றே பெருத்திருந்த என் வயிற்றைப் பார்த்து நான் மூன்றாவது முறையாகக் குழந்தை உண்டாயிருப்பதாய் நினைத்துப் பேசியது என் மூளைக்கு எட்டியது. ஒரு நிமிடம், பேச வார்த்தைகள் எழாமல், குமுறிக் கொண்டு வந்த அழுகையை அடக்கிக் கொண்டு பாதி மீட்டிங்கில் வீடு வந்து சேர்ந்தேன்.

ஆபீஸிலிருந்து களைப்புடன் வீடு திரும்பிய என் கணவர், கண்ணீரும் கம்பலையுமாக



நான் கைகேயி கோலம் பூண்டு, தாள மாட்டாத துக்கத்தில் இருப்பதைக் கண்டு, என்னை விசாரிக்க, ஓலங்களுக்கும் விசும்பல்களுக்குமிடையே நான் ஃப்ளாஷ்பேக்கை ஃபாஸ்ட் ஃபார்வர்ட் செய்து விவரித்தேன்.

''போனாப் போறதும்மா என்னவோ சொல்லிட்டா. அவங்களுக்கு அவ்வளவுதான் டீஸன்ஸி. அவங்க கெடக்க றாங்க. நீ எப்படி இருக்கியோ எனக்கு அதுவே சம்மதம்'' என்றாரே பார்க்கணும்.

''அப்ப நான் என்ன குண்டா? ஏதோ ரெண்டு

**மாலதி கிருஷ்ணா**

பசங்களுக்கு அப்புறமா என் வயத்துல கொஞ்சமா சதை கூடியிருக்கு. அவ்வளவுதான். நீங்க மட்டும் என்ன? பெரிய மிஸ்டர் இந்தியா, திவாகர் புண்டீர்னு மனகல நினைப்போ?'' என்று நான் பதிலடி கொடுத்தவுடன் சற்று நேரம் என்னை என் போக்கில் புலம்ப விட்டு விட்டார்.

இரண்டு மணி நேரம் தாரை தாரையாக கண்ணீர் வடித்து, தீராத தலைவலியுடன் ஜல தோஷமும் இலவசமாகப் பெற்று ஒருவழியாக தூங்கிய எனக்கு அலாரம் சத்தம் சைரன் ஒலி போல் கேட்டது.

தரையில் தலையும், கட்டிலின் மேல் கால்களுமாய் என் சிமந்த



புத்திரன் அரவிந்த் தூங்கிக் கொண்டிருந்தது ஏதோ யோகாசனம் போல் தோன்றியது. அவனை ஒரு உலுக்கு உலுக்கி எழுப்பி விட்டு சமையலறைக்குள் நுழைந்த நான், எட்டு மணிக்கு ப்ரேக் ஃபாஸ்ட் டேபிளில் டிபனை பரிமாறியபடியே நான் எடுத்துக் கொண் டிருந்த உறுதியை அறிவித்தேன்.

சட்டினியில் தோய்ந்து, சாம்பாரில் நனைந்து, மிக பக்குவமாகியிருந்த இட்லித் துண்டங்கள் ஏதோ எம்.ஐ.ஜி. 27ல் இருந்து வெளிப்பட்ட மிஸ்ஸைல்ஸ் போல என்னைத் தாக்கியதும்தான் என்னுடைய 'டயட்' மற்றும் 'வெயிட் லாஸ் ப்ரோக்ராம்' இவர்களுக்கு ஒரு பெரிய ஜோக்காகப்பட்டது தெரிந்தது.

"மாலா, இதுக்கெல்லாம் அவசியமே இல்லை. முடிஞ்சா அபிஷேக்கை (எங்களது இரண்டாவது மகன்) ப்ராம்ல போட்டு ஒரு வாக் போ" என்று இலவசமாய் ஆலோசனை வழங்கி விட்டு தன் ஸ்கூட்டரில் சவாரி விட்டார்.

"அம்மா பார்த்தும்மா. சாயங்காலம் நான் ஸ்கூல்லேர்ந்து வர்றச்சே நீ அடையாளம் தெரியாம இளைச்சிருக்கப் போறே" என்று கடித்துவிட்டு பஸ் ஏறிய என் மகனை வழியனுப்பி விட்டு வீடு திரும்பினேன்.

முன் தினத்தின் 'ஹேங்ஓவர்' (தலைவலி தான்!) காலையில் குடித்த, சர்க்கரையில்லாத காப்பியினால் விசுவரூபமெடுத்து என் தலையைக் குடைந்தது.

ஸீடியில் அலறிக் கொண்டிருந்த ரிக்கி மார்ட்டினின் வாயை ஒரு ஸ்விட்ச்சைத் தட்டி ஒரேயடியாய் பொத்தினேன். ஒருவர் கண்களும் புலப்படாது ஓரத்தில் ஒளிந்திருந்த குப்பைகளை அங்கங்கே நடுவில் தள்ளிவிட்டு தன் கடமை முடிந்ததென நடையைக் கட்டிய வேலைக்காரி, குழப்பி வைத்திருந்த பாத் திரங்களை அலமாரியில் கவிழ்த்து விட்டு, சமையல் என்ற பெயரில் எண்ணெய்த் தூக்கை கண்களால் பார்த்தபடியே வெண் டைக்காய் கறி, டூ-இன்-ஒன் ஸூப் கம் ரசம், மற்றும் இரண்டு சுக்கா சப்பாத்திகள் செய்து முடித்தேன்.

தொண்டைக்கிழிய மூன்று முறை குரல் கொடுத்தும், இஸ்திரிக்கு இருந்த துணிகளை "இதோ வரேன்" என்று கூறியே தட்டிக்கழித்து எடுத்துச் செல்லாமல் இருந்த அந்த அயர்ன் காரனைத் திட்டியபடியே மூன்று மாடி இறங்கி ஏறி (லிஃப்டில் சென்றால் என் ரெஸல்யூஷன் என்னாவது!!!) கொடுத்து விட்டு வந்தேன்.

நான் உள்ளே நுழைந்ததுதான் தாமதம் க்ரவுண்ட் ஃப்ளோர் பாட்டி, "மாலா, சித்த கிழே வாயேன். பொண்ணு லெட்டர் போட் டிருக்கா. கொஞ்சம் படிச்சுச் சொல்லேன்" என்று அழைத்தாள். வேலைக்குச் சென்றுள்ள மருமகள் திரும்பும் முன் கடிதத்தைப் படித்து அப்புறப்படுத்த வேண்டிய கட்டாயம் பாட் டிக்கு. என் வெயிட் ரிடக்ஷன் ப்ரோக்ராம் ரொம்ப இஃபெக்டிவ்வாக செயல்படும் சந் தோஷத்தில் களைப்பைப் பொருட்படுத்தா மல், அட்சரம் தவறாமல் படித்துச் சொல்லி விட்டு வந்தேன். (ஸ்ட்ரிக்டாக படிக்கட்டு தான்.)

நான் செய்த சுக்கா சப்பாத்தியையும், ஃபேட் லெஸ் வெண்டைக்காய் கறியையும் ரசித்து உண்ண முற்பட்டு, ஒருவழியாக மென்று முழுங்கி டேபிளை விட்டு எழுந்த பொழுது அழைப்பு மணி அடித்தது. என் மச்சினன் முகமெல்லாம் பல்லாக "ஹாயி" னான். பதிலுக்கு அவனை வரவேற்ற நான் அவனுடன் வந்த வாசனை என்னவென்று கேட்பதற்கு முன், நகரின் முன்னணி பீஸா ஹோமின் பெயர் தாங்கிய பெட்டியைப் பிரித்தான்.

"உங்களுக்குப் பிடிக்குமேன்னு வாங்கிண்டு வந்தேன்" என்றவனுக்கு என்னுடைய லேட் டஸ்ட் ரிஸல்யூஷன் பற்றிச் சொன்னதும், "பேஷ் பேஷ்" என்று நரசுஸ் காப்பி ஸ்டைலில் என்னைப் பாராட்டி விட்டு ஒரு அரை மணி அரட்டை அடித்தபின் கிளம்பினான்.

அவன் சென்ற சிறிது நேரத்தில் பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பிய அரவிந்துக்கு பால் கொடுத்து, சிறியவனையும் தயார் செய்து ப்ராமில் போட்டு காய்கறிகள் வாங்க மிகுந்த

**அலுமினியம், இரும்பு போன்ற பாத்திரங் களில் உள்ள விடாப்பிடியான அழுக்கைப் போக்க உப்புத்தாள் கொண்டு அழுந்தத் தேய்த் தால் போயே போய் விடும். ஆனால் உப்புத் தாள் கொண்டு எவர்சில்வர், பீங்கான், மெல் மோவேர் போன்ற பாத்திரங்களுக்கு உபயோகித் தால் கீறல் விழும். எனவே கடினமான உலோகங்களுக்கு மட்டுமே உபயோகப்படுத் தவும்.**

**– உமா மஹேஸ்வரி.**



ஆர்வத்துடன் 'வாக்கிங்' கிளம்பினேன். தெருக்கோடியில் இருந்த காய்கறிக்கடைக் காரனை துச்சமாக பார்வையிட்டு இரண்டு கி.மீ. தள்ளியிருந்த மார்க்கெட் நோக்கி நடந்தேன்.

வீடு திரும்பிய என்னை, பசியுடன் வர வேற்ற என் கணவர், இரவு உணவிற்கு பூரி, கிழங்கு வேண்டுமென்று கேட்டுக் கொண்ட தன்பேரில், என் வயிறு இரைந்ததையும் பொருட்படுத்தாது ஆதர்ச இந்திய தர்மபத் தினியாக அவருக்கும் குழந்தைகளுக்கும் பூரி கிழங்கு செய்து கொடுத்து, காலையில் நான் செய்த 'தால் ஸூப்' என்று பெயர் சூட்டி யிருந்த ரசத்தை ஒரு கப் குடித்து, ஒருவழியாக வேலைகளை முடித்து படுக்கையில் விழுந்தேன்.

இடமும் வலமுமாக குட்டிக்கரணம் அடித் தும், கண்கள் எரியும் அளவிற்கு பெயின் பாம்மை நெற்றியில் அப்பியும் தூக்கம் வராத துக்குக் காரணம் எனக்குப் புரிந்தது. என்னு டைய 'செண்ட்ரல் ப்ராஸஸிங் யூனிட்' (வயிறு தான்) ஓவர் டைம் உழைத்துக் கொண்டிருந் தது. ஏதாவது 'இன்புட்' கிடைக்குமா என்ற ஏக்கம் அதற்கு.

என்னுடைய உறுதி என் மச்சினன் வாங்கி வந்திருந்த பீஸ்ஸாவின் மேல் படர்ந்திருந்த சீஸ்ஸுடன் வயிற்றில் கரைய, விரல்களை நக்கியபடி திரும்பிய நான் எதிரில் நின்ற என் கணவரைப் பார்த்து (மைக்ரோ வேவின் பீப் அவரை எழுப்பியதோ?!) அசடு வழிந்தேன்.

முறையே காலை, மதியம், இரவு மூன்று வேளையும் சத்துள்ள அதே சமயம் குறைந்த கலோரிகள் கொண்ட உணவைச் சாப்பிடா மல், கிட்டத்தட்ட இரண்டாயிரம் கலோரிகள் கொண்ட ஒரு முழு பீஸ்ஸாவை இரண்டே நிமிடங்களில் காலி செய்து, என் எடையில் இருநூற்றி ஐம்பது கிராம் சட்டென்று கூட்டிய முட்டாள்தனத்தைப் பற்றிப் புலம்பி அந்த இரவின் அடுத்த சில மணி நேரங்களை நான் கழிக்கப் போவதை உணர்ந்த என் கணவர், சட்டென்று படுக்கை அறைக்குள் ஓடி, போர்வைக்குள் ஒளிந்து கொண்டார்.

என் போன்று உடல், வயிறு இளைக்க டயட்டில் இருக்க நினைத்துத் தோற்றுப் போன சகோதரிகளுடன் நான் சில குறிப்புகள் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். (அப்புறம் முறையாக டயட்டீஷனை அணுகி நான் தெரிந்து கொண்ட ரகசியங்கள்)

1. "என்னால் இளைக்க முடியும்" என்ற நம்பிக்கை வாக்கியத்தை தாரக மந்திரமாக தினமும் உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்ளுங்கள்.

2. எக்காரணம் கொண்டும் ஒருவேளை உணவையும் தவிர்க்காதீர்கள். பதிலாக, குறைந்த கலோரிகள் கொண்ட உணவாக ஒவ் வொரு வேளையும் தவறாமல் உண்ணுங்கள். கையில் கிடைத்ததை வாயில் போட்டு மென்று வைப்போமே என்று வாயையும், வயிற்றையும் அடைத்துக் கொள்ளாதீர்கள். எண்ணெயில் வறுத்தது, பொரித்தது, இனிப்பு என்றில்லாமல் சுவைமிகுந்த பழங்கள், ஆரோக்கியமான ஸூப், சாலட் என்று சாப்பிடுங்கள்.

3. பொழுது போகவில்லையென்றால் சாப்பிடுவது என்ற பழக்கத்தை நிறுத்துங்கள். சிற்றுண்டி உண்ணுவதை விட சிறந்த பொழுதுபோக்குகள் பல உள்ளன.

4. சாப்பிடும் பொழுது உணவில் கவனம் செலுத்துங்கள். டீ.வி. பார்த்துக் கொண்டே சாப்பிடும் பொழுது நம் வயிறு நிறைந்த பிறகும், அளவுக்கு அதிகமாக சாப்பிடும் அபா யம் உள்ளது. எனவே அதனை தவிர்க்கவும்.

5. சாப்பாட்டைத்தான் குறைத்து விட் டோமே என்று கைகால்களை அசைக்காமல் இருந்து விடாதீர்கள். உடல் இளைக்க உடற் பயிற்சி செய்வது அவசியம். தினமும் அரை மணி முதல் ஒரு மணி நேரம் வரை சுறுசுறுப் பாக வாக்கிங் செல்வது நம் உடல் ஆரோக்கியத்திற்கு இன்றியமையாதது.

இவை அனைத்திற்கும் மேலாக, பத்து நாட்களுக்கொருமுறை எடையைப் பார்த்து பெரிய வித்தியாசம் ஒன்றுமில்லை என்று உங்கள் டயட் மற்றும் உடற்பயிற்சியை நிறுத்தி விடாதீர்கள். விடாமுயற்சியே வெற்றிக்கு வழி.

பிரபல விளம்பரத்தைப் போல உங் களையும் ஒருவர், "அக்கா, நீங்க எந்த காலேஜ்?" என்று கேட்கும் நாள் வெகு தூரத்தில் இருக்காது.

ஆல் த பெஸ்ட்.



**நோயாளிகளுக்குப் பயன்படும் Hot Water Bag-ல் சிறிது உப்பைச் சேர்த்தால் ரொம்ப நேரத்திற்கு சூடு குறையாமல் இருக்கும்.**

- ரமாராஜா

# சுவையான ரோஸ்ட் – சுலபமான யோசனைகள்

● ரோஸ்ட் செய்ய கடாயில் தேவையான எண்ணெய் ஊற்றிக் காய்ந்ததும் காய்க்குத் தேவையான உப்பில் பாதியைப் போட்டுப் பொரிந்ததும் கடுகு தாளிதம் செய்து கடுகு வெடித்ததும் நறுக்கிய கருவேப்பிலைத் துண்டுகளைப் போட்டுப் பிறகு மிளகாய்ப் பொடி மசாலா பொடி சேர்த்தால் கருகாது, கமறாது. கலர் மாறாமல் நல்ல மணமாக இருக்கும். பிறகு காயைச் சேர்த்து வதக்கினால் கடாயில் ஒட்டவே ஒட்டாது. நன்றாக ரோஸ்ட் ஆகும்.

எண்ணெய் நிச்சயமாகக் குறைவாகவே பிடிக்கும். இது அனுபவத்தில் கண்ட உண்மை. தேவைக்கு ஏற்ப மீதி உப்பை சேர்த்துக் கொள்ள வேண்டும். (வதக்கும் போது)

● ஒரே சீராக காய்கள் ரோஸ்ட் ஆக வேண்டுமென்றால் நறுக்கிய துண்டுகளும் ஒரே மாதிரி அளவாக இருக்க வேண்டும். இதற்குச் சுலபமான வழி ஸ்லைசரை அட்ஜஸ்ட் செய்து வேண்டிய பருமனுக்கு சேனை, வாழை, பீட்ரூட் உருளை போன்றவற்றை ஸ்லைஸ் செய்து கொண்டு பிறகு துண்டுகளாக்கலாம். வேலை சீக்கிரம் முடியும். நறுக்கிய துண்டுகள் ஒரே சீராக பார்க்கவே அழகாக இருக்கும். ஒரே மாதிரியாக ரோஸ்ட் ஆகும்.

● குக்கரில் வேகவைத்து ரோஸ்ட் செய்வதாக இருந்தால் கிழங்கு வகைகளை நன்கு கழுவி நீர் சேர்க்காமல் வேகவிடலாம். ஒரு விசில் வந்தால் போதும். அதாவது தோல் உரிக்க வரும் அளவு வெந்தால் போதும். பிறகு துண்டுகளாக்கி பிரிட்ஜில் பதினைந்து நிமிடங்கள் வைத்திருந்து ரோஸ்ட் செய்யவும். சீக்கிரம் ரோஸ்ட் ஆகிவிடும்.

● மறந்து போய் குக்கரில் காய்கள் அதிக நேரம் இருந்து விட்டால் ஈரத்துணியை மடித்துப் போட்டு அதன் மேல் குக்கரை வைக்கவும். வால்வ் எளிதாக சீக்கிரம் ரிலீஸ் ஆகும். உள்ளே காய்கள் பதமான நிலையில் வெந்திருக்கும்.

● குக்கரில் வைக்காமல் நேரடியாக

படம்: ராஜு

ரோஸ்ட் செய்ய இன்னொரு முறை - நறுக்கிய துண்டுகளை அளவாகத் தண்ணீர் வைத்து அது தளதளவென்று கொதிக்கும் போது நறுக்கிய துண்டங்களைப் போட்டு அடுப்பை அணைத்து ஐந்து நிமிடங்கள் மூடி வைத்து பிறகு வடி கூடையில் கொட்டி நீரை வடித்து ஆறியதும் பிரிட்ஜில் பதினைந்து நிமிடங்கள் வைத்து முன்பு கூறியது போல் ரோஸ்ட் செய்யவும்.

❋ கோவைக்காயை வட்டமாகவோ அல்லது நீளவாக்கிலோ நறுக்கிக் கொண்டு ஒரு ஸ்பூன் கல் உப்பு சேர்த்து கையால் துண்டங்களை அழுத்திக் கசக்கி பத்து நிமிடம் அப்படியே வைத்திருந்து ரோஸ்ட் செய்தால் சீக்கிரம் வெந்து ரோஸ்ட் தயாராகி விடும்.

❋ சேனைக் கிழங்கை தோல் சீவி வேண்டிய கனத்தில் ஸ்லைஸ் செய்து சிறு கன சதுரத் துண்டுகளாக்கி நன்றாகக் கழுவி ஃபேன் அடியில் ஒரு துணியில் பத்து நிமிஷங்கள் பரத்திப் போட்டு முன்பு கூறியபடி ரோஸ்ட் செய்யவும். காயிலிருந்து இலேசாக எண்ணெய் கசியும் சமயம் இரண்டு ஸ்பூன் மக்காச் சோள மாவு அல்லது கடலை மாவு தூவி இரண்டு நிமிடங்கள் புரட்டிக் கொடுத்து இறக்கவும். மேற்புறம் கரகரப்பாகவும் உள்ளே மிருதுவாகவும் இருக்கும். கல்யாணங்களில் பரிமாறுவது போல் முழுவதும் கரகரப்பாக வேண்டுமென்றால் எண்ணெய் சற்று கூடுதலாகச் சேர்க்கவும். நன்றாகப் பொரிந்து விட்டால் எண்ணெய் முழுவதுமாக வெளியே வந்து விடும். நன்கு வடித்து எடுத்து டிஷ்யூ பேப்பரில் பரத்தி எடுத்து பத்திரப்படுத்தவும்.

❋ பாகற்காயை ஸ்லைஸரில் ஸ்லைஸ் செய்ய வராது. கொட்டைகள் இருந்தால் தடுக்கும். அதனால் கத்தியால் சற்று கனமான ஸ்லைஸ் செய்து கொள்ளவும். அரை கிலோ பாகற்காய்க்கு இரண்டு பெரிய தக்காளி ஒரு நெல்லிக்காய் அளவு புளி சேர்த்து மிக்ஸியில் அடித்துப் பேஸ்ட் ஆக்கி ஒரு தம்ளர் தண்ணீர் சேர்த்துக் கொஞ்சம் உப்பு மஞ்சள் தூள் சேர்த்துக் கொதிக்க வைத்து பாகற்காய்த் துண்டுகளைப் போட்டு குலுக்கி விட்டு வேகவிட வேண்டும். தண்ணீர் குறைவாக இருப்பதால் கரண்டி போட்டால் காய்கள் உடைந்து விடும். அரைவேக்காட்டுப் பதத்தில் வடிகட்டி காற்றாடப் பரத்தி வைத்து ரோஸ்ட் செய்யவும். பரிமாறும் போது சன்னமாக நறுக்கிய வெங்காய ஸ்லைஸையும் தனியாகப் பரிமாறவும். இரண்டையும் சேர்த்துச் சாப்பிட ருசி பிரமாதமாக இருக்கும். கசப்பே தெரியாது.

❋ முழுக் கத்தரிக்காய் ரோஸ்ட் செய்ய காயை வகிர்ந்து (காம்பு இருக்க வேண்டும். நுனியை மட்டும் கொஞ்சமாக நறுக்கலாம்) அரை கிலோ காய்க்கு ஒரு சிறிய எலுமிச்சை அளவு புளியைக் கரைத்து இரண்டு தம்ளர் ஜூஸ் எடுத்து ஒரு ஸ்பூன் உப்பு மஞ்சள் கொஞ்சம் சேர்த்து குக்கர் செபரேட்டரில் அல்லது அது போன்ற flat bottom பாத்திரத்தில் கொதிக்க வைத்து காயைப் போட்டு இரண்டு நிமிடங்கள் வேகவிட்டுப் பிறகு தண்ணீரை வடித்து அளவான மூடி போட்டு மூடிவைக்க வேண்டும். இப்படிச் செய்தால் உள்ளிருக்கும் சூட்டில் கத்தரிக்காய் பதமாக வேகும். பிறகு மசாலா ஸ்டஃப் செய்து ஃப்ரை செய்யலாம். மொத்தம் பத்து நிமிஷத்தில் கத்தரிக்காய் ரோஸ்ட் ரெடி.

❋ பிஞ்சு கொத்தவரை, அவரை, வெண்டை போன்றவற்றை நடுப்பாகத்தில் நீளவாக்கில் வகிர்ந்து கால் கிலோவிற்கு இரண்டு ஸ்பூன் மக்காச் சோள மாவு, இரண்டு ஸ்பூன் கடலை மாவு, அரை ஸ்பூன் மிளகாய்ப் பொடி, இஞ்சி, பூண்டு விழுது அரை ஸ்பூன் அல்லது பெருங்காயப் பொடி தேவையான அளவு, உப்பு மஞ்சள் பொடி கலந்து நீர் கலந்து 'பேஸ்ட்' ஆக்கி காயில் நன்றாகப் பிசிறி ஒரு மணி நேரம் ஊறவைத்து ரோஸ்ட் செய்யவும். சப்பாத்திக்கு, சாதத்தில் கலந்து சாப்பிட மிக ருசியாக இருக்கும்.

❋ மரவள்ளிக் கிழங்கை தோலோடு நன்றாக அலம்பி குக்கரில் வெயிட்




**கஷ்டப்பட்டதன் மூலம் பெறப்பட்ட வெற்றியில்தான் மேன்மேலும் செய்ய வேண்டிய முயற்சியை தூண்டக் கூடிய சக்தி இருக்கிறது.**

**தகவல்: பி. ருக்மணிபாய்**

# நாளைய வளமான எதிர்காலத்திற்கு
# இன்றே நம்பிக்கையூட்டுவது TDFC

## திட்டம் - 1

**தவணை முறையில் வட்டி அளிக்கும் திட்டம்**

**குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 10,000/-**

| வைப்புத் தொகைக்கான காலம் | மாதந்தோறும் அளிக்கப்படும் வட்டி விகிதம் | மூன்று மாதத்திற்கு ஒரு முறை அளிக்கப்படும் வட்டி விகிதம் வருடத்திற்கு |
|---|---|---|
| 12 மாதம் மற்றும் 1 நாள் | - | 12.12 % |
| 25 மாதங்கள் | - | 12.63 % |
| 36 மாதங்கள் | 13% | 13.14% |
| 48 மாதங்கள் | | |
| 60 மாதங்கள் | | |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப்படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.

## திட்டம் - 2

**முதலீடு பெருகிடும் திட்டம்**

**குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 5,000/-**

| வைப்புத் தொகைக்கான காலம் | ரூ. 5000/-க் கான முதிர்வுத் தொகை | வட்டிவிகிதம் | ரூ. 1000/-க் கான முதிர்வுத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதம் மற்றும் 1 நாள் | ரூ. 5635/- | 12.70% | ரூ. 1127/- |
| 25 மாதங்கள் | ரூ. 6480/- | 14.21% | ரூ. 1296/- |
| 36 மாதங்கள் | ரூ. 7370/- | 15.80% | ரூ. 1474/- |
| 48 மாதங்கள் | ரூ. 8390/- | 16.95% | ரூ. 1678/- |
| 60 மாதங்கள் | ரூ. 9545/- | 18.18% | ரூ. 1909/- |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப் படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

**வைப்புத்தொகையின் மீது கமிஷன் இல்லை**

மேலும் விபரங்களுக்கு



**தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.

**தொலைபேசி : 8292059, 8292917, 8293351. தந்தி :TAFCON. P.B.No.719**

**கிளைகள் :**

★ டிடிசி பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : 497102
★ டிடிசி பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:464188
★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி:741686
★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி : 258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- **காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்**

**உங்களது முதலீடு ''டிடிஎப்சி'' யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 20.9.98 தினகரனில் வெளியிட்டப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1002/DIS/98/ELEGANT

**1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு**

வைக்காமல் வேகவேண்டும். நீர் சேர்க்கக் கூடாது. ஸ்பூன் காம்பால் கிழங்கைக் குத்தினால் காம்பு கெட்டியாக கிழங்கினுள் இறங்க வேண்டும். இதுதான் சரியான பதம். உடனே வெளியே எடுத்து குளிர்ந்த நீரை ஊற்றி ஆறியவுடன் தோலை சுத்தமாக நீக்கி ஸ்லைஸ் செய்து மற்ற கிழங்குகளைப் போல ரோஸ்ட் செய்யவும். இதற்கு ரீபைண்ட் எண்ணெயுடன் சிறிது தேங்காய் எண்ணெயும் தாளிதத்திற்கு சேர்த்துக் கொள்ள வேண்டும். மிளகுப் பொடி மிளகாய்ப் பொடி சம அளவு கலந்து உபயோகித்தால் இந்தக் கிழங்கு ரோஸ்ட் மிகச் சுவையாக இருக்கும்.

குறிப்பு : 1. உப்பும் காரமும் அவரவர் தேவைக்கேற்ப மாறலாம்.

2. சீக்கிரம் ஆகவேண்டும் என்பதற்காக காய்களை மூடி போட்டு வேகவைத்தால் மூடியின் உட்புறம் உண்டாகும் நீர்த் திவலைகள் காயில் சொட்டுவதால் எவ்வளவு நேரமானாலும் ரோஸ்ட் ஆகாது. மெத்தென்றுதான் இருக்கும்.

3. உருளைக்கிழங்கிற்கு மட்டும் தனி மிளகாய்ப் பொடியை விட ரசப் பொடி சேர்த்தால் சுவை மிக நன்றாக இருக்கும். நைசாகப் பொடித்த தனி மிளகுப் பொடியும் நன்றாக ஒத்துப் போகும்.

4. பொதுவாக எல்லா வகை ரோஸ்டிற்கும் ஒத்துப் போகும் கறிப் பொடி– 50 கிராம் மிளகாய் வற்றல், 50 கிராம் உளுத்தம் பருப்பு, 25 கிராம் கடலைப் பருப்பு, ஒரு ஸ்பூன் சீரகம், 4 ஸ்பூன் வெள்ளை எள், 2 ஸ்பூன் புளிப் பொடி (கடைகளில் கிடைக்கிறது). வெறும் வாணலியில் நன்றாக சிவக்க வறுத்து மிக்ஸியில் பொடித்து எடுத்து புளிப் பொடியையும் கலந்து எடுத்த வைக்கலாம். விருப்பமுள்ளவர்கள் நான்கு பல் பூண்டை நன்கு நசுக்கிப் பொடியோடு கலந்து வைக்கலாம். பூண்டு பிடிக்காதவர்கள் பெருங்காயப் பொடி சேர்த்துக் கொள்ளலாம்.

**— சி. அலமேலு**

**வெற்றிக் கதை**




## பீனிக்ஸ் பறவைபோல் எழும்பிய "அம்பு"!

சிறு கிராமமாகிய, எங்கள் ஊரில் நானும் "அம்பு"வும் நெருங்கிய தோழிகள். எங்கள் ஊரில் 8ம் வகுப்பிற்கு மேல் இல்லை. அந்த கால கட்டத்தில் பெண்கள் வயதிற்கு வந்து விட்டால், பள்ளிக்கு அனுப்ப மாட்டார்கள். படிக்க ஆசை இருந்தும் எங்கள் படிப்பு நிறுத்தப்பட்டது.

சீக்கிரமே அம்புவிற்குத் திருமணம் செய்து விட்டார்கள். அந்த காலத்தில், கணவன், வீட்டிற்கு அழைத்துச் செல்ல ஒரு சடங்கு செய்வது வழக்கம். அதுவரை கணவன்-மனைவி, சந்தித்தால் கூட விலகியே இருக்க வேண்டும். சடங்கிற்கு சற்று தாமதமாகியது. "அம்பு"வின் கணவன் தன் அப்பா, அம்மாவிற்குத் தெரியாமல் லீவ் நாட்களில் வந்து போய்க் கொண்டிருந்தான். இந்த நிலையில் இந்தப் பெண் கர்ப்பம் ஆகி விட்டாள். இருவரும் பயந்து வாய் மூடிக் கொண்டு, இருந்து விட்டனர்.

பெண்ணின் தாயார் சந்தேகப்பட்டு கேட்க, உண்மையை ஒப்புக் கொண்டாள். பையனின் பெற்றோரும், அவனிடம் விசாரிக்க தனக்கு ஒன்றுமே தெரியாது என்றவன் அப்பெண்ணின் நடத்தையில் குறை கூறி தப்பித்து விட்டான். அவனுடைய பெற்றோர்களும், பிள்ளையின் வார்த்தைகளை நம்பி, பெண்ணைக் கூட்டிக் கொள்ளவே, இல்லை.



"அம்பு"வின் பெற்றோர்கள் மிகவும் வருந்தினர். ஊரில் பலவாறு ஏசி பேசினாலும் "அம்பு"வும் அவள் பெற்றோரும் தைரியமாக, அந்த நாணயம் இல்லாத, குடும்பத்தார் முன்னால் "அம்பு"வை படிக்க வைக்க தீர்மானித்தனர். "அம்பு"விற்குப் பெண் குழந்தை பிறந்தது. மனவுறுதியுடன் அம்பு மருத்துவம் படித்து டாக்டராக வெளி வந்தாள். எங்கள் கிராமத்திற்கு அருகில்தான் இருக்க வேண்டுமென்று அருகிலேயே கிளினிக் ஆரம்பித்து மேன்மேலும் வளர்ந்து இப்போது ஒரு நல்ல ஆஸ்பத்திரியாக அது விளங்குகிறது.

ஒரு சூழ்நிலையில் அவள் கணவன் வந்து தன் தப்பை ஒப்புக் கொண்டு, கூடி வாழ விரும்பினாலும், "அம்பு" மறுத்துவிட்டாள். இன்றும் கடமை வாதியாகவே வாழ்கிறாள். அவள் பெண்ணும் இப்போது மருத்துவம் படிக்கிறாள்.

**— லலிதா**

# நோ, வெயிட் ப்ளிஸ்!

"அங்கமெல்லாம் தங்கமான மங்கையைப் போலே..." என்று ஒரு பாடல் வரி உண்டு. அதுபோல் உடலில் மினுமினுப்பும், வனப்பும் கூடுவதோடு அல்லாமல் கூடவே போட்டிக்கு வெய்ட்டும் கூடினால்... 'அம்மா குதிரு' என்கிறபடிதான் இருக்கும். ஒரு குழந்தை பிறந்தவுடனே 'எனக்கென்ன எல்லாம் முடிஞ்சு போச்சு' என்று சொல்லிக் கொள்வதும் ஒரு ஃபாஷன் ஆகி விட்டது. அதனால் தன்னைச் சரிவர கவனித்துக் கொள்ளாத தாய்மார்கள் எத்தனையோ பேர் உண்டு.

பிறருக்காக இல்லாவிட்டாலும் தன் வேலையை தான் செய்து கொள்ள 'ஃபிட்னஸ்' வேண்டுமே! அது ஏன் பெண்களுக்குப் புரிய மாட்டேன் என்கிறது" என்று சாடுபவர் அழகுக் கலை நிபுணர் திருமதி ஹேமா லக்ஷ்மண் அவர்கள்.

• ஹேமா லக்ஷ்மண்



கே : 'எடை கூடுதல்' என்பது ரொம்பவும் ஒரு ஆச்சர்யமான விஷயமாக இருக்கிறது. ஏனென்றால் நன்றாகச் சாப்பிடும் சிலர் எடை குறைவாகவும், வளைத்துக் கட்டிக் கொண்டு என்பார்களே அது போலல்லாமல் கொறிக்கும் சிலர் குண்டாகவும், எடை கூடியும் இருக்கிறார்களே?

பதில் : இதைத்தான் pattern of food என்று சொல்லுகிறோம். உடலுக்கு எடையைக் கூட்டும் கொழுப்புச் சத்து நிறைந்த உணவு பதார்த்தங்களை தவிர்க்க வேண்டும். எடை அதிகம் இருப்பவர்கள் சிலர், எடை மிஷினைப் பார்த்து அவ்வப்பொழுது தங்கள் டயட்டை மாற்றியும் வருகிறார்கள்.

ஆனால் ஒன்றை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். 'எடை குறைத்தல்' என்பது உடனே ஒருசில நாட்களில் இருக்காது. அதற்குப் பொறுமை வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகத் (gradual)தான் குறைய ஆரம்பிக்கும். எடையைக் குறைக்க ஒரு வழி சொல்லுகிறேன் –

நார்த்த இலையைக் காம்பு ஆய்ந்து, ஓமம், மிளகாய் வத்தல், பெருங்காயம், சிறிது உப்பு சேர்த்து ஈரமில்லாமல் பொடி செய்து ஒரு பாட்டிலில் வைத்துக் கொள்ளுங்கள்.



வெய்யிலில் ஊர் சுற்றியதால் வீட்டில் எல்லோர் துணியும் ஒரே அழுக்கு, நாற்றம். வாஷிங்மிஷினில் துணியைப் போட்டு சோப்பு பவுடரையும் போட்டு கடைசியில் 2 மூடிக்கு மேல் யூடிகோலோனையும் ஊற்றினேன். துணிகள் அழுக்குப் போய் மிதமான யூடிகோலன் வாசனையுடன் இருந்தது. அடிக்கடி இவ்வாறு செய்யாவிட்டாலும் வாரத்திற்கு ஒருமுறை இப்படிச் செய்வதால் துணிகள் வாடையடிக்காமல் மிதமான மணத்துடன் மனதுக்கு சந்தோஷத்தை அளிக்கும்.

- லக்ஷ்மி ரங்கநாதன்.



காலைக் கடனை முடித்த பின்பு (அரை தம்ளர் காப்பி சாப்பிட்டால்தான் முடிக்க முடியும் என்றால் தப்பில்லை) அந்தப் பொடியை சிட்டிகை எடுத்து மோரில் போட்டு குடித்து வர வேண்டும். அதாவது ஒரு தம்ளர் மோருக்கு கால் ஸ்பூன் பொடி என்கிற கணக்கு.

அஜீரணத்தைக் குறைக்கும். வயிறு உப்புசத்தைத் தவிர்க்கும். வெய்ட்டையும் குறைக்கும். குழந்தைகளுக்கு சாதத்தில் சிறிது நெய் விட்டு பிசைந்து கொடுக்கலாம். நார்த்த இலைப் பொடி, நாக்கிற்கு ஒரு பிங்க் கலரையும் கொடுக்கும்.

எடை ஏறக்கூடாது. ஆனால் நெய் இல்லாமலும் சாப்பிட முடியாது என்று எண்ணுபவர்கள் நெய்யை விழுதாகப் போட்டுக் கொள்ளாமல் அரை ஸ்பூன் உருக்கி ஊற்றிக் கொள்ளலாம். கொலாஸ்ட்ரால் குறைவு. எடை குறைப்பிற்கு "நோ ஷுகர் நோ சால்ட்"தான் சிறந்த வழி. மேலும் காலை நேரத்தில் தியானம் செய்ய வேண்டும். சிறுவர்களாக இருந்தால் தாய்க்குக் கூடமாட ஒத்தாசை போன்றவை செய்வதால் அதுவே ஒரு உடற்பயிற்சி போன்று இருக்கும்.

அது மாத்திரமல்ல. எடையைக் குறைக்க, மதிய சாப்பாட்டில் பச்சை கறிகாய் ஜூஸ் தினமும் குடிக்க வேண்டும். தொடர்ந்து மேற்சொன்னபடி ஐம்பது நாட்கள் செய்து பாருங்கள். பின்னாட்களில் கூட எடை உங்களை அணுகவே அணுகாது.

அது போல் இரவு சாப்பிட்டவுடன் சமையல் 'உள் அலம்புதல்' என்கிற பழக்கம் இருந்து வந்தது. அது சாப்பிட்ட ஆகாரம் செரிமானம் ஆவதற்கு உதவியாய் இருந்தது. இப்பொழுது அதெல்லாமும் மலையேறி விட்டது. மொத்த சோம்பேறித்தனத்தின் ரிசல்ட் "வெய்ட்".

**கே : சிலருக்கு குழந்தை பிறந்த பின்பு வயிற்றில் அதிகமாகக் கோடுகள் காணப்படுகிறதே? இதைத் தவிர்க்க முடியுமா?**

பதில் : பிரவசத்திற்குப் பின் விழும் அது போன்ற கோடுகளை தவிர்க்க முடியாது. ஏனென்றால் வயிறு பெரிதாக இருந்து, குழந்தை பிறந்தவுடன் சுருங்கி வரிகள் விழுவது இயற்கை.

கர்ப்பமாக இருக்கும் நாட்களில் வயிற்றைச் சொறியக் கூடாது. Nourishing cream தடவி, இரவு படுத்துக் கொண்டு காலையில் குளிக்கும் பொழுது சுத்தம் செய்து கொள்ளலாம். உள்ளுக்குள் கூலிங் எஃபெக்ட் கொடுக்கிற பதார்த்தங்களைச் சாப்பிட வேண்டும். இளநீர், பார்லி வாட்டர் போன்ற குளுமையான வஸ்துக்களை உட்கொள்ளலாம். அதே சமயம் குளுமை தட்டாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

உடல் குளுமையாக இருக்கும் பொழுது கட்டிகள், தேமல்கள், தோலில் பொரி போன்ற சொரசொரப்பு ஆகியவை வராது. நேந்திரம் பழம் கூட உடல் சூட்டைத் தணிக்கும். ஆனால் ஒரு பழம் சாப்பிட்டால் இரண்டரை மணி நேரத்திற்கு வேறு ஆகாரம் சாப்பிடக் கூடாது.

**கே : நகம் பராமரித்தல் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்?**

பதில்: நகம் பொதுவாக 'பிங்க்' கலரில் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் "ஹீமோகுளோபின்" நன்கு இருக்கிறது என்று பொருள். சிலருக்கு நகம், சோபை இழந்து, பட்பட்டென்றும் உடைந்து விடும். கால்சியம் சத்து குறைவினால இவ்வாறு இருக்கிறது.

பாலில் கால்சியம் சத்து நிறைவாக இருக்கிறது. தினமும் பால் சாப்பிட்டு வரலாம். அதையும் தவிர மருத்துவரின் அறிவுரைப்படி கால்சியம் மாத்திரைகளைச் சாப்பிடலாம்.

நகத்தை சுத்தமாகவும், அழகாகவும் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்கு வழியைக் கூறுகிறேன். கைவிரல்கள்




# ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி,
# நவராத்திரி உற்சவங்களை
# கொண்டாடுவோர் கவனத்திற்கு




விநாயகரின் களிமண் சிலைகள்,

கொலு பொம்மைகள்,

வெவ்வேறு அளவுகளில் **கொலுப்படிகள்** மேலும்

ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு மற்றும் கன்னட

மொழிகளில் விநாயகர் சதுர்த்தி பூஜை

ஆடியோ கேஸட்டுகள் கிடைக்கும்.






உடனே தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

## கிரி டிரேடிங் ஏஜென்சி

தபால் அலுவலகம் எதிரில் மாதுங்கா, மும்பை–400 019.

தொலைபேசி: 4141344, 4122316 ஃபேக்ஸ்: 4143140

---



எங்கள் டோம்பிவலி கிளை

## கிரி டிரேடிங் ஏஜென்சி

5, சுயஷ், பூஜா சினிமா அருகில், உர்ஸேக்கர்வாடி,

டோம்பிவிலி (கிழக்கு).



---

எங்களிடம் எல்லா விதமான பூஜை,

ச்'லோக, பக்தி, கதை, சமையல், ஜோதிஷ, வாஸ்து

நூல்கள், ஆடியோ கேஸட்டுகள், **CD's** அனைத்து

பூஜை, மற்றும் ஹோம பொருட்கள்

கிடைக்கும்.







**அன்பிலே நண்பனை**
**வெற்றி கொள்;**
**களத்திலே எதிரியை**
**வெற்றி கொள்;**
**பண்பிலே சபையை**
**வெற்றி கொள்.**
**தகவல் : பி. ருக்மணிபாய்**

நனையும் அளவிற்கு ஒரு பாத்திரத்தில் வெந்நீர் எடுத்துக் கொண்டு, ஒரு துளி ஷாம்பூவை விட்டுக் கரைத்து, கை விரல்களை ஓரிரு நிமிடங்கள் வைத்துக் கொள்ளவும். பிறகு விரல்களை டவலில் துடைத்து விட்டு, பிரஷ் கொண்டு நக இடுக்குகளைச் சுத்தம் செய்ய வேண்டும். அப்பொழுது விரலில் இருக்கும் இறந்த செல்கள் போய் விடும். மீண்டும் விரல்களைத் துடைத்து, குளிர்ந்த நீரில் அலம்ப வேண்டும்.

அதே போல் உள்ளங்கை சொரசொரப்பிற்கும் ஒரு வழி இருக்கிறது. இரவு படுக்கைக்குப் போவதற்கு சில நிமிடங்களுக்கு முன் 'moistourising cream' என்று கடைகளில் கிடைக்கும் க்ரீமை வாங்கி உள்ளங்கைகளில் தேய்த்துக் கொண்டு, பத்து நிமிடங்கள் ஊறிய பிறகு கைகளில் உறை (கிளவுஸ்) போட்டுக் கொண்டு படுத்துக் கொள்ள வேண்டும். நாளடைவில் சரியாகிவிடும்.

அதிக உஷ்ணமும் உள்ளங்கை சொரசொரப்பிற்கு ஒரு காரணம். உணவில் தேங்காய்ப் பால், பனங்கற்கண்டு, தக்காளி, பேரீச்சம்பழம், பச்சைக் கொத்துமல்லி தழை இவைகளை உட்கொண்டால் சூட்டைத் தணிக்கும். கைகளுக்கு ஒவ்வாத சோப்பு அல்லது பாத்திரப் பவுடர் இருந்தால் உறையை அணிந்து கொண்டு வேலை செய்யவும்.

**கே : முழங்கையின் பொரிப் பொரியானத் திட்டுக்கும், காலில் பித்தவெடிப்புக்கும் ஒரு உபாயம் சொல்லுங்களேன்?**

பதில் : முழங்கையில் சொரசொரப்பு இருந்தால், கடுகு எண்ணெயைத் தேவைப்படும் இடத்தில் மசாஜ் செய்வது போல் உள்ளங்கை சூட்டினால் அழுந்தத் தேய்த்து, அரைமணி நேரம் ஊறவேண்டும். ஊறிய பின் வெந்நீர் ஒத்தடம் கொடுத்து, ஒரு பஞ்சினால் அழுந்தத் தேய்த்து எடுக்க, கருப்பு பஞ்சில் வந்து விடும். பிறகு கசகசா, சந்தனம் இரண்டையும் நைசாக அரைத்து, அந்த விழுதை முழங்கையில் பத்து போன்று அப்பிக் கொண்டு இரவு படுத்து விட்டு, காலையில் வெந்நீர் கொண்டு சுத்தம் செய்ய வேண்டும்.

பித்தவெடிப்பு இருப்பவர்கள், பார்லரில் வைத்தியம் செய்து கொள்வது நல்லது. அதற்குக் காரணத்தை கூறுவதற்கு முன் வீட்டிலேயே செய்து கொள்ள பித்தவெடிப்பிற்கு ஒரு சிகிச்சையைக் கூறுகிறேன்.

பொறுக்குமளவு சூடுள்ள தண்ணீரில் சில துளிகள் ஷாம்பூவை போட்டுக் கலந்து, இரு கால்களையும் அதனுள் மூழ்கி இருக்கும்படி சிறிது நேரம் வைத்திருக்கவும். பிறகு ஒரு டூத் பிரஷ் கொண்டு வெடிப்புகளைச் சுத்தம் செய்து கொள்ளவும்.

கடைகளில் 'ப்யூமி ஸ்டோன்' என்று கிடைக்கும். அது கொண்டு சொரசொரப்பான இடங்களில் தேய்த்து, பின் துடைத்து விட்டு, ஏதாவது nourishing creamஐத் தடவி, சாக்ஸ்ஸைப் போட்டுக் கொண்டு இரவில் படுக்கவும். மூன்று வாரங்கள் தொடர்ந்து செய்து வர பித்த வெடிப்பு நன்கு குறைந்து விடும்.

ப்யூட்டி பார்லரில் 'ஸ்கிராப்பிங் பிளேட்' (scraping Blade) கொண்டு சரியான கோணத்தில் பிடித்து, சீர் செய்து விடுவார்கள். அந்த பிளேடினால சிலர் வீட்டிலேயே செய்து கொள்ளும் பொழுது காலில் வெட்டி விடுகிறது.

டிப்ஸ் : வாய் துர்நாற்றம் இல்லாமல் இருக்க, குடிநீரில் ஏலப்பொடி போட்டு குடித்து வர வேண்டும்.

டங் கிளீனர் கொண்டு நாக்கை தினமும் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

வேண்டாத ரோமங்களை 'வாக்சிங்' செய்து அகற்றுவதற்கு முன் சுத்தமாக குளித்து விட்டு வியர்வை இல்லாமல் ஐஸ் கட்டிக் கொண்டு தேய்த்து, ஒட்டாமல் வைத்துக் கொண்டால்தான் ஈஸியாக இருக்கும்.

பேட்டி : **மாலதி சந்திரசேகரன்**

# வெண்மையின் புதிய நிறம்
# உஜாலா




**உஜாலா**

உஜாலாவின் துரித செயல்திறன் தண்ணீரில் உடனடியாக கரைகிறது மற்றும் துணிகளின் மீது ஆழமாக செயல்பட்டு பளபளக்கும் வெண்மையை சீராக தருகிறது. துணிகளை மீண்டும் துவைக்கும் போது உடனடியாக அழுக்குடன் வெளியே தள்ளப்பட்டு விடப்படுகிறது. உஜாலாவை திரும்ப உபயோகிக்கும் போது புதுப்பித்த வெளிச்சம் பரவுகிறது. ஓரல்-டாக்ஸிஸிடி, சரும அரிப்பு ஆகிய டெஸ்டுகளில் தீங்கற்றது மற்றும் சருமத்திற்கு ஹானியற்றது என சர்ட்டிபிகேட் பெற்ற விஞ்ஞான ரீதியான தயாரிப்பு ஆகும் உஜாலா.

எல்லாவற்றிற்கும் மேல், ஜோதி லேபாரட்டரீஸின் தயாரிப்பு அல்லவா உஜாலா!

**உஜாலா**

கேட்டு வாங்கும் போது உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் மற்றொன்றுமல்ல தருகிறார்கள் என்பதை உறுதிக் கொள்ளுங்கள்

A Product of  JYOTHY LABORATORIES, Mumbai.




# 'திக்கற்றோர்க்குத் துணை நின்ற

வாழ்க்கையில் தங்களுக்கு இழப்பு ஏற்பட்டு விட்டாலோ தோல்வி ஏற்பட்டு விட்டாலோ துவண்டு போய் விடுகிறவர்கள் அநேகர். தற்கொலை வரை சென்று விடுபவர்களும் உண்டு.

ஆனால் தங்களுக்கு ஏற்பட்ட இழப்பு, நஷ்டத்தையே மூலதனமாக்கி மற்றவர்களுக்கு வழிகாட்டியாக வாழ்ந்து, தங்கள் வாழ்க்கையையே மற்றவர்களுக்காக அர்ப்பணித்தவர்கள் வெகு சிலரே. அவர்களுடைய வாழ்க்கை பிற்காலச் சந்ததியினருக்கு ஒரு பாடமாகவே அமைகிறது.

அப்படி ஒரு மைல் கல்லாக, வழிகாட்டியாக வாழ்ந்து மறைந்தவர்தான் இன்று ஆயிரக்கணக்கான நிராதரவான, வறுமையுற்ற பெண்களின் ஆலமரமாக விளங்கும் ஸ்ரீசேவாமந்திரைத் தோற்றுவித்த ஏ.டி. சுந்தரம்மா....

• ஸ்ரீசேவா மந்திரில்...



மாணவிகள் மத்தியில் 'சுந்தரி டீச்சர்' என்றும் தன்னை நெருங்கியவர்களின் மத்தியில் 'அம்மம்மா' என்றும் எல்லோராலும் அன்பாக அழைக்கப்பட்டார் சுந்தரம்மா.

இவர் தோற்றுவித்த 'ஸ்ரீ சேவா மந்திர்' எனும் மாபெரும் பெண்கள் மறுவாழ்வு இல்லம் இன்று ஆலமரம் போல் தழைத்தோங்குகிறது. வாழ்க்கையில் நலிவுற்ற பெண்களுக்கும், கணவனால், குடும்பத்தால் கைவிடப்பட்ட, ஆதரவற்ற பெண்களுக்கும் உதவி புரிந்து யாவரும் வாழ்வில் வெற்றி பெற வழி செய்த 'சுந்தரம்மா' இன்று இப் பூவுலகில் இல்லை. ஆனால் அவர் விட்டுச் சென்ற பாதை இருண்டவர்களின் வாழ்க்கைப் பாதைக்கு பிரகாசமாக ஒளி வீசிக் கொண்டிருக்கிறது.

இந்த இல்லத்தின் சேர்மனும், சுந்தரம்மாவின் சகோதரர் மனைவியுமான திருமதி ஏ.சி. கிருஷ்ணாராவ் இந்த ஆலமரம் நிலைத்து நிற்க பாடுபட்டவர், சுந்தரம்மாவைப் பற்றி நம்மிடம் பகிர்ந்து கொள்கிறார் –

"ஆச்சாரமான தெலுங்கு பிராமண குடும்பத்தில் 1913-ம் வருடம் மூத்தவராக பிறந்த இவருக்கு, ஒரு தம்பியும், தங்கையும் உண்டு. அக்கால பாலவிவாஹப்படி பதிமூன்று வயதில் திருமணம் செய்விக்கப்பட்டு ஒரு மகனுக்குத் தாயாகி அடுத்த வருடத்திலேயே தன் வாழ்க்கைத் துணையை இழந்தார்.

கணவன் பிரிந்த சோகத்தில் மூழ்கிய இவர் தன்னை தேற்றிக் கொண்டு தேச சேவையில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள முடிவு செய்தார். முறையாக பள்ளிக்கூடம் சென்று படித்ததில்லை. தனியாக ஒரு ட்யூட்டர் வைத்து தெலுங்கு, சமஸ்கிருதம், ஹிந்தி பயின்று, வகுப்புகள் நடத்தினார். தானாக ஆங்கிலமும் எழுத படிக்கக் கற்றுக் கொண்டார்.

அப்பொழுது புகழ் பெற்ற சில்ரன்ஸ் கார்டன் பள்ளியில் டீச்சராக வேலைக்குச் சேர்ந்தார். இவரின் எளிய தோற்றமும், அன்புடன் பழகும் குணமும் இவருக்கு நிறைய தோழிகளைத் தோற்றுவித்தது. அங்கிருக்கும் ஹாஸ்டலின் பொறுப்பாளராகவும் பணி ஏற்று, ஒவ்வொரு மாணவியையும் தனி அக்கறை எடுத்து கவனித்து வந்தார். அவர்களுக்கெல்லாம் தலை வாரி கூட விடுவாராம்! பிறகு 1942 முதல் 1979 வரை பிருந்தாவன் ஹாஸ்டலின் வார்டனாக பணிபுரிந்தார். எல்லாருக்கும் ஒரு நல்ல வழி காட்டியாக இருந்து நடத்திச் சென்றார்.

எப்பொழுதும் எல்லோரையும் சுறுசுறுப்பாக இயக்கிக் கொண்டிருப்பார். பிரச்னைகளை எளிய முறையில் தீர்த்து வைப்பார். மேல் படிப்புப் படிக்க ஆலோசனைகள் வழங்குவார். எல்லாவற்றிலும் சுத்தத்தைக் கடைபிடிப்பவர். இவரது



• 'மதர் கிளாஸ்'...

மேற்பார்வையில் அனைத்தும் முறையாக நடந்து வந்தன.

இத்தனைக்கும் நடுவில் ஊறுகாய், சட்னி, ஜாம், ஜூஸ் என்று தயாரித்து விற்று அதை ஏழைப் பெண்களின் படிப்பிற்கும், திருமணத்திற்கும், உறவினர்களுக்கும் செலவழித்து வந்தார். தனக்கு வரும் கொஞ்ச வருமானத்திலும் அடுத்தவர்களுக்கு உதவி புரிந்து கொண்டிருந்தார்.

அவர் ஒரு சிறந்த பாடப் புத்தகம். அறியாத கலையே இல்லை எனலாம். 'எல்லாரும் எல்லாமும் தெரிந்து கொள்ள வேண்டும்' என்பது அவரது குறிக்கோள். இவை அனைத்தும் அவரே சுயமாக முயற்சி செய்து கற்றுக் கொண்டதுதான். தன்னைத் தானே கடுமையான உழைப்பால் மேம்படுத்திக் கொண்டு மற்றவர்களையும் உயர்த்தினார். 'பெண்கள் வீட்டில் சும்மா இருக்காமல் தையல், பாட்டு, கைவினை, ஓவியம் இப்படி எல்லா வற்றிலும் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்றும், அப்பொழுதுதான் அவர்களுக்கு வாழ்க்கையில் பிரச்னை என்று வந்தால் இடிந்து விழாமல் தன்னம்பிக்கையுடன் செயல்பட முடியும்'' என்றும் கூறுவார்.



• சுந்தரம்மா

# சுந்தரம்மா!

அவருடைய கொள்கைகளை நடைமுறைக்குக் கொண்டு வர சில்ரன்ஸ் கார்டன் பள்ளியினை தொடக்கி வைத்த டாக்டர் மற்றும் திருமதி. சர்மா தம்பதிகளின் உதவியோடு அந்தப் பள்ளியின் நாகலிங்க மரத்தினடியில் முதலில் தாய்மார்களுக்காக ''மதர் க்ளாஸஸ்'' எனும் வகுப்பை ஆரம்பித்தார். இதில் ஆதரவற்றவர்களுக்கும், நலிவுற்ற பெண்களுக்கும் பலவித கைத்தொழில்களை கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். இங்கு பல மொழிகள் பயிற்றுவிக்கப்பட்டன.

இவர் சிறியதாக தொடங்கிய 'மதர் க்ளாஸஸ்' விரிவு பெற்று அக்டோபர் 2, 1949-ம் ஆண்டு ''ஸ்ரீ சேவா மந்திர்' எனும் இல்லமாக விரிந்தது'' என்று கூறிய திருமதி. ராவ் அப்பொழுதிலிருந்து தான் இந்த இல்லத்தைத் தலைமையேற்று நடத்தி வருவதாகக் கூறினார். இந்த ஆண்டு ஸ்ரீசேவா மந்திரின் பொன் விழாவாகவும் அமைந்திருக்கிறது என்கிறார். அதன் தொடக்கமாகவே சென்ற மாதம்



• திருமதி. கிருஷ்ணாராவ்




'உலக பிரார்த்தனை மையம்' எனும் பெரிய ஹால் திறக்கப்பட்டது.

சிறு வயதிலிருந்தே 'சில்ரன்ஸ் கார்டன்' பள்ளியில் அங்கேயே தங்கிப் படித்து இன்று டாக்டராகப் பணிபுரியும் டாக்டர். கே. ஆர். அம்புஜா தனக்கு ஒரு வழிகாட்டியாக, கைடாக, தோழியாக விளங்கிய 'சுந்தரி டீச்சரை'ப் பற்றி இப்படி நினைவுகூர்கிறார்–

"எனக்கு ஏதாவது கஷ்டம் என்றால் அதை சுந்தரி டீச்சரிடம்தான் கூறுவேன். நான் என்று இல்லை, எல்லாருக்குமே அவரவர் பிரச்னைகளை அவரவரே அலசி ஆராய்ந்து ஒரு நல்ல முடிவு எடுக்க வழி வகுப்பார். இது எனக்குப் பிற்காலத்தில் எதையும் சமாளிக்க மிகுந்த தன்னம்பிக்கையைக் கொடுத்தது.

சுந்தரி டீச்சரிடம் இன்னும் ஒரு முக்கியமான அம்சம். எல்லா பெண்களையும் அழகாக, நீட்டாக உடை உடுத்தச் செய்வார். எங்களுக்கு சுகாதாரமான, ஆரோக்கியமான உணவு வகைகள் வழங்கச் செய்தார். நான் வளர்ந்து டாக்டரானவுடன் என்னுடைய ஃபீல்டில் மேலும் வளர்ச்சி பெற ஊக்கம் கொடுத்தார்.

அவரது அன்பு மனமும், புரிந்து கொள்ளும் உணர்வும் ஒவ்வொரு பெண்ணின் வாழ்வின் வெற்றிக்குக் காரணமாக அமைந்தது என்பதை நினைக்கும்பொழுது பிரமிப்பாகவுள்ளது. அவரது நினைவு என்றும் அழிக்க முடியாதது."

அன்பே உருவான, சாந்தமான முகமுடைய சுந்தரம்மா இல்லத்தில் இருக்கும் அனைவரிடத்திலும் பரிவுடனும், பாசத்துடனும் பழகுவார். எந்தவித பலாபலன்களையும் எதிர்பாராமல் தான் பிறந்ததே மக்களுக்குப் பணி செய்ய என்பதற்கிணங்க வாழ்ந்து வந்தார் சுந்தரம்மா.

இவர் தோற்றுவித்த இந்த இல்லத்தைக் கட்டிப் பாதுகாத்து அவரது பாணியையே பின்பற்றி எல்லாருக்கும் 'அம்மா'வாக விளங்குகிறார் திருமதி. கிருஷ்ணாராவ்.

தனக்குச் சிறு வயதிலிருந்தே சமூகச் சேவையில் மிகுந்த ஈடுபாடு ஏற்படுத்தியவர் தனது அருமை தந்தையே என்று கூறிய இவர் மேலும் தொடர்ந்து, "என் கணவரும் எனக்கு முழு ஒத்துழைப்பு கொடுத்தார். அவருக்கு அறிவியலில் ஆர்வம் அதிகம். இல்லத்தின் அனைத்து முற்போக்கான திட்டங்களுக்கும் ஒரு தூண் போல் இருந்து செயல்பட்டார். 'பிரேயோக' (prayoga) எனும் அறிவியல் கலைக்கூடம் நிறுவி அனைத்து மாணவர்களுக்கும் அறிவியல் அறிவை வளர்க்க வித்திட்டார்" என்கிறார்.

திருமதி. கிருஷ்ணா ராவிற்கு பஜாஜ் அவார்ட், சிட்டிஸன் அவார்ட் என்று நிறைய விருதுகள் தேடி வந்து அவரை கௌரவப் படுத்தியுள்ளன. இவர் பெண்கள் மேம்பாட்டுக்காக பலவிதத்தில் உழைத்துள்ளார். 'On the job training' என்பதில் முக்கியக் குறிக்கோளாக இருப்பவர். தொழில் கற்றுக் கொண்டே சம்பாதிக்க வழி வகுத்துள்ள இவர், இல்லத்தில் பெண்கள் தயாரிக்கும் பொருட்களை வெளியிடங்களில் விற்று அவர்களுக்குப் பணம் கிடைக்க உதவுகிறார்.

புக் பைண்டிங், பொம்மை செய்தல், க்ராப்ட் வகுப்புகள், ரேடியோ, டீவி மெகானிஸம் போன்ற தொழில் முறைக் கல்வி, பேக்கரி


• திருமதி ராவ் விருது பெறுகிறார்

வகுப்புகள் போன்ற அனைத்தும் 'Earn while Learning' எனும் குறிக்கோளோடு வெற்றிகரமாக நடந்து வருகிறது.

'பெண்கள் மறுவாழ்வு' இலட்சியம் இங்கு குறிக்கோள். கஸ்தூரிபா காந்தி ஹோம், ஜுப்லி ஹோம் எனும் குழந்தைகள் அனாதை ஆசிரமம், வொர்கிங் வுமன்ஸ் ஹாஸ்டல், முதியோர் இல்லங்கள், பள்ளிக்கூடங்கள், மெடிகல் சென்டர் என்று பலவித பிரிவுகளாக இயங்கி வரும் இந்த இல்லத்தில் உற்றார் உறவற்றவர் யாவரும் மதவேறு பாடின்றி சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள்.

மந்திரிலேயே தன் முழு நேரத்தையும் செலவிடும் திருமதி. கிருஷ்ணாராவ் பல திட்டங்



களை வகுத்து வெற்றியுடன் செயல்படுத்தி வருகிறார். அன்பாக பணம் செலவழித்து திருமணம் செய்விக்கப் பெற்றோர் இல்லாத இல்லத்தின் இளம் பெண்களுக்குத் தகுந்த மாப்பிள்ளைகளைப் பார்த்து மணம் செய்வித்து மகப்பேறு வைத்தியமும் செய்கிறார்.

நம்மை கூட்டிச் சென்று இங்குள்ள மையங்களில் பணி செய்யும் பெண்களையும் அவர்கள் உருவாக்கிக் கொண்டிருக்கும் பொருள்களையும் காண்பித்தனர்.

அன்பினாலும், அரவணைப்பினாலும் மனவளர்ச்சியில்லாத குழந்தைகளையும் நன்முறையில் வளர்க்க முடியும் என்பதற்குச் சான்றாக விளங்குகிறது இங்குள்ள ஜூப்ளி ஹோம். தாய், தந்தையில்லாத ஜெயலட்சுமி ஒன்றரை வயதில் இங்கு வந்தாள். அவளுக்குப் பேசவோ, நடக்கவோ தெரியாது. அன்பும் அரவணைப்பும் இல்லாததால் ஒன்றரை வயது ஆகியும் சரியான மனவளர்ச்சி இல்லாமல் இருந்தாள். அனைவரும் அவளை நல்ல முறையில் வளர்க்க தீர்மானித்து பேசக் கற்றுக் கொடுத்து, தாய் இருந்தால் எப்படி பாசத்துடன், அன்புடன் சொல்லிக் கொடுப்பாளோ அப்படிச் சொல்லிக் கொடுத்து, இப்பொழுது அவள் எல்லாக் குழந்தைகள் போலவே மகிழ்ச்சியுடனும், உற்சாகத்துடனும் இருக்கிறாள்.

குமாரி பி. விமலா தனது இளம் வயதில் இல்லத்திற்கு வந்து தன் வாழ்நாள் முழுதும் இல்லத்திற்காகவே அர்ப்பணித்து விட்டவர். முதலில் டீச்சராக வேலைக்குச் சேர்ந்த இவர், 'அம்மா'வின் ஊக்கத்தினால் ஒவ்வொரு பிரிவுக்கும் தலைமைதாங்கி, தானும் வேலையைக் கற்றுக் கொண்டு மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்து இந்த இல்லத்தின் ஒரு அங்கமாக விளங்குகிறார்.

குழந்தை முதல் பெரியவர் வரை ஆதரவற்றவர்களுக்கு அன்பும், பாசமும் காட்டி ஒரு மகிழ்ச்சியான குடும்பம் போல் அரவணைத்துச் செல்கிறது ஸ்ரீசேவா மந்திர். ஒவ்வொரு பெண்களின் வாழ்விலும் விளக்கேற்றி அது அணையாமல் பாதுகாக்கும் இந்த இல்லத்தின் சேவை மகத்தானது. இதற்கு உரமாக இருக்கும் சுந்தரம்மா, திருமதி. ராவ் போன்றவர்களின் சேவை பெண்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டிய ஒன்று.

— காவ்யா

வெற்றிக் கொடி கட்டு!

# இந்தப் படிப்பு மட்டும்தானா?

லன்ச் பிரேக்கில் சாப்பிடப் பிடிக்காமல் கை சாப்பாட்டிலேயே அலைந்து கொண்டிருந்தது. காரணம், காலையில் திருச்சியிலிருந்து வந்த போன் கால்தான்! என் தோழி சொன்ன செய்தியே இந்த மன உளைச்சலுக்குக் காரணம். இரண்டு பிள்ளைகளுக்கும் இரண்டு பெண்களுக்கும் தாய் அவள். ஒரு தொழிலதிபரின் குடும்பப்பாங்கான அன்பு மனைவி அவள். புகுந்த வீட்டின் உறவினர்களையும், தன் உடன்பிறப்பாக கருதி அன்பைப் பொழிபவள். குழந்தை வளர்ப்பிலும், அவர்கள் படிப்பிலும் அவள் காட்டும் அக்கறை



அவள் குடும்பத்தினர் அனைவரையும் கவர்ந்தது. அவளும் தன் நாத்தனார், மைத்துனர் குழந்தைகளையும் பாகுபாடு ஏதும் இன்றி வளர்த்து, அவர்கள் நன்கு படிக்கவும் பாடுபட்டவள். அப்படிப்பட்டவளின் கடைக் குட்டி ஏன் அப்படி நடந்து கொண்டான்?

காலையில் வந்த செய்தி இதுதான். அந்தக் கடைக்குட்டி 22 வயது நிரம்பியவன். 7, 8 தூக்கமாத்திரைகளை விழுங்கி விட்டானாம். மருத்துவமனையில் சேர்த்து தற்போது அபாய நிலையைத் தாண்டி விட்டானாம். அவனுக்கு என்ன வேதனை? ஏன் இந்தச் செயலில் ஈடுபட்டான்? கடைக்குட்டி முரளி படுசுட்டி! சிரிக்கச் சிரிக்கப் பேசுவான்! பெரியோர்களிடம் அன்பும், மரியாதையுடனும் பழகக்கூடியவன். குழந்தைகளைக் கண்டால், குழந்தையாகவே மாறி அவர்கள் மனதிலும் இடம்பிடித்து விடுவான். அவன் எப்படி இந்நிலைக்கு தள்ளப்பட்டான்? எப்படியும் இந்த 'வீக்எண்ட்'ல ஒருநாள் லீவு போட்டு விட்டு நளினா, முரளியைப் பார்த்து வந்தால்தான் மனம் ஆறும் போல் தோன்றியது.

சனிக்கிழமை காலை ராக்போர்டில் இறங்கி தில்லைநகர். 'ஆன்ட்டி, ஆன்ட்டி' என்று அன்புக் குரல் கொடுக்கும் அந்த இளசு பெட்ரூமில் முடங்கிக் கிடந்தது. நளினாவுடன் பேசியதில் விவரம் புரிந்தது. தன் மற்ற குழந்தைகளுக்குச் சமமாக அவனை ஒரு சி.ஏ. ஆக்கி விட வேண்டும் என்று முயன்றிருக்கிறாள் அவள். அவர்கள் டாக்டர் எஞ்ஜினியர், வக்கீல் என்று வந்து விட்டனர். ஆனால் 2, 3 முறை படிப்பில் தோல்வியைக் கண்டு இந்த முடிவுக்கு வந்து விட்டது அந்த இளஞ்சிங்கம்.

முரளியை சென்னையில் உள்ள 10 – 12 வயது உள்ள என் குழந்தைகளுக்கு விடுமுறையாக உள்ளதால்

அங்கு செல்லலாமென்று அழைத்து வந்தேன்.

தங்களுக்குச் சமமாக பட்டம் விடும் முரளி அண்ணாவை கண்டதில் அவர்களுக்கு ஏக சந்தோஷம். ஒரு வாரம் அவர்களுடன் பீச், கிஷ்கிந்தா, கோல்டன் பீச் என்று சுற்றி, விளையாடி பழைய நிலைக்குத் திரும்பினான். பின் அவனிடம் பேச்சுக் கொடுத்து, 'கம்ப்யூட்டர்' கற்றுக் கொள்வதில் ஆர்வம் கண்டு அந்த வகுப்பில் சேர்த்தோம்.

மற்ற பொழுதில் என்னவர் சொன்ன கருத்தை ஏற்றுக் கொண்டான். கார் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு டிரைவிங் கற்றுக் கொள்வது கஷ்டமல்ல. ஆனால் ரிப்பேர் என்று வரும் போது சமாளிக்க முடியாது கஷ்டப்படுகிறார்களே என்று சொன்னபோது, அதை ஏற்று வொர்க்ஷாப்பில் அதையும் கற்றுக் கொள்ள இறங்கினான். அங்கு வேலை கற்று வரும் மற்ற பையன்களுடன் அவன் வேறுபாடு கருதாது, அன்புடன் பழகுவதைக் கண்டு அதன் சொந்தக்காரரே வியந்து புகழ்ந்தார்.

எங்கள் தொழிற்கூடம், அலுவலகம் போன்றவற்றிலும் தன்னாலான ஒத்துழைப்பை நல்கி எல்லோர் மனதிலும் இடம்பெற்றான். சக கீழ்நிலை ஊழியர்களிடம் அதிகாரம் இன்றி, அவர்களுடன் ஒன்றிப் பழகி, அவர்களது விருப்பு வெறுப்பிற்கு மதிப்பளித்து, தன்னையும் அவர்களில் ஒருவனாகவே எண்ணி அவன் பழகியது எங்களையும் கவர்ந்தது.

தன் கீழ் ஆட்களை வைத்து வேலை வாங்கும் திறன் உள்ள அவனை நிர்வாக இயலில் மேற்படிப்பை தொடரச் செய்தோம். அதனை வெற்றிகரமாக முடித்து, 'manpower-organisation' ஒன்றினை திறம்பட நடத்தி வருகிறான். அவன் பெற்ற வெற்றி அவன் பெற்றோர்களையும், வழிகாட்டிக் கொடுத்த எங்களையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியுள்ளது.

வாழ்வில் வெற்றிப் பாதையில் வறுமை, தோல்வி என்ற தடைக் கற்களை அகற்றுவது தவிர, உறங்கிக் கிடக்கும் திறனை தூண்டி விடவும் தெரிந்து கொள்வது அவசியமல்லவா?

— ஆனந்தி

---

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

**பொருள் : விரதகால உணவு** | கடைசி தேதி : 15.9.99

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# குப்பையோ குப்பை!



ஒருநாள் எங்கள் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தேன். தெரு முனையில் இருக்கும் குப்பைத் தொட்டி நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. சுற்றியும் சொறி நாய்கள். குப்பை பொறுக்குபவர்கள் வேறு தொட்டியிலிருந்து குப்பையைக் கிளறிக் கிளறி, தொட்டியைச் சுற்றி குப்பைகளை விசிறிக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது கார்ப்பரேஷன் குப்பை லாரி வந்து நின்றது. அதிலிருந்து இரண்டு பேர் மண்வெட்டியும், கூடையும் எடுத்துக் கொண்டு இறங்கி, மண்வெட்டியால் கூடையில் குப்பையை நிரப்பினர். கூடையில் போடும்போதே பாதி, பக்கங்களில் சிதறின. அதைப் பற்றி அவர்கள் கவலையும்படவில்லை. இவர்கள் கொடுக்கும் கூடையை லாரி மேலிருக்கும் இருவர் லாரியில் வாங்கிக் கொட்டிக் கொண்டிருந்தனர். அவர்கள் கொட்டும்போது சிதறிய குப்பை வேறு. லாரியின் மேலோ சிறிய குன்றளவு குப்பை குவியலாக இருந்தது.

ஒருவழியாக எல்லோரும் ஏறிக் கொண்டு லாரி கிளம்பியதும், லாரி நிரம்பியிருந்ததால், அசைவில், 'ரோடி'ன் இரண்டு பக்கமும் குப்பை அழகாக(!) சிதறிக் கொண்டே சென்றது. ஓரிடத்தில் இருந்த குப்பைகளை இந்தவிதமாக நாலாபக்கமும் சிதற விட இவ்வளவு ஆட்களா என்று நினைத்து எனக்குச் சிரிப்பு வந்தது!

அதே சமயம், நான் அமெரிக்கா சென்றிருந்தபோது, நான் கண்ட குப்பைத் தொட்டிகளும், குப்பை லாரியும் என் கண் முன் வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

ரோடுகளிலோ, பொது இடங்களிலோ அல்லது கடை, ஹோட்டல் முதலியவற்றிலோ இருக்கும் குப்பைக் கூடைகள் அழகாக மூடி போட்டிருக்கும். சுற்றிலும் ஒரு தூசி கூட இருக்காது. நம்மால் அது குப்பைத் தொட்டி என்றே தெரிந்து கொள்ள இயலாது. உள்ளே அந்தந்த தொட்டியின் அளவுக்கேற்ற பிளாஸ்டிக் பைகளை இணைத்திருப்பார்கள். தொட்டி



நிரம்பும், கொஞ்சம் முன்பே, அந்த பிளாஸ்டிக் பையின் வாயைக் கட்டி எடுத்து விட்டு, இன்னொரு பையை ஃபிக்ஸ் பண்ணி விடுவார்கள். ஓரிடத்தில் கூட, ஒரு தடவை கூட குப்பை நிரம்பி வழிவதை நாம் பார்க்க முடியாது.




பெரிய குடியிருப்பு 'அபார்ட்மெண்ட்'களில் ஒரு கட்டடத்திற்கு இரண்டு என்ற கணக்குப்படி ராட்சத சைஸில் சக்கரத்துடன் கூடிய, உலோகக் குப்பைத் (சதுர) தொட்டிகள் வைத்திருப்பார்கள். அதில் குப்பையைப் போடுகிறவர்கள் பிளாஸ்டிக் பைகளில் வாயைக் கட்டி மூட்டைகளாகத்தான் போடுவார்கள். போட வேண்டும்.

வாரம் இருமுறை, க்ளியர் செய்ய குப்பை லாரி வரும். லாரியைப் பார்த்தால் குப்பை லாரி என்று சொன்னால் கூட நம்புவது கடினமாக இருக்கும். அத்தனை சுத்தமாக இருக்கும். டிரைவர் ஓர் ஆள்தான். லாரியை நிறுத்தி விட்டு, இறங்கிப் போய் ஒரு குப்பைத் தொட்டியை இழுத்து வருவார். லாரிக்கு முன் நிறுத்தி விட்டு, லாரியில் ஏறி ஏதோ விசையை இயக்க லாரியின் முன் பக்கம், பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு (உலோக) கைகள் நீளும். அவைகள், குப்பைத் தொட்டியின் பக்கவாட்டில் இருக்கும் கைப்பிடியில் போய் செருகிக் கொள்ளும்.

இனிதான் கண்கொள்ளாக் காட்சி! அந்தக் கைகள் தொட்டியை அலாக்காகத் தூக்கி, லாரியில் கவிழ்க்கும். கவிழ்க்கும் போது ஒரு சிறு துரும்பு கூட இந்தண்டை அந்தண்டை சிதறாது. லாரியில் மேலே மேலே போடும் குப்பைகள் குவியலாகி விடாமல், லாரி உள்ளே இருக்கும் ஓர் விசைப் பலகை முன்னும் பின்னும் மற்றும் பக்கவாட்டிலும் அசைந்து, குப்பையின் லெவலை சமப்படுத்தி விடும்! கைகள், குப்பையைக் கொட்டியதும், சமத்தாக மறுபடியும் தொட்டியை கீழே இறக்கி விட்டு மடங்கிக் கொள்ளும்.

பிறகு டிரைவர் இறங்கி, தொட்டியை இழுத்துக் கொண்டு போய் அதனிடத்தில் வைத்து விட்டு வந்து விடுவார். இதே போல் அடுத்தடுத்த தொட்டிகள். ஒரு தொட்டிக்கு 15 நிமிடங்கள்தான். ஆளும் ஒருவர்தான். அவரின் சுறுசுறுப்பு அலாதி. அதைப் பார்த்தபோது, குப்பையைச் சிதற விட நம் தேசத்தில் 5, 6 பேர் வேலை செய்வதும், சிந்தாமல், சிதறாமல் குப்பையைச் சேர்க்க ஓர் ஆள் மாத்திரம் வேலை செய்யும் அமெரிக்காவையும், மனதுக்குள் ஒப்பிடாமல் இருக்க முடியவில்லை.

ஏதோ அமெரிக்கா போய் வந்ததும், அந்த நாட்டைப் பற்றி பீற்றுகிறாளே என்று வாசகர்கள் கேட்பது காதில் விழுகிறது. உயர்ந்த பாரம்பரியமும் சிறந்த கலாசாரமும் கொண்ட நம் நாட்டிற்கு எத்தனையோ காலம் பின்னால் தோன்றிய நாட்டில் இவ்வளவு உயர்வான ஜனங்களுக்கு நன்மைபயக்கக்கூடிய 'சிஸ்டம்'கள் உருவாகியிருக்கிறதென்றால், ஏன் நம் நாட்டிலும் பின்பற்றக் கூடாது என்று தோன்றும் ஆதங்கத்தின் வெளிப்பாடுதான் இது.

**— விஜயா ராஜன்**

# 7

ஒரு முக்கிய
பின்னணி

''டேய் அங்கே பாரு. ஒரு பொண்ணு''

''ஷ்! நீங்க எதுவும் பேசி காரியத்தைக் கெடுத்திடாதீங்க. நான் ஏற்பாடு பண்றேன்.''

ஆட்டோ அனுவின் அருகில் போய் நின்றது.

''சிஸ்டர்! இந்த நாள் பார்த்து ஏன் வெளியே கிளம்பினீங்க. ஊர் முழுகும் கலாட்டா. நீங்க எங்கே போகணும்?''.

அனு பின்பக்கம் உட்கார்ந்திருந்த இருவரையும் பார்த்துத் தயங்க,

''இறங்குங்கடா. ரெண்டு பேரும் இங்கேயே இருங்க. சிஸ்டரை விட்டுட்டு வந்து உங்களை பிக்கப் பண்ணிக்கறேன். நீங்க ஏறுங்க சிஸ்டர்''

அனு ஏறி உட்கார்ந்ததும் ஆட்டோ கிளம்பியது. சுவிட்ச் போட்டதுபோல் அந்த இருவருமே கூடவே தொற்றிக் கொள்ள ஆட்டோ வேகம் எடுத்தது.

அனுவின் வாயைப் பொத்த முயன்றார்கள். அவளுடைய திமிறலில் ஆட்டோ பேலன்ஸ் இழந்து ஆடியது. துள்ளி அவள் வெளியே விழுந்தபோது தலை எதிரே இருந்த கல்லில் மோதி ரத்தம் தெறித்தது.

ஆட்டோவில் இருந்தவர்களுக்கு போதை நொடியில் இறங்கியது. அசுர வேகத்தில் ஆட்டோ அந்த இடத்தை விட்டு அகன்றது.



செல்லப்பாவின் முகத்தில் அரை நிமிஷம் வரை சலனம் குழப்பம் எல்லாம் கடை விரித்தன.

# கனவெறிது

அதன்பின் தெளிவடைந்தவனாக, "வாங்க வாங்க" என்றான்.

அந்தப் பொண்ணைப் பார்த்து "தங்கச்சி! என்ன பார்க்கறு? நமக்கு வேண்டியவங்க தான். ஏதாவது காபி கிபிக்கு ஏற்பாடு பண்ணு போ" என்று தோளில் கை வைத்து விரட்டினான்.

"என்ன அப்படி திகைச்சுப் போய் நின்னுட்டீங்க? வாங்க உள்ளார. ஏன வீடாச்சேன்னு யோசிக்கறீங்களா?" என்றான் சகஜமான குரலில்.

"சேச்சே! அப்படில்லாம் இல்லை. எங்களை யாருன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்னு தான் திகைச்சுப் போனோம்" என்றான் ராஜேஷ் சமாளிக்கும் விதமாக.

அன்பரசு எதுவும் பேசவில்லை. திரை விலக்கி உள்ளே

## பெ. நாயகி

போனார்கள். வீடு என்று சொல்ல முடியாதபடி அழுக்கும் ஈரப் புழுக்கமும் சேர்ந்தாற் போன்ற ஒரு முடை நாற்றம்.

சோப்பே கண்டிராத ஒரு போர்வை, கசங்கலாக விரிந்திருந்த ஒரு கட்டில். அதை நீவி விட்டு "உட்காருங்க" என்றான்.

"ஒரு நிமிஷம்! மிஸ்டர் செல்லப்பா! நாங்க யாருன்னு..."

"அதான் சொன்னேனே தெரியும்னு. அந்த வித்யாப் பொண்ணுதான் உங்க ரெண்டு பேரைப் பற்றியும் நிறைய சொல்லியிருக்கே" என்று சிரித்தான்.

# கண்டேன்

வித்யாவின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் பளிச்சென்று நிமிர்ந்தான் அன்பரசு. ராஜேஷ் அவனுடைய கையை ரகசியமாகப் பிடித்து அழுத்தினான்.

ஒரே அறைதான் வீடு. சுவர்கள் சுண்ணாம்பு பார்த்து வருடங்களாகியிருக்கும். ஒட்டடைகள் சுவர்களில் மாடர்ன் ஆர்ட்டுகளாகப் படர்ந்திருந்தன. தாழ்வாக தொய்ந்திருந்த கயிற்றில் துணிகள் தொங்கின. மூலையில் ஒரு டிரங்க் பெட்டி. அருகில் மண் பானை. மறு ஓர அலமாரியில் அழுக்கு மாடத்தில் காய்ந்த பூவுடன் ஒரு பெண்ணின் படம்.

''அதுதாங்க விஜயா. என் கண்ணு. என்னைப் பாதியில் விட்டுட்டு தெய்வமாயிட்ட மகராசி'' என்றான் செல்லப்பா. சொடுக்குப் போட்டாற் போல் கண்களில் நீர் கோர்க்க பிழிந்து துடைத்துக் கொண்டான்.

''சொல்லுங்க என்ன விஷயமா வந்தீங்க?''

அன்பரசு திடுக்கிட்டான். என்ன சொல்வது?

ராஜேஷ் தெளிவாகப் பேசினான். "எங்க கம்பெனில ஒரு மெஷின் ஷாப் ஆரம்பிக்கப் போறோம். உங்ககிட்ட ஐடிஐ சர்டிபிகேட் உண்டுன்னா உங்களுக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு பண்ணலாமேன்னு கேட்க வந்தோம்.''

"ரொம்ப நன்றி சார். என் மேலதான் அந்த வித்யா பொண்ணுக்கு எவ்வளவு அக்கறை. உங்களுக்கு வேலையும் சரி பொண்டாட்டியும் சரி. நிரந்தரமில்லாமலே போயிடுச்சே அத்தான்னு சொல்லிட்டே இருக்கும். அதுதான் உங்ககிட்டே சொல்லி அனுப்பிச்சிருக்கும்னு நினைக்கறேன்.''

திரை விலக அந்தப் பெண் இரண்டு சிறிய தம்பிகளுடன் உள்ளே வராமல் வாசலில் நின்றாள்.

"உள்ளே வா கல்பனா'' என்றான். "நம்ம பக்கத்து வீட்டுப் பொண்ணுங்க. தங்கச்சி மாதிரி. எனக்கு வேண்டிய எல்லாம் இதுதான் பாசமா பார்த்துக்கும்.''

''அடிக்கடி வந்து போய் இருங்க. அப்பதானே உறவு நீடிச்சு இருக்கும்'' என்றாள் கல்பனா.

வெளியே வந்து பைக்கைக் கிளப்பும் வரை இருவரும் எதுவும் பேசிக் கொள்ள வில்லை.

''செல்லப்பாவுக்கு ஏதோ வேலைக் கெல்லாம் ஏற்பாடு பண்ற போல?''

ராஜேஷ் சிரித்தான். "அவன் அது சம்பந்தமாக ஏதாவது பேசினானா பார்த்தியா? ஏன்னா வித்யா பற்றி அவன் சொல்றது பொய்தான்னு நமக்குத் தெரிஞ்ச மாதிரியே நான் பொய் சொல்றேன்னு அவனுக்கும் தெரியும். இவன் வீட்டுக்கு வெளியே வர்ற ஜாதியில்லை.''

"சே! வீடா அது? கன்றாவி.''

"பாசமா ஒரு தங்கச்சி வச்சிருக்கான்.''

''தூ!'' என்று துப்பினான் அன்பரசு. "ராஸ்கல்ஸ், அந்த நல்ல வார்த்தையையே தமிழில் ஆபாசமாக்கிட்டாங்க. ஒன்று நிச்சயம். அந்த விஜயாவை இவன் கொன்றானோ இல்லையோ, வித்யா இந்த இடத்தில் வாழ்க்கைப்பட்டு வர்றது மாதிரியான ஏற்பாடு நடந்தால் நானே அவனைக் கொன்று விடுவேன். இந்த நரகத்தை விட அவளுக்கு சாவே பெட்டர்.''

"ஈஸி! ஈஸி!'' என்று அவன் தோள்களில் தட்டிக் கொடுத்தான் ராஜேஷ்.

**வி**த்யா புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். குட்டிக்கதையாக அதில் ஒரு முல்லா நஸ்ருதீன் ஜோக் இருந்தது.

முல்லா மீது திடீரென்று ஒரு பெண்ணை அவர் கெடுத்து விட்டதாக வழக்கு போடப்பட்டது. முல்லா அப்படி ஒரு காரியம் செய்யவே இல்லை. அது முல்லாவுக்கு மட்டுமின்றி அவரைச் சுற்றி உள்ளவர்களுக்கும் தெரியும். கோர்ட்டில் முல்லா குற்றவாளிக் கூண்டில் நிற்க எதிரே



**பச்சை மிளகாய் நெறைய வாங்கி வைச்சிட்டீங்களா? குளிர் சாதனப் பெட்டிக்குள் வைத்தாலும் அழுகிப் போய் விடுகின்றன இல்லையா? மிளகாயை வாங்கியதும் காம்பை எடுத்து விட்டு பிளாஸ்டிக் டப்பாவுக்குள் போட்டு பிறகு குளிர்பதன பெட்டிக்குள் வையுங்க. பச்சை மிளகாய் பத்து நாட்களானாலும் புதுசு போலவே இருக்கும். அழுகியும் போகாது.**

**— சி. கௌதமி**

# என்றென்றும் மறக்க முடியாத
# தேன் நிலவு



உங்கள் வாழ்வில் மலர...

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வழங்கும்

## இன்பச் சுற்றுலாவைக்

கண்டு களித்திடுங்கள்!



**ஏற்காடு**
**ஊட்டி**
**கொடைக்கானல்**
மற்றும்
**திருச்சிராப்பள்ளி**



### கட்டணம்

(ஒரு நபருக்கு)

| | | |
|---|---|---|
| குளிர்சாதன வசதியில்லாத பேருந்து | – | ரூ. 1,700/– |
| குளிர்சாதன வசதியுள்ள பேருந்து | – | ரூ. 2,500/– |

(கட்டணம் தங்குமிட வசதியும் பேருந்து பயணமும் உள்ளடக்கியது)
ஒவ்வொரு திங்கட்கிழமையும் சென்னையிலிருந்து புறப்பட்டு,
வெள்ளிக்கிழமை மாலை சென்னை வந்தடையும்.

மேலும் விவரங்களுக்கு அணுகவும்.

**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்,**



விற்பனைப் பிரிவு :
எண். 4, ஈ.வெ.ரா. சாலை,
(சென்ட்ரல் இரயில் நிலையம் எதிரில்),
பார்க் டவுன், சென்னை–600 003.



போன் : 5382916, 5360294, 5384356 பேக்ஸ் : 5361385
Internet Address : http//www.tamilnadu tourism com.
தந்தி : "Tamil tour" E-mail : ttdc@md3.vsnl.net.in

### ஆன்மீக சுற்றுலாக்கள்

*நவகிரக சுற்றுலா தரிசனம் *தேவியர் தரிசனம் (ஒரே நாளில் ஒன்பது ஆலயங்களில் தரிசனம்)* *திருமால் தரிசனம் (ஒரே நாளில் 9 வைணவ ஆலயங்களில் தரிசனம்)* தொண்டை நாட்டு திருப்பதிகள் சுற்றுலா (காஞ்சிபுரத்தை சுற்றியுள்ள வைணவத் திருத்தலங்கள்) * சுருட்டப்பள்ளி சுற்றுலா* முடிச்சூர் – மகாமேரு – வல்லக்கோட்டை மத்தூர் – திருத்தணி – பெரியபாளையம் சுற்றுலா.

DIPR/390/DIS/99/SAS

சாட்சிக் கூண்டில் அந்தப் பெண் நின்றிருந்தாள். நீதிபதி முல்லாவிடம்,

''உன் மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றச் சாட்டு உண்மையா? நீ இந்தப் பெண்ணை மானபங்கம் செய்தாயா?'' என்று கேட்டார்.

முல்லா, ''ஆமாம் நீதிபதி அவர்களே! குற்றத்தை ஒப்புக் கொள்கிறேன்'' என்றார். அவருக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. அவர் சிறைக்குச் செல்லும் முன் நண்பர்கள்,

''மடையா! செய்யாத ஒரு குற்றத்தை ஏன் ஒப்புக் கொண்டாய்?'' என்று கேட்டார்கள்.

முல்லா சொன்னார். ''அந்தப் பெண்ணின் பேரழகைப் பார்த்தேன். என் வாழ்நாளிலோ சொப்பனத்திலோ கூட அவளை அடையத் தகுதியற்ற எனக்கு அப்படி ஒரு காரியத்தைச் செய்ததாக வலிய ஒரு சர்டிபிகேட் கிடைக்கிறது என்றால் நான் ஏன் மறுக்க வேண்டும்? அட்லீஸ்ட் அடுத்தவர்களின் கற்பனையிலாவது நான் அவளை அடைந்து விட்டுப் போகிறேனே.''

வித்யாவுக்குச் சிரிப்பு வந்தது. புத்தகத்தை அப்படியே நெஞ்சின் மீது போட்டுக் கொண்டு விட்டத்தை வெறித்தாள்.

கண்கள் கனவுக்கு அலை மோத எண்ண நுரைகள் கரை ஒதுங்கத் தொடங்கின.

''உங்க அண்ணன் பையன் திடீர்னு இங்கே கத்த ஆரம்பிச்சதும் நாங்களெல்லாம் கசந்து போயிட்டமோ'' என்று தொடங்கி அன்றொரு நாள் செல்லப்பா வித்யாவையும் அன்பரசுவையும் இணைக்கும் விதமாகப் பேசிக் கொக்கரித்தது நினைவு வந்தது.

இந்த நிமிடத்தில் வித்யாவும் முல்லாவின் நிலையில்தான் இருந்தாள்.

'அப்படியாடி?' என்று யாராவது கேட்டால் ஆமாம் என்று சொல்லிக் கொண்டு அதிலாவது ஒரு சந்தோச உணர்வை அனுபவிக்கத் தயாராக இருந்தாள்.

பொதுவாகவே அவ்வப்போது செல்லப்பா அந்த வீட்டுக்கு வந்து போவது அவளுக்கு வெறுப்பை ஏற்படுத்தத் தொடங்கியிருந்தது. அதுவும் அன்பரசு வந்து போனால் அடுத்த கொஞ்ச நேரத்தில் செல்லப்பாவும் வருவது ஒரு கட்டாய நிகழ்ச்சியாக ஆகி விட்டிருந்தது.

அவன் வந்தாலே அறையினுள் போய் கட்டிலில் குப்புற விழுந்து கொள்ளும் வித்யாவுக்கு ஹாலில் நடைபெறும் உரை



மாலை டிபனுக்கு போட்ட பகோடா, இரவு என் கணவர் வரும்போது நமுத்துப் போயிருந்தது. உடனே அடுப்பில் வெறும் வாணலியைப் போட்டுச் சுட வைத்து அதில் பக்கோடாவை போட்டு நன்றாகப் பிரட்டினேன். பகோடா மறுபடியும் கரகரப்பாக, அப்பொழுதுதான் செய்தது போல ஆனது.

— லக்ஷ்மி ரங்கநாதன்

யாடல்கள் வார்த்தை விடாமல் கேட்கத்தான் செய்யும்.

இவர் எதற்கு இப்போது வந்தார் என்று தோன்றும்.

அருமையான வசந்த சூழலில் அருவிக் குளியலில் இருந்து வெளி வந்த மறுகணம் சேற்றில் கால் தவறி விழுந்து விட்டது போன்ற உணர்வு ஏற்படும்.

அன்பரசு கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் போயிருந்த சுகந்தம் நீடிக்கும் முன்பே அத்தான் வந்து அதனைக் கலைத்தது போல் இருக்கும்.

'என்ன இருந்தாலும் அவர் உன் அக்காவின் கணவர்' என்று உள்மனம் நினைவு படுத்தினாலும் ஏனோ ஒட்ட மறுக்கும். வீம்பான ஒரு கணத்தில் அக்காவே போய் விட்டாள், அவள் கணவருக்கு இங்கென்ன வேலை என்று கூட எண்ணம் ஏற்படும்.

கொஞ்ச நாட்களாகவே அன்பரசுவின் வருகை மனதிற்கு ஓர் ஆறுதலையும் தெம்பையும் அளித்து வருவதை அவள் உணராமல் இல்லை. எந்தவிதமான ஆறுதல் என்கிற மனசாட்சியின் கேள்விக்கு அவளால் விடை அளிக்க முடிவதில்லை. கள்ளத்தனமான நினைப்புகள் எதுவும் ஏற்பட ஆரம்பிக்கிறதோ என்கிற உறுத்தல் வரும்போது மட்டும் அழுகை அழுகையாக வரும். காரணமே அறியாமல் கண்ணீரில் கரைந்து தீர்ப்பாள்.

இன்றும் கிட்டத்தட்ட அந்த நிலைதான். மனம் இறுக அடிவயிறு பிசைபட நெற்றி





**வெண்ணெய் காய்ச்சி இறக்குமுன் ஒரு சொட்டு புளிப்பு மோரைத் தெளித்தால் நெய் மிகவும் வாசனையாக இருக்கும்.**

**- லக்ஷ்மி ரங்கநாதன்**



கருங்க கண்களில் நீர்ப்படலம் விரிய ஆரம்பித்தது. தனிமை என்பது ஒரு வகையில் தாய்மடி போன்றது. அது தரும் கதகதப்பில் ஆசை தீரக் கொஞ்ச நேரம் அழுது தீர்க்கும் வேகம் வந்தது.

வாசல் கதவின் மணி அடித்தது.

எழுந்து போய்த் திறந்தாள்.

ராஜேஷ்!

கூடவே அன்பரசுவும் இருக்க மாட்டாரா என்று தறிகெட்டு ஓட முயன்ற மனக் குதிரையை அடக்க கஷ்டப் பட்டவளாக உடனிருந்த பெண்ணைப் பார்த்தாள்.

யார் இவள்?

"என்னை ஞாபகம் இருக்கா? அன்பரசு பிரண்ட்."

"வாங்க" என்று கதவுகளை விரியத் திறந்து வரவேற்றாள். "அம்மா வீட்டில் இல்லை. கோவிலுக்குப் போயிருக் கிறாள்."

உள்ளே போய் உட்கார்ந்தார்கள்.

"இவங்கதான் மாதவி. உங்க அன்பரசு வின் தங்கை. இவங்க வித்யா."

வித்யாவுக்கு சட்டென்று கண்களில் நீர் கோர்த்தது. ஆனந்தத்திலா, உங்க அன்பரசு என்று சொன்னானே அந்த வார்த்தைகள் தந்த சிலிர்ப்பிலா என்று தெரியவில்லை.

மாதவி எழுந்து வித்யாவின் அருகில் போய்த் தோளில் கைவைத்து "உங்களை முதன்முறையாகப் பார்க்கிறேன். அழகா இருக்கீங்க. அத்தை எப்போ வருவாங்க?" என்று கேட்டாள்.

வித்யா ஆனந்தத் திணறலில் இருந்தாள். பதிலே எழவில்லை. பகவானே! என்ன நடக்கிறது இங்கே?

"நீங்க இருவரும் பேசிட்டிருங்க. எனக்கு ஒரு சின்ன வேலை இருக்கு. அரைமணி நேரத்தில் வருகிறேன்" என்றபடி அவர் களைத் தனித்து விட்டுக் கிளம்பினான் ராஜேஷ்.

அவன் திரும்பி வந்தபோது ஹாலில் கலகலப்பான சிரிப்பும் பேச்சுமாக இருந்தது.

பார்வதியும் வந்து விட்டிருக்க, சம வயதுப் பெண்கள் இருவரும் அருகருகே ஒருவர் கைகளில் அடுத்தவர் கைகளைப் பிடித்தபடி பேசும் அளவு அன்னியோன்யம் ஏற்பட்டிருந்தது.

வித்யாவின் சிரித்து மலர்ந்த முகத்தை முதல் தடவையாகப் பார்த்தான் ராஜேஷ். அன்று செல்லப்பா வீட்டுக்குப் போய்த் திரும்பும்போது அவனைக் கொன்று விடுவ தாக அன்பரசு பொங்கிப் பேசியது நினைவில் வந்து போனது.

"உங்களுக்கு எப்படி நன்றி சொல் றதுன்னே தெரியலை தம்பி. ஒரே ஊருக்குள் இருந்தும் ஒரு வயசுப் பிள்ளைகள் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொள்ளாமல் இவ்வளவு காலம் கடத்தியிருக்காங்க. இப்போ இவங்க ரெண்டு பேரும் இப்படி சிரித்துப் பேசிப் பார்க்கும்போது கடவுளே இந்த சந்தோஷத்தோட என் உயிர் போயிடக் கூடாதான்னு தோணுது" என்றாள் பார்வதி தழதழத்த குரலில்.

ராஜேஷும் சிரித்தான். "அதுக்குள்ள அவசரப்பட்டா எப்படி? நீங்களும் உங்க அண்ணனும் பக்கத்தில் உட்கார்ந்து பேசும் காட்சியை நாங்களெல்லாம் பார்க்க வேண்டாமா?"

பார்வதி குபுக்கென்று கண்ணீர் வர அழுதாள்.

"ஆண்டவா! அந்த நாளும் வருமா?"

"நிச்சயம் வரும் அத்தை. வரும் என்ன, வந்தாச்சு" என்று தேற்றினாள் மாதவி.

யாருடைய மறுப்பையும் சட்டை செய் யாமல் அத்தை அவசரமாக பாயசத்துடன் சமையல் செய்தாள்.

கொஞ்ச நேரத்தில் மாமா சிவராமனும் வந்து விட பரஸ்பர அறிமுகம் முடிந்து அவரும் சந்தோஷத்தில் பங்கு எடுத் தார்.

சாப்பாடு முடிந்து பெண்களைத் தனியே விட்டு ராஜேஷும் சிவராமனும் மொட்டை மாடிக்குப் போய்ப் பேசிக் கொண்




என் உயிர் தோழி. எத்தனையோ வருடங்களாக என்னுடன் நெருங்கிப்பழகி வருகிறாள். தேவைப்படும் போதெல்லாம் அருகிலேயே இருப்பவள். எங்களுக்கிடையே எந்தவிதமான ஒளிவு மறைவும் கிடையாது. அதனால்தான் என் கவலையை பங்கிட அவளை நாடினேன்.

விஷயம் என்னவென்றால், நானும் என் கணவரும் இப்போதைக்கு ஒரு குழந்தை உண்டாவதை விரும்பவில்லை. ஓரிரு வருடங்களுக்குப் பிறகு தேவை என்று தோன்றினால் அப்போது பார்த்துக் கொள்ளலாம். ஆனால்... எப்படி... என்று தான் தெரியவில்லை.

அப்பத்தான் என் தோழி உமா **சஹேலியைப்** பற்றி சொன்னாள். சிறந்த பாதுகாப்பான கருத்தடை மாத்திரை என்றும் சொன்னாள்.

எனக்கோ சந்தேகம்! ''மாத்திரையா? பக்க விளைவுகள் உண்டாகுமோ?'' என்றேன். கடந்த ஐந்து வருடங்களாக, தானே அதை உபயோகித்து வருவதாக கூறினாள்.

அவள் எப்போதும்போல கட்டுக்குலையாத உடல்வாகுடன் கச்சிதமாகத்தானே இருக்கிறாள் என்பதையும் கவனித்தேன். ''எடை அதிகரிப்பதில்லை... மயக்கம், வாந்தி போன்ற இதர பிரச்சினைகளும் இல்லை'' என்று அவள் கூறினாள். நம்பாமல் இருக்க முடியவில்லை. நம்பினேன்.

என் டாக்டரை கலந்தாலோசித்தேன்... இப்போது நானும் உபயோகிக்கத் தொடங்கியுள்ளேன். என் கவலைகள் எல்லாம் பறந்து போய்விட்டன. இதில் எனக்கு மிகவும் பிடித்த விஷயம் என்னவென்றால் ஆரம்பத்தில் 3 மாதம் வாரமிருமுறை எடுத்துக்கொண்டபின் தொடர்ந்து வாரம் ஒரு முறை உபயோகித்தால் போதும் என்பதே...

இப்போது என் சந்தோஷத்திற்கு தடையுமில்லை அளவுமில்லை. என் புன்னகையும் மாறவில்லை... இனி உங்களது முறை...

ஆம்! கருத்தடை பற்றியும் சஹேலியைப் பற்றியும் மேலும் விபரங்கள் அறிய விரும்புகிறேன்... தயவு செய்து அனுப்பவும்.

பெயர் : .............................. வயது : ..............

முகவரி : ..................................................

..................................................

**ஹிந்துஸ்தான் லேடக்ஸ் லிமிடெட்**

(இது ஒரு இந்திய அரசு ஸ்தாபனம்)

கருத்தடை செய்திகள் சேவை, த.பெட்டி எண்.8268,

வேளச்சேரி, சென்னை - 600 042.




**நம்பகமான கருத்தடை சாதனம், ஆண்டுக்கணக்கில்**

O&M 3085/TM

டிருந்தார்கள்.

''தம்பி! இளமைக் காலத்தில் நான் ரொம்பவே ஆடியிருக்கேன். பேராசை, பொறாமை, புகைச்சல்களின் மொத்த வடிவமா இருந்திருக்கேன். என்னுடைய ஆணவத்தாலேயேதான் இந்த இரண்டு குடும்பமும் சேர வழியில்லாமல் போச்சோ என்கிற உறுத்தல் ரொம்ப நாளா என்னைக் கொல்லுது.

என் ஆட்டத்துக்கெல்லாம் ரொம்பவே அனுபவிச்சிட்டேன் தம்பி. பார்வதி முன்னால் காண்பிச்சுக்கறது இல்லையே தவிர மனசளவுல நான் நொறுங்கி சுக்கல் சுக்கலா ஆகி வருஷங்களாச்சு. உங்களுக்கு நம்பிக்கை வருமான்னு தெரியலை. இந்த வீட்டில் மனம் நிறைவான சிரிப்பு சத்தம் பல வருஷங்களுக்கப்புறம் இன்னிக்குத்தான் நான் கேட்கிறேன்.''

அவருடைய உள்ளங்கைகளைப் பிடித்து அழுத்தினான் ராஜேஷ்.

''கவலைகளை விடுங்க மாமா. இனிமேல் எல்லாம் நல்லதாகவே நடக்கும்னு நினைங்க. நம்பிக்கையோட இருங்க. பல நல்லவர்கள் விஷயத்தில் பார்த்தும் இருக்கிறேன், கேள்விப்பட்டும் இருக்கிறேன். சிறிய பிணவும் பிரிவும் இரு பக்க மௌனங்களாலேயே பிரம்மாண்டமாகிப் போகுது. எனக்கென்னவோ நீங்களும் அத்தையும் ஒரு தடவை அன்பரக வீட்டுக்குப் போனால் எல்லாம் சரியாகி விடும்னு தோணுது.''

''நான் மைத்துனர் வேதமூர்த்தியிடம் மன்னிப்பு கேட்கக்கூட தயாரா இருக்கேன்





**ரவை உப்புமா கிளறும்போது தண்ணீரோடு பாதி மோர் கலந்து உப்புமா செய்தால் உப்புமா சுவையாக இருக்கும். நெஞ்சு கரிக்காது. எளிதில் ஜீரணமாகும்.**

**— லக்ஷ்மி ரங்கநாதன்**

தம்பி. தயக்கமும் பயமும் விலக மாட்டேங்குது.''

''எனக்கு சட்டுனு ஐடியா வரலை. இந்த மாதிரி விஷயங்களில் ஆம்பளை தடாலடியா யோசிச்சா பொம்பளைங்க நாசூக்கா யோசிப்பாங்க. அவங்ககிட்ட இந்தப் பொறுப்பை விட்டுடலாம்.''

''ஏதோ நல்லது நடந்தா சரி தம்பி.''

கீழே இறங்கி வந்தார்கள்.

விடை பெறும்போது மாதவி வித்யாவிடம் சொன்னாள். ''இப்போ கொஞ்ச நாளா பாரதியார் கவிதை எல்லாம் படிக்கிறேன். அதிலே ஒரு வரி ரொம்ப பிடிச்சது. 'மனக் கவலை வளர்த்திடல் வேண்டுவோர் ஒரு காரணம் காணுதல் கஷ்டமோன்னு' எவ்வளவு நிஜம். நாமெல்லாம் ஏதாவது ஒரு காரணத்துக்காக கவலைப்படறதை விட கவலைங்கற பேர்ல முடங்கிக் கிடக்கறதுக்காக ஏதாவது காரணம்தான் தேடிட்டிருக்கோம். அதனால உங்களுக்குச் சொல்றேன். இனி மேல் உங்க மனசுல கவலைங்கற விஷயமே வரக் கூடாது. முகத்துல இருக்கற சிரிப்பு மாறவே கூடாது. நான் அடிக்கடி வருவேன்.''

ராஜேஷ் மூக்கின் மீது விரல் வைக்காத குறையாக அயர்ந்து போய் மாதவியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

காரில் போய்க் கொண்டிருக்கும்போது மாதவி சொன்னாள். ''இங்கே கூட்டி வந்து இவர்களுடைய தொடர்பைப் புதுப்பிச்சு விட்டதற்காக உங்களுக்கு நன்றி சொன்னால் சம்பிரதாயமாக இருக்குமேன்னு பார்க்கறேன்.''

''ஆமாம். விட்டு விடுங்கள். பை த பை நீங்க பூனா எப்போ போறீங்க?''

''பதினெட்டாம் தேதி.''

''இன்னும் பத்து நாள் இருக்கு. அதுக்குள்ள இரண்டு வேலைகள் பாக்கி இருக்கு.''

''சொல்லுங்க.''

''உங்க அத்தையும் அப்பாவும் சந்திக்கணும்.''

''செய்யணும்.''

''அம்மாவை டாக்டரிடம் காட்டணும். உங்க ஏரியா பக்கத்திலேயே டாக்டர் செல்விக்கு நாங்க ஏ.சி சப்ளை பண்ணியிருக்கோம். நாலஞ்சு நாள் முன்பு அவங்ககிட்ட பேசிட்டிருக்கும்போது அம்மா பற்றிச் சொல்லிட்டிருந்தேன். அழைச்சிட்டு வரச் சொன்னாங்க.''

''டாக்டர் செல்வியா? அவங்க அப்பாயின்மென்ட் கிடைக்கறதே ரொம்ப கஷ்டம்னு சொல்லுவாங்களே...'' என்று வியந்தாள் மாதவி.

(தொடரும்)

# இன்னொரு ஜனனம்

சடாரென்று நெஞ்சு வலித்தது. வலது கையால் இடது மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டேன். மெல்ல நகர்ந்து ஈஸிசேரை அடைந்து நிதானமாய் சாய்ந்து கொண்டேன்.

வலி. வலி. சுருக், சுருக்கென்ற குத்தல். இன்னும் எத்தனை நிமிடங்களோ. சாவின் மறுபக்கம் எப்படி இருக்குமோ. இதுதான் மரண பயமோ. எழுபது வருடமாய்ப் பழகிய உலகைப் பிரிய இன்னும் மனமில்லையே.

அப்படியே வலது கையால் மார்பை பிடித்துக் கொண்டு, பக்கத்தில் டேபிளில் சாரதா தயாராய் வைத்திருந்த மாத்திரையை இடது கையால் வாயில் போட்டு, உள்ளே தள்ளினேன். இனி சரியாகிவிடும். மாத்திரை மேல் அவ்வளவு நம்பிக்கை.

எப்போதும் வரும் வலி; எப்போதும் விழுங்கும் மாத்திரை; எப்போதும் போலவே சரியாகி விடும். கண்களை மூடி ஈஸிசேரில் ஓய்வாய்ச் சாய்ந்து கொண்டேன்.

அந்த ஹார்ட் அட்டாக்கிற்கு பிறகு எத்தனை முறை இந்த வலி வந்து விட்டது. ஆனாலும் ஒவ்வொரு முறையும் பயம். கிழட்டு உடலை விட மறுக்கும் வெறி. மாத்திரை தேடிப் பிரம்மப் பிரயத்தனம். வலி போனதும், மறு பிறவி கண்ட அயர்ச்சி.

ஏன் இப்படி? எதற்கு எனக்கு இன்னும் வாழ் ஆசை? உலகில் இனியும் என்னதான் பார்க்க வேண்டும்? இந்த எழுபது வருடங்களில் நான் காணாத சுகமா, துக்கமா.

சின்ன வயதிலேயே தகப்பனாரின் இழப்பு. மூன்று தங்கைகளைக் கரைசேர்க்க நாயாய் ஓட்டம். பெண்டாட்டியும் நான்கு குழந்தைகளுமாய்க் குடித்தனம். இடையில் மனைவியின் எதிர்பாராத பிரிவு. தனி ஆளாய்க் குழந்தைகளை மேலே கொண்டு வந்த அலைச்சல். பிற்காலத்தில், குழந்தைகளின் அலட்சியம் தந்த விரக்தி. குழந்தைகளின் குழந்தைகளைப் பார்க்கக் கிடைத்த சந்தோஷம்.

என்ன பார்க்கவில்லை நான்? இனியும் எதற்கு இந்த வாழ்க்கை?

எவ்வளவு உழைத்தாயிற்று நான். இப்போது யாராவது என்னை மதிக்கிறார்களா? இந்தக் குடும்பத்திற்காக நான் பட்ட கஷ்டங்களை யாராவது எண்ணிப் பார்க்கிறார்களா?' ரிட்டயர்ட் ஆன மனிதன் மடி வற்றிய கறவை மாடு.

இப்போதே நான் செத்துப் போனால் இவர்கள் எல்லாம் என்ன செய்வார்கள் என்று யோசித்துப் பார்த்தேன்.

முதல் பையன் மூர்த்தி எல்லோருக்கும் தந்தி கொடுத்துவிட்டு, 'மேல காரியங்களை கவனிங்க' என்பான். இரண்டாம் பையன் ரவி எனக்குக் கர்ண மந்திரம் சொல்ல பாதி விஸ்கியில் எழுந்து வர வேண்டுமா என்று பம்பாயில் யோசிப்பான். பெண்கள் ராதாவும், ரேவதியும் அழுகைப் போட்டி போடுவார்கள். தங்கைகள் மூவரும் 'இவங்களுக்கு லீவு கிடைக்கலியே' என்று அங்கலாய்த்து, அழுது, தலை முழுகிவிட்டு வத்தக் குழம்பு வைக்கப் போய் விடுவார்கள். மாட்டுப் பெண் சாரதா, 'இனிமே காரியம், அது இதுன்னு பத்து நாள் என் முதுகு உடைஞ்சிடும்' என்று சலித்துக் கொள்வாள். பேரனும், பேத்தியும் 'ஹையா... ஸ்கூலுக்கு மட்டம்' என்று சந்தோஷப்படுவார்கள்.

எல்லாம் முடிந்து, என் சிதைக்கு நெருப்பு வைத்து விட்டு வந்ததும் என் வீட்டிற்கும், என் பாங்க் பாலன்ஸிற்குமாக அடித்துக் கொள்வார்கள்.

என் கடைசி பெண் ரேவதிக்குப் பிரசவம். மூர்த்தியும், சாரதாவும் ஹாஸ்பிடலுக்குப் போய் விட்டனர், என்னைத் தனி ஆளாய் விட்டு விட்டு.

ஒரு ஹார்ட் பேஷண்ட்டை தனியாய் விட்டு விட்டுப் போகிறோமே என்று அவர்கள் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. நான் கிழம். ரேவதி இளையவள். கிழம் இருந்தால் என்ன, செத்தால் என்ன?

என்ன இது? ஏன் இப்படியெல்லாம் யோசிக்கிறேன். இடுப்பு வலி வந்த கர்ப்பிணிப் பெண்ணோடு



மூர்த்தியும், சாரதாவும் போனதில் என்ன தவறு? ஏன் என் குழந்தை களையே எதிரிகளாய் நினைக் கிறேன். பொறாமையா? முதுமை தந்த துயரமா? சாவதற்குத் துணிவின் மையா? கையாலாகாத்தனமா? பயமா?

இன்னும் வலது கை இடது மார்பை அழுத்திப் பிடித்திருப்பதை உணர்ந்தேன். உள்ளே இதயம் துடிப்பது தெரிந்தது. என்றோ படித்த விஞ்ஞானம் ஞாபகம் வந்தது.

புஸ்ஸென்று இதயம் விரிய இரத்தம் உள்ளே புகுந்து வலது இடது ஆரிக்கிள், வென்ரிக்கிள் என்று பயணித்து, சுத்த மாகி, பின் இதயம் பசக்கென்று சுருங்கும்போது வேகத்துடன் வெளியேறி...

சே! எனக்கு உள்ளேயும் இது தானா?

எப்போது துடிக்க ஆரம்பித்திருக்கும் என் இதயம்? தாயின் கருவறையில் குழந்தை இருக்கும்போதே இதயம் துடிக்க ஆரம்பித்து விடுமாம். அப்படிப் பார்த்தால்... சுத்தமாய் எழுபது வருடங்கள். யப்பா! ஒரு ஐந்து வினாடி ரெஸ்ட் கூட இல்லாமல் எழுபது வருடங்களாய்த் தொடர்ந்து துடிக் கும் என் இதயம்... என் வலது கைக்கு சற்றே அப்பால்... விலா எலும்பின் உள்ளே....

சிலிர்த்தது.

எழுபது வருடங்களாய் சுருங்கி, விரிந்து, சுருங்கி, விரிந்து... கடவுளே! என்ன படைப்பு இது.

இப்படி எழுபது வருடங்களாய் சுருங்கி விரித்ததில் அது வெறுத்துப் போய் விட்டதா? 'என்னால் முடியவில்லை'

ஷ்ருதி பாலஸரஸ்வதி

என்கிறதா? 'போதும் இந்த பம்ப் செய்யும் வாழ்க்கை' என்று சலித்துக் கொள்கிறதா?

என் இதயம் இப்படி தன் வேலையில் மக்கர் செய்ய என் உடல் முழுவதும் தத்தளிக்கிறதே. என்ன கஷ்டம் இது. ஒழுங்காய் வேலையும் செய்யாமல், பட்டென்று நின்றும் போகாமல்...

நான் இன்னும் ஈஸிசேரில் மார்பைக் கையில் பிடித்தபடி படுத்துக் கிடந்தேன். வாசலில் ஏதோ அரவம் கேட்க நிமிர்ந்தேன்.

மூர்த்தி சிரிப்பாய் உள்ளே வருவது தெரிந்தது. "அப்பா, நம்ப ரேவதிக்கு பையன் பொறந்திருக்கு" என்று கத்தினான்.

உலகத்தையே ஜெயித்தது போல அவன் கத்தியது எனக்குக் கோடி வீட்டில் மாடு கன்னு போட்டது என்றாற்போல தோன்றியது.

நான் ஒன்றும் பேசவில்லை. என் அமைதி மூர்த்திக்கு சற்றே ஏமாற்றமாய் இருந்தது.

"என்னப்பா ஒண்ணும் பேச மாட்டேன் கறீங்க?" என்றான்.

"ரொம்ப சந்தோஷம்" என்றேன் கஷ்டப் பட்டு.

"சரி. கிளம்புங்க. சாரதா ஹாஸ்பிட்ல்ல இருக்கா. இன்னிக்கு நமக்கு ஹோட்டல் சாப்பாடுதான். சாப்பிட்டுட்டு குழந்தையை போய்ப் பார்க்கலாம்."

எனக்கும் மார்பு வலி குறைந்திருந்தது. எங்கேயாவது வெளியில் போனால் தேவலாம் போலிருந்தது. எழுந்து கிளம்ப ஆரம்பித்தேன்.

ஹாஸ்பிடல் போய்க் குழந்தையைப் பார்க்கையில் மீண்டும் படைப்பின் மகத்துவம் தெரிந்தது. எவ்வளவு சிறிய குழந்தை. இதுதான் பின்னால் பெரிய மனிதனாய் ஆகிறது.

நானும் ஒரு காலத்தில் இப்படித்தான் பிறந்திருப்பேன். நான் பிறந்த விஷயம், "செல்லம்மாவுக்கு பையன் பொறந்திருக்கான்" என்று நியூஸாய்ப் பறந்திருக்கும். என்னையும் யார், யாரோ வந்து பார்த்திருப்பார்கள். சர்க்கரையை வாயில் தோய்த்திருப்பார்கள். காசைக் கையில் வைத்து அழுத்தியிருப்பார்கள். நான் ஒன்றும் புரியாமல் அம்மணமாய்ப் படுத்துக் கிடந்திருப்பேன்.

நிதானமாய்க் குழந்தையைப் பார்த்தேன். அதன் சின்ன உடலில் ஒரு சின்ன இதயம் இப்போது துடித்துக் கொண்டிருக்கும். அது இனி இந்தக் குழந்தை சாகும் வரை ஓய்வே இல்லாமல் சுருங்கியும் விரிந்தும் இரத்தத்தைப் பம்ப் செய்து கொண்டிருக்கும்.

இந்தக் குழந்தை வளர்ந்து பெரியவனாகும்; ஸ்கூலுக்குப் போகும்; படித்துப் பட்டம் பெறும்; வேலைக்குப் போகும்; கல்யாணம் செய்து கொள்ளும்; காதல் செய்யும்; குழந்தைகளுக்கு அப்பா ஆகும்; அவற்றைக் காப்பதற்காக அங்கும், இங்குமாய் ஓடும்.

இடையில் அரசியல் பேசும்; கிரிக்கெட் விளையாடும்; டீ.வி. பார்க்கும்; எகனாமிக்ஸ் படிக்கும்; கவிதை எழுதும்.

தப்பு செய்யும்; நியாயம் பேசும்; யாராவது புகழ்ந்தால் மகிழும்; கேலி செய்தால் கோபப்படும்; சிரிக்கும்; அழும்; கடைசியில் ஒருநாள் என்னைப் போல நெஞ்சைப் பிடித்துக் கொண்டு உட்காரும்.

புரிந்தது. இதுதான் வாழ்க்கை.

இதைத்தான் இத்தனை கோடி ஜனங்களும் செய்கிறார்கள். இதைத்தான் இத்தனை காலமாய் செய்து வந்திருக்கிறார்கள். இத்தனை பேர் செய்யும்போதிலும் ஒவ்வொருவருக்கும் ஏதோ தான் மட்டும்தான் வாழ்வது போல ஒரு நினைப்பு. ஒரு அலட்டல்.

எனக்கும்தான்.

குழந்தையைப் பார்த்தேன். இது இன்னொரு ஜனனம். இது இன்னொரு வாழ்க்கை. அவ்வளவுதான். இதைப் போல ஆயிரம்; லட்சம்; கோடி; கோடானுகோடி.

எனக்குச் சிரிப்பு வந்தது.

நான் சிரிப்பதைப் பார்த்துவிட்டு மூர்த்தி சாரதாவிடம், "பாத்தியா அப்பாவை? நான் முதல்ல சொன்னப்ப ஒரு ரியாக்‌ஷனே இல்லை. இப்ப குழந்தையைப் பார்த்தவுடனே அப்பாக்கு சந்தோஷம் தாங்கலை. என்ன இருந்தாலும் பொண்ணு வழி பேரன் இல்லியா?" என்றான்.

முட்டாள்.

மனிதர்கள்தான் எத்தனை கோணங்களில் சிந்திக்கிறார்கள். அவனைப் பார்க்கையில் எனக்கு இன்னமும் சிரிப்புதான் வந்தது. வாய் விட்டுச் சிரித்தேன்.

---

வில்வ மரத்தின் கிளை, இலை, பழம், வேர் எல்லாமே மருத்துவக் குணம் மிகுந்ததாகும். சிலர் உடம்பு வியர்வை நாற்றமடிக்கும். அப்படிப்பட்டவர்கள், வில்வத்தை அரைத்து, சாறெடுத்து சிறிதளவு உடம்பெங்கும் பூசினால் ஒரு வாரம் வரை உடம்பில் வியர்வை நாற்றம் வீசாது.

– சி. கௌதமி



# கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு..!



**டாக்டர். ஜெயம் கண்ணன்**

குழந்தை பிறந்தவுடன் முதல் கேள்வி "என்ன குழந்தை டாக்டர்" அடுத்த கேள்வி "குழந்தை நார்மலாக இருக்கிறதா டாக்டர்" மூன்றாவது கேள்வி தான் "தாய் சௌக்கியமா?" இவை மூன்றையும் கடந்த முப்பது ஆண்டுகளாக தொடர்ந்து மக்கள் கேட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். பதிலை மருத்துவர்கள் சொல்லிக் கொண்டேயிருக்கிறோம். கேள்விகளின் வரிசையில் மாற்றமேயில்லை.

ஆனால் ஒரு குழந்தை கிடைக்காதா என்று ஏங்கித் தவமிருந்து, அற்புதமாகக் கிடைத்த குழந்தைக்குப் பெற்றோராகும் போது இந்த வரிசையில் சில சமயம் மாற்றம் காணப்படுகிறது. குழந்தை நார்மலாக இருக்கிறதா என்ற கேள்வி முதலில் வருகிறது. இதற்குக் காரணங்கள் பலப்பல.

இயற்கையை மீறி, செயற்கை முறையில் குழந்தை உருவாகியுள்ளதே. தவறு எதுவும் ஏற்பட்டு குழந்தைக்குக் குறை ஏற்படுமோ என்ற பயம் எல்லோருக்கும் ஏற்படுகிறது.

'வயதாகி குழந்தை பெறுகிறோமே, பல பத்திரிகைகளும், டாக்டர்களும் பயமுறுத்தியுள்ளார்களே, அதைப் போல ஏதேனும் நிகழ்ந்து விடுமோ? குழந்தைக்குக் குறை ஏற்படுமோ?' என்ற பயம்.

'லண்டனில் இருந்து அத்தைப் பெண் போட்ட லெட்டரில் "DOWN SYNDROME" ஸ்கிரீனிங் செய்து விட்டாயா? என்று கேட்டுள்ளாரே அப்படி என்றால் என்ன என்று பார்த்து விடவேண்டுமே' என்ற ஆதங்கம்.

ஸ்கேனிங் செய்த டாக்டர் ரிப்போர்ட்டில் கடைசி வரியாக எழுதப்பட்டுள்ள வாசகம் சமயத்தில் பயமுறுத்தலாம். "இந்த ஸ்கேன் முறையில் எல்லா பிறவிக் குறைபாடுகளையும் கண்டுபிடிக்க முடியாது. தேவையானால் மற்ற பரிசோதனைகளையும் செய்ய உங்கள் மகப்பேறு மருத்துவரைக் கலந்து ஆலோசியுங்கள்."

ஸ்கேன் முறையில் குழந்தையின் வளர்ச்சி பிறவிக் குறைபாடுகள் பார்ப்பது பற்றி எல்லோரும் நன்றாகத் தெரிந்து வைத்துள்ளனர். மற்ற முறைகள் என்ன என்பதுதான் பலரின் கேள்வி.

அவை:

1) தாயின் இரத்தப் பரிசோதனை (MATERNAL BLOOD SAMPLING)

2) குழந்தையின் இரத்தப் பரிசோதனை(FETAL BLOOD SAMPLING)

3 பனி நீர்ப் பரிசோதனை (AMNIOCENTESIS)

4. நஞ்சு திசுப் பரிசோதனை (CHORION VILLUS SAMPLING)

5. குழந்தை உள்நோக்கிப் பரிசோதனை(FETOSCOPY)

இந்த டெஸ்ட்களை செய்வதற்கு முன் எல்லோருக்கும் பயம் ஏற்படுகிறது. இந்த டெஸ்ட்கள் செய்வதால் குழந்தை பாதிக்கப்படுமா? கட்டாயம் செய்யத்தான் வேண்டுமா? செய்யாமல் விட்டு விட்டால் பிறகு ஊனமுள்ள குழந்தை பிறந்தால் எப்படி வளர்ப்பது என்ற பயமும் ஏற்படுகிறது.

டெஸ்ட் செய்வதால் குழந்தை பாதிக்கப்படுமோ! என்ற கேள்விக்கு பதிலைப் பார்ப்போம்.

| செய்யும் பரிசோதனையின் பெயர் | குழந்தையின் பாதிப்பு |
|---|---|
| 1) ஸ்கேனர் | - இல்லை |
| 2) தாயின் இரத்தடெஸ்ட் | - இல்லை |
| 3) குழந்தையின் இரத்த டெஸ்ட் | - 1.9% |
| 4) பனிநீர்ப் பரிசோதனை | - 0.5% |
| 5) நஞ்சு திசுப் பரிசோதனை | - 1.5% |
| 6) உள்நோக்கிப் பரிசோதனை | - 5.0% |



ஃப்ரிஜ் இல்லாதவர்கள் கீரை, கொத்து மல்லி போன்றவைகள் மறுநாள் வரை புத்தம் புதியதாக காட்சியளிக்க – கீரையை நன்கு ஆய்ந்து, அலசி, ஒரு பாத்திரத்தில் கீரைகளைப் போட்டு, பாத்திரத்தை தலைகீழாக கவிழ்த்து விடுங்கள். பாத்திரத்தின் வாயை ஒரு மெல்லிய துணியால் மூடியும் கவிழ்க்கலாம். மறுநாள் பார்த்தால் அன்றுதான் வாங்கியது போல புதியதாக இருக்கும்.

– விஜயராணி

ஏற்கெனவே ஒரு குழந்தை ஊனம் உள்ளதாக பிறந்தவர்களுக்கு இந்த சதவிகிதம் அரை மடங்கு மட்டுமே கூடுகிறது.

எனவே இந்தப் பரிசோதனைகளைத் தைரியமாக ஏற்றுக் கொள்ளலாமல்லவா?

டெஸ்ட்டுகளை யார், யார் செய்து கொள்ள வேண்டும்?

1) 35 வயதிற்கு மேல் கர்ப்பமுற்ற பெண்கள்

2) ஏற்கெனவே ஊனமுற்ற குழந்தை பிறந்து இருந்தால்

3) க்ரோமசம் பரிசோதனையில் தம்பதியருக்குக் குறை கண்டு பிடிக்கப்பட்டு இருந்தால்

4) ஸ்கானரில் ஊனம் தெரியும் போது.

5) பாம் பனாமில் திருமணம் செய்தவர்கள்.

தாயின் வயது 35க்கும் மேல் என்றால் எந்த விகிதத்தில் பாதிக்கப்படலாம்?

| தாயின் வயது | DOWN SYNDROME | மற்ற பாதிப்புகள் |
|---|---|---|
| 20 | 1:1667 | 1:526 |
| 30 | 1:952 | 1:384 |
| 35 | 1:385 | 1:204 |
| 40 | 1:106 | 1:65 |
| 45 | 1:30 | 1:20 |
| 49 | 1:11 | 1:7 |

மேற்கூறிய எல்லா பரிசோதனைகளையும் ஒரு டாக்டர் மட்டுமே செய்ய தகுதி பெற்றவராக மாட்டார். இதற்காக ஒரு மருத்துவ நிபுணர்கள் கொண்ட குழுவே தேவைப்படுகிறது.

இந்தக் குழுவில் மகப் பேறு மருத்துவர், பிறந்த குழந்தை நல மருத்துவர் (NEONATOLOGIST) ஸ்கேன் நிபுணர் (ULTRA SONOGRAPHER)மரபணு நிபுணர்(GENETIST) குடும்ப மருத்துவர், எல்லோரும் சேர்ந்து தான் எந்த முடிவையும் எடுக்க வேண்டும். தேவையான அறிவுரைகளையும் இந்தக் குழு கலந்தாலோசித்துத் தருகிறது.

தற்போது தமிழக அரசும் "GENETIC TEST" செய்யும் மருத்துவமனைகளைப் பதிவு செய்ய உத்தரவிட்டுள்ளது. இதன் மூலம் சரியான கருவிகளைக் கொண்டு தகுந்த நிபுணர்கள் மூலம் பரிசோதனைகள் செய்யப் படுவது கண்காணிக்கப்படுகிறது.

இதுவரை குழந்தையின் நலன் பற்றிச் சொன்னது எல்லாம் கருவைச் சுமக்கும் பெண்ணைப் பற்றியே உள்ளதே. ஆணிற்கு எந்த விதப் பங்கும் கிடையாதா? அப்படி என்றால் ஏன் நமது சமுதாயத்தில் "கோத்திரம்" என்பது ஆணைச் சார்ந்து உள்ளது? ஏக கோத்திரத்தில் திருமணம் செய்யாதே என்று ஏன்


அருணாசலேஸ்வரர்

# தீபத் திருநகர் திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமி கிரிவலத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்...


ஸ்ரீ உண்ணாமுலையம்மை

அடிமுடி காண முடியாத ஜோதி மலையான திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமியன்று லட்சோப லட்ச மக்கள் கூடி கிரிவலம் வருவது நாம் அறிந்ததே.

ஆன்மீகத்தில் நாட்டங்கொண்ட பலர் தான மனமிருந்தும் பணம் இல்லாத காரணத்தால், புண்ணியம் தரும் தேவரகசியமான அன்னதான பெருமையை தெரிந்திருந்தும், செய்ய வழியறியாத இல்லறவாசிகளுக்கு ஓர் அரிய வாய்ப்பு ஏற்படுத்தியுள்ளோம்.

இலட்சியங்களை நிறைவேற்ற லட்சங்கள் தேவையில்லை அன்னதானமே அஷ்ட தரித்திரத்தைப் போக்கி அஷ்ட ஐஸ்வர்யங்களைத் தரவல்லது!

**மாதாமாதம் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்ய "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை"யில் நீங்களும் பங்கு கொள்ளுங்கள்.**

ஆன்மீக அன்னதான திருப்பணியில் தாங்களும் பங்கேற்று ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மை அருளை பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

ஆன்மீக அன்னதான அறக்கட்டளை மூலம் உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள், ஆதரவற்ற முதியோர்கள் - விதவைகள் - ஏழைகள் என அனைவருக்கும் அன்னதானம் செய்ய, தாங்கள் இப்புனித பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடை செய்ய அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

அன்னதானத்திற்கு என்ன சிறப்பு என்றால் இதில்தான் ஒருவரை முழுமையாக திருப்திப்படுத்த முடியும். தானம் செய்யும்போது ஆர்வத்தோடு மனமுவந்து முக மலர்ச்சியுடன் சர்வ சந்தோஷமாக செய்யும் தானத்தில்தான் முழுமையான பலன் கிடைக்கிறது.

தாங்கள் கீழ்க்கண்ட எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகின்றீர்கள் என்பதை எங்களுக்கு தெரிவித்தால் அதன்படி தாங்கள் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மை படத்தை தங்களுக்கு அனுப்பி வைக்கின்றோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் வளம்பெற ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு/மனை பெற ❖ கணவன்-மனைவி வாழ்வில் சுகம் பெற ❖ பிள்ளைகள் படிப்பில் நன்கு கவனம் செலுத்தி முன்னேற ❖ பிள்ளை பாக்கியம் பெற ❖ கல்யாண பாக்கியம் பெற ❖ நோயிலிருந்து சுகம் பெற ❖ மன அமைதி பெற

- நன்கொடைகள் அவரவர் சக்திக்கு ஏற்ப கொடுக்கலாம். நன்கொடைகள் பணமாகவோ, அல்லது பொருளாகவோ, அதாவது அரிசி, நெய், பருப்பு வகைகள், எண்ணெய், எள், புளி, என்று எந்த பொருளாகவும் கொடுக்கலாம்.
- பணம் அனுப்புபவர்கள் ஆன்மீக அன்னதான அறக்கட்டளை (Aanmeeka Annadhana Charitable Trust) என்ற பெயரில் Cheque / D.D / M.O. மூலம் அனுப்பி வைக்கலாம். உடனடியாக தங்களுக்கு Receipt அனுப்பி வைக்கப்படும்.
- பொருள்கள் அனுப்புவோர் TVS / ABT மூலமாக திருவல்லிக்கேணி, சென்னை-5க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்வோம்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடம் ஏற்றுக் கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பப்படும்.
- ரூ.1000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்களுக்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.2000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் நான்கு ஆண்டு இலவசமாக அனுப்பப்படும்.

ௐ ஆன்மீக அன்பர்கள் ஒரேமுறை (One Time) நன்கொடையாக ரூ. 5,000 செலுத்தினால், இந்தத் தொகையை "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" என்ற பெயரில் வங்கியில் (Fixed Deposit) நிரந்தர வைப்பு செய்து அதில் வரும் வட்டித் தொகையில், மாதாமாதம் பௌர்ணமி அன்று தங்கள் சார்பாக அன்னதானம் செய்து அருணாசலேஸ்வரரின் திருவருளைப் பெற வேண்டுகிறோம். (Life Time) ஆயுட்காலம் முழுவதும் 'ஆன்மீகம்' மாத இதழும், பிரசாதமும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம். **நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**

ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகள் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டாகும் - ஸ்வாமி விவேகானந்தா



*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

## AANMEEGA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)

31/1, நடுத்தெரு, கபாலீஸ்வரர் கோயில் எதிரில், மயிலாப்பூர், சென்னை-600 004. போன் : 4958086

சொல்லுகிறார்கள்?

மரபணு பரிசோதனையில் "க்ரோமசம்", "ஜீன்" என்ற இரண்டு முக்கிய பிரிவுகளைப் பற்றிக் கூறியுள்ளேன். இவற்றில் பெண்ணிற்குக் க்ரோமசம் குறைகளும் ஆணிற்கு ஜீன் குறைகளும் வயது ஏற ஏற அதிகமாகின்றன. பெண்ணின் குறைகள் ஆரம்ப நிலையிலேயே தெரிந்து விட வாய்ப்புகள் அதிகம்.

ஆனால் ஜீன் குறைகள் எல்லாம் பிறந்தவுடன் தெரிவதில்லை.




AZF ஆண் விந்து தன்மையை நிர்ணயிக்கும் ஜீன்.




சமீபத்தில் முக்கிய கண்டுபிடிப்பு ஒன்றைப் பார்ப்போம்.

குழந்தையில்லாதவர்களை பரிசோதிக்கும் பொழுது ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மூன்று சகோதரர்களுக்கும் குழந்தையில்லை என்பதனை 1970 முதலே பார்க்கிறேன். இதற்கு நிச்சயம் ஜீன்தான் காரணம் என்று புரிந்து இருந்தாலும் நிரூபிக்கப்பட முடிந்தது 1995ல்தான். GENE MAPPING தொடங்கிய பிறகு 'Y' க்ரோமசம்மில் ஏற்படும் ஜீன் விடுப்புகள் (DELETIONS) கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இதனால் தற்போது இக்சி முறையில் குறையுள்ள ஆணுக்குத் தந்தையாகும் வாய்ப்பு ஏற்படுத்து முன் ஜீன் பரிசோதனை செய்ய வேண்டும் என்ற நிலை உருவாகியுள்ளது. இந்த "SEX CHROMOSOME" ஜீன் விடுப்பு பெண்ணை பாதிப்பது வெகு குறைவு. ஏனென்றால் பெண்ணிற்கு இரண்டு 'X' உள்ளன. ஒன்றில் குறையிருந்தால் மற்றொன்று நிலைமையை சமாளித்து விடுகிறது. ஆணிற்கு ஒரே 'Y' இருப்பதால் குறை தொடர்கிறது. (பார்க்க படம்)










தற்போது புரிகிறதா? கோத்திரம் ஏன் ஆண் வழி வருகிறது என்று??

# நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம்

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, புகழ், யாவும் கிட்டும் வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர், பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும் கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும் அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வு காண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன் தொழில் வசியம் சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்பூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் என் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் 24 மணி நேரத்திற்குள் அதிர்ஷ்டம் உண்டாகும்.

அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல கணவர்) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு. கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை. செக்ஸ் கோளாறு. மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல்.

செய்வினை மாந்திரீக பாதிப்பு தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோரும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



VIJAY(விஜய்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அந்தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால்தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஜாதகம், கைரேகை, நாடி ஜோதிடம், வாஸ்து ஜோதிடம் போன்ற ஜோதிடத்தில் சொல்லும் குறைகளைப்பற்றி அணுவளவும் பயப்படத் தேவையில்லை. இவைகளைவிட அதிர்ஷ்டப் பெயர் எண் ஜோதிடம் பல ஆயிரம் கோடி மடங்கு சக்தி வாய்ந்தது. என்னால் சவால் விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
**நியூமராலஜி–நேமாலஜி–சைன்–தொழில் வசியம்**



எம்.ஜி.ஆர்., சிவாஜிகணேசன், ரஜினிகாந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜசோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், செல்வேல் சேரன், ஆதிசங்கர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்–பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத்தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**
கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,
நல்லாந்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்),
புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.
கோவை மாவட்டம். போன்: (04254) 87258
ஃபேக்ஸ்: 0425463071
விடுமுறை: செவ்வாய், வியாழன்

ஒவ்வொரு மாதமும் 2,3-ந் தேதிகளில் மட்டும்
குருபிரகாஷ் ஹோட்டல் (கீதாஞ்சலி) 71 ஏ, உஸ்மான் ரோடு,
தி.நகர் சென்னை – 17. போன்: 4321414

**அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம் தொழில் வசியம்.**



இந்திய அரசின்
பெண் தொழில் முனைவோருக்கான கடன்
வசதிகளைப் பெற ஒரு அரிய வாய்ப்பு




# LOYOLA INSTITUTE OF VOCATIONAL EDUCATION
# LOYOLA COLLEGE, CHENNAI

in collaboration with

## Academy for Career and Vocational Education & Training

## மகளிருக்காகவே நடத்தப்படும் பயிற்சிகள்

### Certificate Course in Cosmetology / Beautician

Batch timings 10 am to 1pm (or) 2 pm to 5 pm (3 days a week)

கல்வித் தகுதி : 10th Std    பயிற்சிகாலம் : 3 Months    கட்டணம் : Rs.4,500

### PG Diploma / Diploma in Fashion Designing (PGDFD)

Batch timings 2 pm to 4 pm (or) 6 pm to 8 pm (3 days a week)

கல்வித் தகுதி : +2 & above    பயிற்சிகாலம் : 1 Year    கட்டணம் : Rs.8,500

பயிற்சிக்குப்பின் வேலை வாய்ப்பில் உதவி. பொருட்கள் வாங்குவதிலிருந்து எழிலகம் தொடங்குவது வரை தொழில் நுட்பம், திட்ட அறிக்கை தயாரிப்பு மற்றும் ஆலோசனை. பயிற்சி பற்றிய முழு விவரம் மற்றும் விண்ணப்பத்தை ரூபாய் 6 தபால் தலை ஒட்டிய உங்கள் விலாசமிட்ட உறையை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பியோ / நேரிலோ பெறலாம்.

Contact: Rev.Fr.S.M. Felix, S.J., Director,
LIVE Office, Loyola College, Chennai - 34. Ph: 8276894 Extn.317
(OR) ACVET, 50, Habibulla Road, T.Nagar, Chennai-17. Ph: 8280127 / 8238597.

Admission on First come First served basis for above & other courses

**Next Batch Commencing on 20.09.99**

சென்னை தி. நகரில்




# கிரைண்டர்களின் சூப்பர் மார்க்கெட்




- aUE கிரைண்டர் மோட்டார் பொருத்தப்பட்டுள்ளது
- அனைத்து கம்பெனி கிரைண்டர்களும் சர்வீஸ் செய்து தரப்படும்
- 110V மோட்டார் பொருத்திய கிரைண்டர்களும் கிடைக்கும்

கோவையில் 20 வருட பாரம்பரியம் மிக்க நிறுவனம்



Devie Grinder
- SUN MICA
- SS BODY
- TILTING



ULTRA GRIND+




OPAL
TABLE TOP GRINDER



## தேவி அன் கோ.,

170, 3 & 4, வடக்கு உஸ்மான் ரோடு,
தி.நகர் சென்னை - 600 017. போன்: 825 1444.

